உ

வேமன்ன யோகீஸ்வரர்

அருளிச்செய்த

# வேமன்ன பத்தியம்

(1000 பிரம்ம வித்தியா சுலோகங்கள்)

மூலமும் — உரையும்

மூன்றும் பதிப்பு



சென்னை—ஜூனே,

எஸ். துரைசாமி முதலியார் அவர்களால்

தமது

ஸ்ரீ "பாரதி" அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

1932



[விலை ரூபா 1 4 0

# முகவுரை

வேதாந்தத்தின் தத்துவப் பொருளை யுணர்த்தும் பல பண்டைய நூற்களில் மிகச் சிறந்ததாகிய இந்தக்கிரந்தம் தெலுங்கு பாஷையிலிருப்பதால் அப்பாஷையறியாத நண்பர்கள் அதனையறியக்கூடாத தன்மையிலிருப்பதால் அக்கவிகளைத் தமிழில் பொழிப்புரையுடன் யாவருக்கும் நன்றாய் விளங்குமாறு அச்சிடப்பட்டிருக்கிறது.

1875ம் வருடத்தில் மகா கனம் பொருந்திய சென்னை சிவில் ஸர்வீஸ் சார்லேஸ் பிலிப் ப்ரௌன் துரை அவர்களால் சுமார் 700 பாடல்களுக்கு இங்கிலீஷ் உரையுடன் அச்சிட்ட புத்தகத்தைக் கொண்டு மற்றப் பாடல்களையும் சேர்த்துப் புதுவை நாராயணதாசர் அவர்களால் எழுதிய உரையுடன் இப்பதிப்பில் அநேக சீர்திருத்தங்கள் செய்து சுத்தமாய் வெளியாக்கப்பட்டிருக்கிறது.

S. D. M.

# அட்டவணை

# அட்டவணை

# அறிவிப்பு.

வேமன்ன யோகிகள் அருளிச்செய்த வேதாந்த இரகசியங்களடங்கிய இவ்வரிய நூலில் 1000-பாடல்களை மாத்திரம் இப்போது உரையுடன் அச்சிட்டு வெளியாக்கியிருக்கின்றோம். இன்னும் அவர் அருளியிருக்கும் மற்றப் பாடல்களையும் அதிக விரிவான தெள்ளிய உரையுடன் இரண்டாம் பாகத்தில் அச்சிட்டு அதிக சீக்கிரத்தில் வெளிவரும். முதல்பாகத்தைவிட இரண்டாம்பாகத்தில் பல அரிய விஷயங்களைச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

S. D. M.

ஓம்.

பரப்பிரம்மணே நம:

# வேமன்ன யோகீஸ்வரர்

# சரித்திரச் சுருக்கம்

புண்ணியபூமியாகிய இப்பரதகண்டத்தில் தக்ஷிண திசையில் பந்தர்நகரத்தைச்சார்ந்துள்ள கொண்டேடு துர்க்கமென்னும்பர் வதத்துக்கு முன்னொருகால் அரசனாயிருந்த அன்னவேமாரெட்டி என்பவருக்கு வெர்ரி வேமன்னா ரெட்டி யென்னும் ஒரு சகோ தரரிருந்தார். அவர் தம்பிச்சைசைப்போல் ஒரு தாசியின் மையலிற் சிக்கி, அரசனாகிய அன்னவேமா ரெட்டியின் மனைவியைவேண்டி அவள் மூலமாய் அரண்மனையிலுள்ள, ஆபரணங்களை யெல்லாங் கொண்டு போய் அத்தாசிக்குக் கொடுத்து வந்தார். அவள் ஒரு நாள் வேமன்னாவை நோக்கி "ஓ வேமன்னா! நீ உன் அண்ணியார் மூக்கிலணிந்திருக்கும் மூக்குத்தியை இன்று கொண்டு வந்து கொடுத்தால் என்னை யணைந்து சிற்றின்ப சுகத்தை யனுபவிக்கலாம் இல்லையானால் இனி என் வீட்டிற்குள் நுழையவேகூடாது" என்று துரத்தினாள். வேமன்னாவோ தன்னாலானவரையில் அவளுக்குச் சமாதானஞ்சொல்லியும் அவள் கேளாமையால் உடனே இராஜ அரண்மனைக்குவந்து, தன்படுக்கையறைக்குள் நுழைந்து அன்னம் புசிக்காமல் நிறைய முக்காடிட்டுப் படுத்துக்கொண்டு, அண்ணியாருடைய மூக்குத்தி எப்படிக் கிடைக்குமென்று மனவியாகூலமாயிருந்தார். அந்தச் சமையம் அவரது அண்ணியார், "ஏனின்னம் வேமன்னா அமுதுண்ண வரவில்லை" யென்று ஆட்களைத் தாசி வீட்டுக்கனுப்பி அவரை அழைத்துவரச் சொன்னாள். அவர்களும் தாசி வீட்டிற்குள் நுழைந்து பார்த்து எங்குங்காணாமல் அரண்மனைக்கு வந்து, வேமன்னா படுத்திருக்கும் அலங்கோலத்தைக்கண்டு அரசியிடம் தெரியச்சொன்னார்கள். உடனே அரசி நேரில்வந்து அவரிருப்பைப் பார்த்துத் தட்டியெழுப்பியும் அவர் பேசாமல் மௌனமாயிருக்க, ஏதோ மனவியாகூலமா

யிருக்கின்றாளென்றுணர்ந்து, அவளை ஆதியிலிருந்து பாலனைப் போற் காப்பாற்றியவளாதலால் மனநொந்தவளாய், "அப்பா மகனே! நீ எதற்காக மனவியாகூலமடைந்திருக்கின்றாய்? என்னாலாகுமானால் அக்காரியத்தை உடனே முடிக்கின்றேன். நீ முன்னமெழுந்து அமுதுண்ணவா" வென்று வருந்தியழைத்தாள். அவ்வார்த்தையைக் கேட்ட வேமன்னு இதுதான் சமயமென்று "தாயே உன் மூக்குத்தியைக் கொடுத்தால் அன்னம் புசிக்கின்றேன். இல்லாவிட்டால் புசிக்கமாட்டேன். எனதருமைக் கண்மணியாகிய அந்தத் தாசி, உன்னுடைய மூக்குத்தியைக் கொண்டு வராவிட்டால் இன்று முதல் என்னை அவள் வீட்டிற்கு வரவேண்டாமென்று சொல்லிவிட்டாள். அவள் சொல்லிய முதல் இதுவரையில் ஒரு நாழிகையை ஒரு யுகமாகக் கழிக்கின்றேன். ஆதலால் உன் மூக்குத்தியை முன்னங்கொடுத்தால் அவளுக்குக் கொடுத்துச் சுகித்திருப்பேன். இல்லையானால் இப்போதே என்னுயிரை விடுகிறேன்" என்று சொல்லினர்.

அரசி அதைக்கேட்டு என் அருமைப் புதல்வா! உன்னிஷ்டப்படியே என் மூக்குத்தியைக் கொடுக்கின்றேன். ஆனால் நானுன்னை வேண்டும் வரமொன்றுளது. அதாவது, நீ இந்த மூக்குத்தியைக் கொண்டுபோய், அத்தாசியை நிர்வாணமாக வரச் சொல்லி, அவளது இரண்டு கால்களையும் பரப்பி நிற்கச்செய்து நீ பின்னாலிருந்து அவ்விரண்டு கால்களின் மத்தியில் நீ இந்த மூக்குத்தியைக் கொடுக்க அவள் குனிந்து இரண்டு கைகளாலும் அதை வாங்கிக்கொள்ளச் செய்ய வேண்டியது" என்று தன் மூக்கிலிருந்த மூக்குத்தியைக் கழற்றிக் கொடுத்தனுப்பினாள். வேமன்னுவும் தன் அன்னையார் வேண்டிய வரத்தின்படியே தாசியின் பின்னாலிருந்து அம்மூக்குத்தியைக் கொடுக்க அவள் நாணமின்றித் தன்னிருகைகளாலும் வாங்கிக் கொண்டாள். வேமன்னு மதனலீலாவினோதனாகையால் அப்போது அவளுடைய அந்தரங்க ஸ்தானத்தைப் பார்த்து, ஆமொடுகளுக்கிருக்கின்றதைப்போலிருக்கிறதேயென்று அதனிடம் வெறுப்புற்று அவ்விடத்தைவிட்டு ஓடோடியும் வந்து தன் அன்னையாரின்

பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்து "என் தாயே! உன்னால் நான் ஈடேறினேன். நீயே என் சற்குரு" என்று பலவாறாய்த் தோத்திரஞ் செய்து அன்று முதல் வீடுவாசலை விட்டுக் குப்பை மேடுகளிலும், தெருத் திண்ணைகளிலும் புரண்டு தெருத் தெருவாய்த் திரிந்து கொண்டிருந்தார்.

இப்படியிருக்க அவர் ஒரு நாள் திடீரென ஓடோடியும் போய்த் தன் அண்ணியாரின் ஸ்தனத்தின்மீது இரத்தம் வரக் கீறிப்போய்விட்டார். அவ்வேடிக்கையைப் பார்த்தவர்களெல்லாம் அவரைப் பித்தம் பிடித்தவரென்று தூஷித்தார்கள். கண்ட அண்ணியார் மாத்திரம் அவர் ஏதோ ஒரு காரியத்திற்காகத்தான் இப்படிச்செய்திருப்பாரென்று தன் கணவனுக்கும் மற்றவர்களுக்குஞ் சமாதானங்கூறினாள். மூன்றாம் நாள் அவ்வுத்தமி ஜலந்திரட்டப் போகும் வழியில் பாம்புதீண்டி மூர்ச்சையாகிக் கீழே வீழ்ந்திருந்தாள். அங்கிருந்தவர்களெல்லாம் கண்ணீர் விட்டழுதார்கள். இதற்குள் விஷமெல்லாம் வேமன்னு கீறின காயத்தின் வழியாக வந்து விட்டது. மூர்ச்சையாய்க் கீழே வீழ்ந்து கிடந்த மாதரசியும் தூங்கியெழுந்தவளைப் போலெழுந்து வேமன்னு கீறின காயத்தின் வழியாக விஷம் வெளிப்படுவதைக் கண்ணீர் விட்டழுதவர்களுக்கெல்லாங் காட்டி அவர் மகிமையைக் கொண்டாடினாள்.

சிலநாள் சென்ற பிறகு வேமன்னு தன் மகிமையைத் தன் தமையனும் மற்றவர்களும் அறியுமாறு தன் தமையனிடத்தே ஒரு காணி நிலத்தை வாங்கி, எல்லாரும் தானிய வகையராக்களைப் பயிரிட்டால் இவர் ஆட்டுத் தும்மட்டிங்காயைப் பயிர் செய்தார். இச்சங்கதியைக் கேள்விப்பட்ட அன்னவேமாரெட்டி தன் மனைவியை யழைத்து "நங்காய் உன் மைத்துனன் ஆட்டுத் தும்மட்டங்காயைப் பயிர் செய்கிறான். நீயுமவனும் அதைத் தின்று ஜீவனஞ்செய்யுங்கள்" என்று பரிகாசஞ் செய்தார். அதற்கந்த வுத்தமி "அவர் செய்கையைத் தாங்கள் பரிகாசஞ் செய்வதடாது. அவரோ மகாநுபாவர். வீண் காரியத்திற் பிரவேசிக்க மாட்டார்" என்று கூறினாள்.

வேமன்னா தும்மட்டங்காய் பயிரானவுடன் வழிப்போக்கியாகிய ஒரு கிழவியை யழைத்து, கூலிக்குக் காய்களை அறுக்கச் சொல்லி ஒருநாள் முழுதும் அறுத்தான பிறகு கூலிக்குப் பதிலாய் ஒரு காயைக் கொடுத்தனுப்பினார். அக்கிழவி அதை வாங்கிக்கொண்டு பதிலொன்றும் பேசாமல் வயிறெரிந்தவளாய் தன் வீட்டுக்குச் சென்றாள். அவளது பிள்ளைகள் அவள் கொண்டுவந்த காயின் விருத்தாந்தத்தைக் கேட்டு வேமன்னாவைத் தூஷித்தபடியே அக்காயைப் பூமியில் மோதி யடித்தார்கள். அது சுக்கற்சுக்கலாகி அதிலிருந்த விதைகளெல்லாம் பொன்மயமாய்ப் பிரகாசித்தன. அவ்விதைகளை அவர் கண்டமாத்திரத்தில் வேமன்னாவைப் புகழ்ந்து, அவ்வீட்டிலுள்ள எல்லாரும் மறுநாட்காலையில் அவரிடத்திற்குப் போய் வேலை செய்து ஆளொன்றுக்கு நான்கு காய்கள் வீதம் திருடிவைத்துக்கொண்டு கூலிக்காக வேமன்னா திருக்கரத்தால் கொடுக்கும் ஒவ்வொரு காயையும் பெற்றுக்கொண்டு வீட்டிற்கு வந்து திருடின காய்களை யுடைத்துப்பார்க்க அவைகளில் அக்காயின் விதைகளே யிருக்கக்கண்டு வெட்கமடைந்தவர்களாய் வேமன்னா கொடுத்த காயை யுடைத்து அதில் மாத்திரம் பொன் விதைகளிருக்கக்கண்டு, நாயினி வேமன்னா கொடுப்பதையே வாங்கிக்கொள்ள வேண்டுமென்று அன்று முதல் அவரிடத்திற்கே கூலிக்கு வேலை செய்யபோய்க்கொண்டிருந்தார்கள். இவர்களைக்கண்ட அவ்வூரார் யாவருமே அவரிடம் வேலைசெய்யவாரம்பித்தார்கள். வேமன்னாவும் ஆளுக்கொரு காய் தவறாமல் கொடுத்து வந்தார்.

இப்படிச் சிலநாளைக்குள்ளாகக் காய்களையெல்லாம் அறுத்து இரண்டு போர்களாகக் குவித்து தன் அண்ணியின் மூலமாய்த் தன் தமையனை அப்போரிடத்திற்கு வரச்செய்து, இருபோர்களையுந் தன்கரத்தால் தீண்டி ஒருபோரைத் தமயனையெடுத்துக்கொள்ளவும், இரண்டாவது போரை ஏழைகளுக்குக் கொடுக்கவும் சொல்லினார். அவரது சொற்படியே அவர் தமையனார் செய்து, சிலநாள் சென்றபின் அவரும் அவரது பத்தினியாரும் சிவலோகப்ராப்தி யானார்கள். வேமன்ன சுவாமிகள் குப்பைகளிலும், மேடுகளிலும், வீட்டுத் திண்ணைகளிலும் புரண்டபடியே வேண்டிய பத்தியங்களை (பாடல்களை)ச் சொல்லியும், குப்பைகளிலிருக்கும் உடைச்சலோடுகளிலெழுதியும், அணிமாசித்து விளையாடியுமிருந்து மறைந்தனர்.

உ

கடவுள் துணை.

# வேமன்ன் பத்தியம்

## (1000 பிரம்மவித்தியா சுலோகங்கள்)

## மூலமும்-உரையும்

---

### அவதாரிகை.

ஸ்ரீம துமா பதிக்கு சிவ
சுவாமிகி தாசுண்டனங்க ஜக்முலு வொகடன்
மேவன யனிமெபடு தீருடு
நேமம்புன ஜெய்யீபதீனி நிக்கமு வேமா.

(இ-ள்.) ஸ்ரீ உமாமஹேஸ்வரிக்கு நாயகனுகும் சிவபெருமானுக்குத் தொண்டனென்று புவியெங்கும் போற்றியேத்தும் வேமன்னயோகியென்னும் வைராக்கியபுருடன் ஜெகத்திலுள்ள சகல மானிடர்களும் உணர்ந்து உஜ்ஜீவிக்கும்பொருட்டு ஜீவகாருண்ய முடையவராய் இதில் தெலுங்கு பத்திய (செய்யுள்) ரூபமாகத் திருவாய் மலர்ந்தருளினர் எ-று. (க)

### சிறப்பு.

வேமன் னகயோகி வெலஸெ லோகமுலோன
பூஜசேயு புண்ணிய புருஷுலாரா
பூஜசேசிநந்த புக்திமுக்துல நிச்சு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வேமன்னனென்னும் யோகபுருடன் இவ்வுலகத்திலவதரித்து மெத்த கீர்த்தியைப்பெற்றார். அப்புண்ணியபுருடனைப் பூசைசெய்யுங்கள் ஓ சாதுக்களே! அப்படி மனம்வாக்குக்

காயமென்னும் திரிகரண சுத்தியாய்ப் பூசைசெய்த மாத்திரத்தில் பத்தி வியத்தி முத்தியைக்கொடுப்பார். சர்வ வியாபியாகிய ராமா! கேளும் வேமா! எ-று. (உ)

நீதிவை ராக்கிய பத்தி விரீதுலகுனு
காதகுனு கானி ஞானசங்க திதுலகுனு
வ்ரால கந்தனி பத்யமுல் வேலசங்கிய
சேத நந்தக வேமன செப்பெபுவினி.

(இ-ள்.) முனுநீதி வைராக்கியம் பத்தி விரத்தி யுத்தியற்றவர்களுக்கும் புத்திஞான வைராக்கிய சம்பத்தை யுற்றவர்களுக்கும் மனதுக்கும் வாக்குக்கு மெட்டாத பகவான் கல்யாண குணங்களுக்கு நிகராக அரிதாகிய பொருளடங்கியபத்தியங்கள் ஆயிரங்கணக்காக மந்தமதிகள் உணர்ந்து கடைத்தேரும் பொருட்டு உலகத்தின்கண் வேமன்னயோகி அருளிச்செய்தார்.

அவுனு வேமன ஜெப்பின யாத்மயுத்தி
தெலிய லேனட்டி மனுஜுலு தேபெலல்ல
தலனுபாசின வெண்ட்ருகல் வ்லெனுஜுலட
புக்தி முக்துலு ஹீனமை போவுவேமா.

(இ-ள்.) வேமன்னயோகி புகன்ற ஆத்மயுத்தியை ஆராய்ச்சி செய்து உணராத மனிதர்களனைவரும் பலதடவைகளிலும் சிக்கெடுத்த ரோமங்கள் சிரசைவிட்டு நாளுக்குநாள் எப்படி உபயோகப்படாமற் போகுமோ அப்படி புத்தியும் முத்தியும் கைகூடி வரமாட்டாது, வேமா! எ-று. (சு)

செவினி னில்லுகட்டி செப்பெனு வேமன
பட்டபயிட மோக்ஷ பதமடஞ்சு
புத்தி கல்குவாரு பொந்தி ஸ்-கிஞ்சரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) செவியில் வீடுகட்டி சொல்லியருளினார் வேமன்னயோகி, அஃதென்னவெனில் வெட்டவெளியில் மோக்ஷப்பதவி

யென்பதாம். யூகையென்னும் தெளிவாகும் புத்தியுடையவர்க ளிதையுடைந்து சுகமனுபவியுங்கள். சர்வவியாபியாகிய ராமா! கேளும் வேமா! (கூ)

ஸ்ரீகரம்புக வேமன செப்பி னட்டி
பத்யமுல நெவ்வரைன னு படனஜேயு
னட்டி புருஷுனி மஹிமல நீட்டி தனுசு
மனகுஜெப்பகா சக்யமே மஹினி வேமா.

(இ-ள்.) நித்யமாகிய சம்பத்தை யடையும்படி வேமன்ன யோகி அருளிச்செய்த பத்தியங்களை யாவரேனும் சர்வகால சர்வ அவஸ்தைகளிலும் விடைவிடாது தியானஞ்செய்யும் அப்படிப்பட்ட புருடனது மகிமைகளை இப்படிப்பட்டதென்றும் அப்படிப்பட்டதென்றும் இப்புவியின்கண் நம்மால் சொல்லத் தகுமா? வேமா! எ-று. (கூ)

ஈ கபட ஞட கம்புன
யீ கபட சதுவுலன்னி யீஸ்வரயனகா
ஏ கபடாத்முடு ஜேஸெனோ
யா கபடாத் முனகு ம்ரொக்கிதனரா வேமா.

(இ-ன்.) சிருஷ்டி திதிசங்காரமென்னும் முத்தொழில்களால் சகல லோகங்களையும் எண்பத்து நான்குலக்ஷம் ஜீவராசிகளையும் உண்டுபண்ணுவதும் ஆதரிப்பதும் அழிப்பதுமாகிய கபட நாடகம் புரியும் இந்தலீலா விபூதியில் கபடமாகிய வாசிப்புகள் யாவத்தும் பகவத்தியானமும் எந்த கபடநாடக சூத்திரதாரி உள்ளும்புறம்புமாக விருந்து செய்வித்தானோ அந்தக்கபட மனதையுடையவனுக்குச் சரணம் புகுந்தேனென்று துதிசெய்வாய்; வேமா! எ-று. (எ)

சிவ கவுலகு நர கவுலகு
சிவலோக ப்ரமதலகுனு சிந்தா மணிகின்

சிவ பக்தி தத்வ மூலகுனு
சிவுனகு குருவுனகு சரணுசேயரா வேமா.

(இ-ள்.) சிவபெருமானைப் பண்களால் சதாகாலமும் பாடிப் புகழ்ந்துகொண்டாடுங் கவிவாணர்களுக்கும் ஒன்பதுவித வியாகரண பண்டிதர்களுக்கும் சிவலோக வாசிகளாகிய நந்திதேவர் முதலான தொண்டர்களுக்கும் சிந்தைக்குள் மணியாகி விளங்குமவனுக்கும் சிவபக்தி தத்துவங்களை புணர்ந்தவர்களுக்கும் சிவனுக்கும் ஆசானுக்கும் சரண்புகக் கடவாய் வேமா! (அ)

கலியுக முனநுன்ன காபகுலம்புலோ
வேமன தனகீர்த்தி வெலய ஜேஸே
நுன்ன தர்மமெல்ல நுர்விலோ நருலகு
கோரி பெட்டெபரமு கோரு வேமா.

(இ-ள்.) இந்தக் கலியுகத்தில் குடியானவர் குலத்தினி லவதரித்த வேமன்னுவென்னும் யோகியானவர் தம்முடைய மகிமையென்னும் புகழை யெங்கும் பிரகாசிக்கச்செய்தார். அஃதெப்படியெனில் பாமரர்களெல்லாம் உணர்ந்து கடைத்தேரும் பொருட்டு ஜீவகாருண்யமிகுந்து வேண்டிய தர்மங்களெல்லாம் மானுடர்களுக்கு அருளிச்செய்து பரத்தையடையும்படி வெளியிட்டார்; வேமா! எ-று. (க)

காதன இட்டவரி தோட்டனு
வாதுலகும் யோடுவெர்ரி வானியு வலெனே
பேதா பேத மெருங்கியு
வேதாந்த ரகஸ்யமெல்ல வேமன யெருகுன்.

(இ-ள்.) யாரேனும் நன்றோ அல்லது தீதோ மொழிந்தால் அப்படிக்கல்ல இப்படியாகுமென்று தடுத்து எவர்களிடத்தும் வசனிக்கமாட்டார். தர்வாதங்கள் செய்யாமல் பித்தனைப்போல் நடித்து பேத அபேதங்களையறிந்து வேதாந்தரகசியங்களெல்லாம் வேமன்னயோகி அறிந்து அதில் லயித்துக்கொண்டிருப்பார். எ-று. (கo)

இஹபரா துலகுனு யிதிசா தனம்பனி
வ்ராசி சதிவி வினன வாரிகெல்ல
மத்ய கர்மமுலனு மகிமதோ நடசுனு
பருல கைனமுத்தி பதமு வேமா.

(இ-ள்.) இகம்பரமென்னு மிரண்டிற்கும் இது சாதன மென்று எழுதிப்படித்தவர்களுக்கும் அல்லது இந்த யிரகசி யார்த்தத்தைக் கேட்டவர்கள் யாவர்க்கும் நடுவில்வந்தடையும் கர்மங்களையெல்லாம் தீயிற்பஞ்சென உருவுமாறச்செய்துமுக்தி பதவியையளிக்கும், வேமா! எ-று. (கக)

வேமன ஜெப்பின மாட்டலு
சாமம்புன சதிவினட்டி ஸஜ்ஜனு லெல்லன்
சோமனு தலநுந் துருகடு
நேமன்புன ஜடைவைய நேர்ப்புன வேமா.

(இ-ள்.) வேமன்னசொல்லிய தத்துவக்ஞான சம்பத்தென் னும் சொற்களை அன்போடு வாசித்துத் தேர்ந்த நல்லோர்கள் யாவரும் சோஹமென்னுஞ் சிர்சிலிருப்பார்கள். அப்படிப் பட்ட சத்துக்களை அரிதாகிய நிஷ்டையிலிருந்து பாருமையா வேமா! எ-று. (கஉ)

வேமு டிட்லுசெப்பு வெலயு பத்யம்புலு
தப்பு லென்னியுன்ன நொப்பி யுண்டு
தத்தர படகந்து பித்தரை யொப்பதா
விஸ்வ தாபி ராம வினர வேமா

(இ-ள்.) இப்படி வேமன்னயோகி அருளிச்செய்த பிரகாசம் பொருந்திய சுலோகங்களில் தப்புகளெத்தனையிருக்கினும் தேரித்தெளிந்த ஞானபுருடர்களுக்கு ஒப்பத்தகுந்தவைகளாயி ருக்கும். சஞ்சலத்திற் கிடங்கொடாமலும் பிரமிக்காமலும் அத னிடத்தில் பயந்திருக்குமவர்களுக்கு அவர்களேகிகரன்றி அன் னியர்களைச் சொல்லத்தகாது, ஸர்வவியாபியாகி உள்ளும் புறம் புமாய் வசிக்கும் ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கங)

வேயு விதமு லமர வேமன பத்யம்பு
லர்த்த மிச்சுவானி னரசிரூட
ரூடரூடகலுகு சோத்யமௌ க்ஞானம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வேமன்னயோகி அருளிச்செய்த பத்யங்களொவ்வொன்றையும் ஆழ்ந்து பார்க்கப்பார்க்க ஆயிரம்விதங்கள்பொருந்தும்படி அர்த்தங்கொடுக்கும். அந்த அர்த்தத்தைக் கருதக் கருத ஆச்சரியப்படும்படியான ஞானத்தை யுண்டாகச்செய்யும், ஸர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா! எ-று. (கச)

வேயு பத்யமுலு விவேகியை பக்திதோ
ட்டன ஜேஸிநட்டி பக்துனகுனு
பாயகுண்டு மோக்ஷ பதமரி சேதிதை
விஸ்வதாபி ராம வினரவேமா

(இ-ள்.) வேமன்னயோகி அருளிச்செய்தபலவாயிரபத்யங்களில் ஆயிரம் பத்தியங்களை விவேகியாகி பக்தியுடன் துதிசெய்யும்படியான பக்தனுக்கு மோக்ஷப்பதவியானது கரதலாமலகம் போல என்றும் நீங்காதிருக்கும், ஸர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கரு)

சத ச்ங்கிய பத்யமுலுயே
மதி மந்து டைனகானி மமத தலிர்ப்பன்
யதடுகனு நால்கு பதவுலு
சிதிகண்டுனி புரமுநந்து சித்தமு வேமா

(இ-ள்.) நூறு சுலோகங்களை எந்தப் புத்திவானாகிலும் தானென்னும் அகங்காரத்தை வெட்டியெறிந்து பாரதந்திரனாகியானஞ் செய்வானோ அந்த விவேகியானவன் நீலகண்டனாகிய சிவபெருமான் வசிக்கும்படியான சாலோக சாமீப சாரூப சாயுச்சியமென்னும் நான்கு பதவிகளையும் உண்மையாக அடைவான், ஓ வேமா! எ-று. (கசு)

லேவு ஸர்வமுனனு லிய்யமை யுன்னவு
வுன்ன நீது வுனுகி வினகராது
பிட்ஞகானி நீவு யெட்லு பரப்ரம்மா
விஸ்வதாபி ராம வினர வேமா

(இ-ள்.) ஓ பராபரப்பொருளே! நீ எதனிடத்திலுமில்லை, சகலத்திலும் உள்ளும்புறம்புமாக இருக்கின்றாய். உன்னுடைய இருப்பிடமாகிலுந் தெரிந்துகொள்வோமென்றாலும் அரிதாக விருக்கின்றது. இப்படிக்காணவுங் கேழ்க்கவும் அருமையான நீ எப்படி பரபிரம்மமாகுவாய்? சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஎ)

தாமர யந்தலி நீர்வலே
வேமன சரியிஞ்சுசுண்டு வெதுகுசு சிவுனின்
யாமாய நம்மகாரா தீ
மனமுன தெலியராது யீசுனி வேமா

(இ-ள்.) தாமரையிலையின்மீதுற்ற புனலைப்போல் வேமன்னயோகியானவர் மாயாசம்பந்தமாகிய இப்புவியின் மீதிருந்தும் மாயைக்கிலக்காகாமல் சிவபெருமானைத் தேடிக்கொண்டிருப்பார். ஆகையால் இந்தச்செகமாய்கையை நம்பலாகாது. மாய்கையில் கட்டுப்பட்டிருக்கும் மந்தமதிகளால் சிவபெருமானைக் காண்பது அருமையாகும் வேமா! எ-று. (கஅ)

கப்பயு பாமுனு போரக
கப்பனு யாபாமு ம்றுங்கு கைவடிமெரயன்
கப்பனு வெடலன் த்ரோசெடி
நொப்புன னுசொப்புதெலிய வேமுண்டெருகுன்.

(இ-ள்.) தவளையும் பாம்பும் போரிட அத்தவளையை யந்தப் பாம்பு விழுங்குமதைப்போல் பிரகாசிக்கும் உலகமாயையென்னும் புத்திர மித்திர களத்திரா திகள்மீதுற்ற ஆசையை விலக்குமாப்போல மாயையென்னுந் தவளையை விலக்கி நித்தியமோக்ஷ மார்க்கத்தையடையும் விதத்தை வேமன்னயோகி அறிவார் எ-று.

க்ருஷ்ண பர்வமந்து க்ருத்திக லதுண்டு
க்ருத்து லதுனு க்ருஷ்ண ம்ருங்கே
வெலயு க்ருஷ்ணலது வேமன ம்ருங்கெரா
விஸ்வதாபி ராம வினர வேமா

(இ-ள்.) இருளென்னும் அந்தகாரத்தில் பஞ்சேந்திரியங்களென்னுங் க்ருத்திகைகள் ஐந்தும் பொருந்தியிருக்கின்றன. இப்பஞ்சேந்திரியங்களைந்தையும் அந்தகாரம்விழுங்கியது. அப்படிப்பட்ட அந்தகாரத்தை வேமன்ன விழுங்கினுர், ஸர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உ0)

பிலசின பலுகுண்டு மரி பிலசின வேமன கூரகுண்டு
தனசலசினயெவ்வ ரேமனின தன்னு க்ாதனி நவ்வுசுண்டு
நாத்பதல பேயுசுண்டு பரதத்வமு நித்யமுதானெயைசதா
தெலிசின யோகி வேமனுகதின் சிவரூபுடு நெல்லதாவுலன்

(இ-ள்.) யாவரேனுமழைத்தால் பேசாமலும் பின்னுமழைத்தால் வசனியாமலும் தன்னை நினைத்திடினும் யாரென்ன சொல்லினும் தன்னையல்லவென்று சிரித்து ஆத்மாவைப் பரமாத்மாவினிடம் ஐக்கியப்படுத்தி பரதத்வம் நித்யம்தானுகி நிமைநேரமேனும் அன்னிய விஷயத்தில் மனதைச் செலுத்தாமலும் அறிவாலுணர்ந்த வேமன யோகியானவர் எவ்விடத்திலும் சிவரூபத்துடன் சஞ்சரிப்பார் எ-று. (உக)

கூட்டிகிலேல்னிவானிவலெகோபமுலேகனுயெல்லதாவுலன்
மாட்டிகிமாட்கின்மரியு மாட்டிகிமாட்டகுபத்யபத்ததின்
தாட்டினெருங்கஜெப்புசுனுதாருணிலோசிவரூபகாரியை
மாட்டிகிநன்னவேமன ஸமானமுயெவ்வருவெர்ரிவேமனு

(இ-ள்.) அன்னத்திற்கும் ஆடைக்கும் பரதவிக்கும் ஏழையைப்போலவும், சினத்தைப் பற்றறுத்து சாந்தத்தை வகித்து எந்தயிடத்திலும் அடிக்கடி ஒவ்வொரு சொல்லுக்கும் அளவிறந்த பத்யங்களை வெகு தீரமாக யாவருமறியச் சொல்லிக்கொண்டு இவ்வுலகின்கண் சிவரூபத்தைத் தரித்தவராகி யிருந்த வேமன்

னுவுக்கு ஙிகரானவர்கள் யாருமில்லை, பைத்தியங்கொண்ட
வேமன்னு! எ-று. (உஉ)

ஒக்கடு யோகியாயெ மரியொக்கடுதிக்குலத்யாகியாயெ
வேறொக்கடுபோகியாயெ நடுயொக்கடுசக்கனிராகியாயெ
தானொடுக்கடுக்ஞானியாயெ வினுயொக்கமஹாத்முனி
[கான மெச்சடன்
ஙிக்கமு யின்னிரூபமுனு நீகுனுசெல்லுசு னுண்டுவேமனு.

(இ-ள்.) ஒருவன் யோகியாகி மற்றொருவன் அஷ்டதிக்குக்
கும் தியாகியாகி வேறொருவன் போகியாகி இன்னொருவன் மாய்
கைக் குள்ளாகி மற்றுமொருவன் க்ஞானியாகினுன்; இத்தனை
பேர்களில் ஒரு மகாத்மாவையேனும் எவ்விடத்திலுங் காணேம்;
உண்மையிலே இத்தனை ரூபங்களும் உனக்கே தகுமன்றி மற்
றொருவருக்குந் தகாது, கேளும் வேமனு! எ-று. (உ௩)

அண்டாண்டம்.

அண்டாண்டமுகன யுன்னிபுனடு
அண்ட மெட்லு பிரமாண்ட மட்லெ
கர்ம பந்தமுசேத கானருயினருல்
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அண்டாண்டத்தைப்பார்க்க யாவத்தும் இருப்பது
போல பிண்டாண்டமெப்படியோ அப்படியே பிரமாண்டமும்
விளங்கும். அந்த ரகசியத்தை கர்மபாசத்தினுல் கட்டுப்பட்ட
மானிடர்கள் இதை உணர்வது மெத்த அருமையாகும்; சர்வவ்
யாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உ௪)

அண்டமுலோ யாகாசம்
முண்டங்காகூடகூட நொனநரகதிபை
யுண்டுனு நந்தயு தெலசின
மெண்டுக னுகமுத்தி காந்தமெலகுர வேமா.

(இ-ள்.) இந்த அண்டத்தில் ஆகாயமிருப்பதுபோல ஆக்
கையெனும் அண்டத்திலும் ஆகாயமிருக்கின்றது. அதைப்

பார்க்கப்பார்க்க இனிப்பாகவிருக்கும். அவ்விடத்தில் சகலமு முணர்ந்த முக்திமாதொருவன் ஜோதி சொரூபமாய் விளங்குவன், வேமா! எ-று. (உகு)

## பிண்டாண்டம்.

பிண்ட அண்டமனெடி ப்ருதிவி ஜனுலுசூட
ப்ரம அண்டமனெடி பயலுகாக
ஆவிதம்புன னருலந்தரு தெலியண்டி
விஸ்வதாபி ராம வினர வேமா,

(இ-ள்.) பிண்டாண்டமென்னும் பிருதிவியை ஜனங்கள் பார்க்கப் பிரமாண்டமென்னும் வெளியாகும்; அந்த விதமாக யெல்லா மனிதர்களும் தெரிந்து தெளிவையடையுங்கள்; சர்வ வியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று. (உசு)

தனரு பிண்டாண்டமுன தகிலினவாடு
புட்டலேது வாடு புடமிலோன
னட்டி புட்டுககன னவனிலோ லேதயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஒளிபெற்று விளங்கும் பிண்டாண்டத்திலகப்பட்டவன் இப்புவியினிடத்திலவன் பிறக்கவில்லை. அப்படிப்பட்ட பிறப்பைப் பார்க்க இவ்வுலகத்திலில்லையையா சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உஎ)

கமலப வாண்டமு லெல்லனுசு
விமலபு சுக்ஞானு லெல்ல வீட்சிந்துரயா
விமலம்பை மனமுண்டக
சமமுக பிண்டாண்ட மெபுடு சூடரவேமா.

(இ-ள்.) அண்டபிண்ட பிரமாண்டங்களனைத்தையும் சுத்தக் ஞான வைராக்கிய சீலரான பெரியோர்கள் அபேதமாக நினைக்காமல் எல்லாவற்றையும் சமமாகவும் சகலமும் பகவானது சொரூபமென்று எப்போதும் பார்க்கக்கடவாய், வேமா! எ-று.

## பிரம்மாண்டம்.

ப்ரஹ்மாண்டமனெடி பட்டணம்புலோபல
ப்ரஹமமுனு தெலியனி ப்ராஹ்மய மேல
தன்மனம்பு தெலிய தானெபோ ப்ரஹ்மம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பிரமாண்டமென்னும் பட்டணத்திற்குள்ளே பிரம் மத்தையறியாத பிராமணுனேதுக்கு? தன்னைத்தானே யறிய நானேயல்லவா பிரமம்; சர்வவியாபியாகிய ஒராமா! கேளும் வேமா! எ-று. (உக)

ஒகப்ரஹ்மாண்டமு தலசின
ப்ரகடிம்பக ரானிவன்க பகுலோகமுலன்
விகடம்பை நட்ளுண்டுனு
அகடாமீ தாண்டவம்பு லட்லனெ வேமா.

(இ-ள்.) ஒரு பிரமாண்டத்தை நினைத்தால் அதன் புகழைச் சொல்லமுடியாதென்ன? வெகு லோகங்களிலும் அருவருப்பாகியதைப்போன்ற விருப்பத்தைப்போல உம்முடைய திருக்கூத்து ஆஹாஹா என்ன ஆச்சரியத்தை யுண்டாக்கு கின்றதோ அப்படியே புகழவுஞ் சொல்லவுந் தரமாகாது, வேமா! எ-று. (௩0)

ப்ராண முண்டுகாலி ப்ரமாண்டமுன மேனு
மித்ரசந்திரவஃனி நேத்ரசயமு
மரியு தேவுநெருக மஹிமீத னெவரயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பிராணத்தினிடத்தில் காற்றும் பிரமாண்டத்தினிடத்தில் தேகமும் சினேகிதனிடத்தில் சந்திரசூரியர்களும் பொருந்தியிருக்கும் விவரத்தை உம்மையன்றி மற்றெவர்கள் பிரமசொரூபத்தை யிவ்வுலகத்திலறிய வல்லவர்கள்? சர்வவியாபியாகிய ஒராமா! கேளும் வேமா! எ-று. (௩க)

## ப்ருதிவி.

ப்ருதிவி குதகமேகே ப்ருதிவியை மொலகெத்தெ
மொலக ப்ருதிவிகேகே மொகடெ சுதுடு
தரணி ஜனுலகெல்ல தல்ஸியு பெண்ளாமு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பூமியில் தண்ணீர் வந்தது. மண்ணின்மீது முளை யெடுத்தது, முளை மண்ணின்மேல் வந்தது. இதை யோசிக்கு மிடத்தில் கணவனே குமாரனுகியதுபோல உலகத்திலுள்ள ஜனங்கள் யாவருக்கும் அன்னையே மனைவியாவர்ள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௨)

பூமிலோனே புட்டி பூசாரமெல்லனு
தனுவுலோனே புட்டு தத்வமெல்ல
ஸ்வயமுலோனெ புட்டி ஸர்வம்பு தானௌனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பூமியின் சாரம் யாவும் பூமிக்குள்ளாகவே பிறந்தது போல தேகத்தினிடமாகத் தத்வம் யாவும் பிறக்கும். சுயம்பிற் குள்ளாகப் பிறந்து சகலமுந்தானகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௩)

பூமிவல்ல பேரு புண்ய ஸ்தலமுலாயே
வெலய ராள்ளவல்ல வேல்புலாயே
நீள்ள பேருவல்ல நிகில தீர்த்தமுலாயே
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பூமியினலே புண்ணியத்தலமென்று பேருண்டாயிற்று; கற்களினலே தெய்வமென்று பேருண்டாயிற்று; தண்ணீரினலே பற்பல தீர்த்தங்களென்று பேருண்டாயிற்று; சர்வ வியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று. (௩௪)

பூதேவி யனக ம்ருத்திக
பூதேவதலேன வகுலு புட்டின வென்னோ

ஆ தேவதகே தெலுசுனு
ஆதினி யீனருலு யெருக ரந்துரு வேமா.

(இ-ள்.) பூமாதேவியென்றால் மண். அந்தப் பூமாதுகளாகவும் தேவதைகளாகவும் பிறந்த வகைகளெத்தனையோ வதை கணக்கிட முடியாது. இந்த மர்மம் பரப்ரம்ம சொரூபமாக விளங்கும் அந்தத் தேவனுக்கே தெரியுமென்ற மந்த மதிகளாகிய மானிடர்கள் யாவரும் அதின்ரகசிய மறிய மாட்டார்கள். தத்வக்ஞானபரிசுத்த ஆத்மாக்கள் அறிவார்கள் வேமா! எ-று. (௩௫)

ம்ருத்திகயே தனதனுவட
ம்ருத்திதளமெத்திரிலுப மொதலாதருவுன்
ம்ருத்திகயுன்னதி மாடிகி
யெத்தெருவுலு தரணிமகிம யெருகரு வேமா.

(இ-ள்.) மண்ணே தன் தேகமாம்; அந்த மண்ணிலேயே அஸ்திவாரமும் சுவரும் மெத்தைதளமும் போட்டுப்பார்க்க முதலும் ஆதாரமுமாக விருப்பது மண்ணேயானதால் எப்படிப்பட்டவர்களும் மண்ணின் மகிமையை யறியமாட்டார்கள்; வேமா ! எ-று. (௩௬)

பூதேவியனக ம்ருத்திக
பூதேவத புட்டு விதமு பூஜனு லெருகன்
பூதேவி பார மாயெனு
ஆதேவத காதரெவ்வ ரந்துரு வேமா.

(இ-ள்.) பூமாதென்றால் மண். அந்தமண் பிறந்தவிதம் இம்மண்ணிலுள்ள ஜனங்களறிய ஆதாரமாயினள். அப்படிப்பட்ட அந்தத் தேவதைக்கு ஆதாரம் யாவரென்பார்கள், வேமா! எ-று. (௩௭)

மண்டிலோனே புட்டி மண்டிலோனே பெரிகி
மண்டிலோனே திரிகி மனுஜு டாயெ

மன்னு மண்டகல்ப மனுஜுடே தத்வம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மண்ணினிடத்திற் பிறந்து மண்ணின்மீதுவளர்ந்து மண்ணின்மேற்றிரிந்து மனிதனுயினுன். அப்படிப்பட்டமண்ணை மண்ணிற்கலக்கும் மனிதனே தத்வக்ஞானியாகும்; சர்வ வியாபி யாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (ருஅ)

மண்டிலோனே புட்டி மண்டிலோனே பெரிகி
மண்டி வெடலிவாடு மிண்டி கெகசெ
மிண்டிலோன சுகமு மண்டிலோ லேதய்ா.
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மண்ணிற்குள் பிறந்து மண்ணிற்குள் வளர்ந்து மண்ணைவிட்டு வெளிப்பட்டவன் விண்ணையடைந்தான். ஆகையால் விண்ணுலக சுகம் மண்ணுலகிலில்லையயா; சர்வவியாபி யாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (ருகூ)

மன்னு குப்பஜேசி மன்னுலோ கோரர்டி
மன்னுயண்டகுண்ட மகுடி திரிகி
மன்னு மின்டகல்பி மரியெந்து போவுனோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மண்ணைக் கும்பலாகக் குவித்து அந்த மண்ணின் மீது விழுந்து புரண்டு மண்ணுட்டாவண்ணந் திரிந்து மண்ணை மண்ணிற்கலந்து பின் இந்த ஜீவனெங்குப்போகுமோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சo)

மண்டிகுண்டவன்டி மாய சரீரம்பு
சச்சு நென்னடைன சாவதாத்ம
கட்டு வொக்கடைதெ ககனம்பு ஒக்கடா.
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மண்பானையை யொத்தமாயாமயமாகிய இவ்வாக்கை எத்தனைநாளாகிலும் ஒருநாளைக்குச் சாகுமல்லாமல் ஆத்மா

என்றும் சாகமாட்டாது, சடமொன்றுகில் ஆகாயமும் ஒன்று தானு? சர்வவியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று. (சக)

மன்னு தினகமன்டெ மண்டேரு ஜனுலாரா
மண்டிலோனி மேனு மருவ நேல
நீள்ளலோனி மேனு நிதிலமை யுண்டுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சம்சாரசாகரத்தில் விழுந்து மீண்டுங் கரை யேற வகையறியாத பாமரஜனங்களே! மண்ணைத்தின்னுங் கொன்றால் மகாகஷ்டப்படுகிறீர்கள்; அந்தமண்ணிலிருக்கும் மேன்மையை மறக்கவேண்டியதென்ன? தண்ணீருக்குள் மேன் மை அனேகமாயிருக்கும் சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சஉ)

மன்டபுட்டு சொம்மு மன்டியந்துன தாச்சி
மன்டி குண்டலோனே மரல வண்டி
மன்டி பாதுருகிந்த்த மருலேல ஜேஸ்திவோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மண்ணிற்பிறக்கும் பொருளை அந்த மண்ணினிடத் திலே தானே ஒளித்துவைத்து மறுபடியும் யெடுத்து மண்பானை யிடமே சமைத்து அதையுண்டு களிக்கும் மண்பிழைப்புக்கேனிவ் வளவு ஆசையை யுண்டுபண்ணினீர்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சங)

அப்பு.

உதகமு லோபலி தத்வமு
வெதிகியு தானின தெலசி வேகமெ மதிலோ
நுதகமு வலேதா தத்வமு
மதி தெலிசினவாடு தத்வ மயுடுர வேமா.

(இ-ள்.) தண்ணீரிலிருக்கும் தத்துவத்தைத் தேடி யுணர்ந்து தன்னைத்தானறிந்து தெளிவடைந்து விரைவில் மனதில் மதித்

துத் தண்ணீருக்கு நிகராக தத்வத்தை மதியிலறிந்தவன் தத்வ சொரூபனாகும், வேமா ! எ-று. (௬௬)

நதி னுதகம்புலு ஜனுக்ரிய
மதி பொடமெடு தத்வ விதுலு மகிமான்விதுலை
ப்ருதிவினிகல நருலு வொகட
பதபடி ஸத்கதினி பொந்து பாகுக வேமா.

(இ-ள்.) நதியில் தண்ணீர் பெருகிப்போவதுபோல இடைவிடாமல் மதியைத்திருத்தும் தத்வயோகிகள் அளவிடப்படாத மகிமை பொருந்தினவர்களாகி, உலகிலுள்ள மனிதர்கள் புகழ, சாயுச்சியபதவியாகும் நற்கதியை அவசியமடைவர்; வேமா! எ-று.

நீள்ளமீத புக்க நிலிசின யப்புடு
நீள்ளு வேகவச்சி தாகுகாக
விடடு குண்டகிந்த விஸ்ராந்தி படுதுரு
விஸ்வதாபி ராம வினர வேமா!

(இ-ள்.) தண்ணீரின் மீது குமிழி நின்றபோது தண்ணீர் விரைவாக வந்து படுமல்லவா? அப்போதந்தக் குமிழியழிந்து போகுமாப்போல அழிந்துபோகும் நிலையில்லாத மண்பானையின் பொருட்டு எத்தனையோ பேர் ஆயாசப்படுவார்கள்; சர்வவியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா ! எ-று. (௬௯)

நீள்ளமீதி வ்ராத நிலுவக யுன்னட்லு
பாட்டி ஜகதிலேது பரமுலேது
மாட்டமாட்ட கெல்ல மனசு கோருசுநுண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நீர்மேலெழுத்து நிற்காமலிருப்பதுபோல ஜெகத்துமில்லை பதவியுமில்லை. இப்படிப்பட்ட அனித்தியமான இவ்வுலகின்கண்ணுலவும் இவ்வாக்கையும் அனித்தியமே. ஆகையால் இந்த அனித்தியமான ஜெகத்தாசையை மனதுகோரிக்கொண்டிருக்கும்; சர்வ வியாபியாகிய ஓராமா ! கேளும் வேமா ! எ-று. ()

நீள்ளமீத ஜ-டு வெலயனேடைல பர்வு
பைலுமீத ஜ-டு பக்ஷிபர்வு
ஆடதானி பர்வு யாலாகெ யுண்டோரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நீரின்மீது பார்த்தால் ஓடத்தின் வேகம் வெளியாகும். விண்மீது பார்த்தால் பட்சி பறக்கும்வேகம் வெளியாகும். பெண்பிள்ளையின் ஓட்டமும் அந்தப்படியே யிருக்குமடா; சர்வ வியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று. (சஅ)

நீள்ளலோனி சேப நிகுடி தூரமுபாரு
பைட்ட மூரடைன பாரலேது
ஸ்தான பலிமிகானி தனபல்மி காதயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தண்ணீருக்குள் மீனானது நீண்டு தொலைதூரம் ஓடும்; வெளியில் ஒரு முழமேனும் ஓடமாட்டாது. ஸ்தானபலமல்லது-தன் வல்லமையல்லவையா; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சக)

நீள்ளலோனி முஸலி நிகுடி யேனுகதீசு
பைட்ட குக்கசேத பங்கபடுனு
ஸ்தான பல்மிகானி தனபல்மி காதயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தண்ணீருக்குள் வசிக்கும் முதலையானது தன்னருகில் வந்த யானையைப் பிடித்து உள்ளுக்கிழுத்துப் போகும்; அப்படிப்பட்ட முதலை தண்ணீரைவிட்டு வெளியில் வந்தமாத்திரத்தில் நாயினிடமகப்பட்டுப் பங்கப்படும். இதற்குக்காரணம் ஸ்தானத்தின் வல்லமையேயன்றி அம்முதலையின் வல்லமையன்று; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௬௦)

மொதடபட்ட நீரு மோட்டு தனக்யெக்கி
மொதட குரிகிவேக மொல்க லெத்து

மொலக் ப்ருதிவிபடின மொககொடு க்ந்துரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) முதலில் விழுந்த விந்து மோட்டுவரைக்குமேரி முளையெடுத்துப் பத்துமாதமும் பூரணமாகி அம்முளை பூமியில் விழுந்த மாத்திரத்தில் ஆண்குமாரனென்று ஜனங்கள் சொல்லுவார்கள்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று ()

மொதட போயுநீரு மொதலிதனக யெக்கி
வ்ருக்ஷமெல்ல நிண்டி விஸ்தரிஞ்செ
ஆவிதம்புன ஜீவ மந்தட நிலுசுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பூமியைத்திருத்தி விதைவிதைத்து முதலில் வார்க்கும் தண்ணீர் விதைக்குள்ளேரி முளை யெடுத்து இலை தழைத்து கொம்புகள் ஓடி அம்மரம் முழுதும் நிறைந்துப் பரவியது. அது போல ஜீவனவ்வண்ணமே நிற்கும்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௨)

நீரு காரமாயெ காரம்பு நீராயெ
காரமைன நீரு காரமாயெ
காரமந்து நீரு கடுரம்யமை யுண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தண்ணீர் காரமாயிற்று அக்காரமே தண்ணீராயிற்று; காரமாகிய தண்ணீர் பின்னுங் காரமாயிற்று; அக்காரத்தில் நீரானது மெத்தவும் சுந்தரமாக பிரகாசித்துக்கொண்டிருக்கும்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௩)

நீரு காரமாயெ காரம்பு நீராயெ
நீரு நிர்விகார வஸ்துவாயெ
நீட்டிலோன நுண்டு நிகல ப்ரமாண்டமுல்
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஜலம் காரமாயிற்று, காரம் ஜலமாயிற்று; அத்தண்ணீர் நிர்விகார வஸ்துவாயிற்று; அப்படிப்பட்டத் தண்ணீ

ருக்குள்ளாக சகல ப்ரம்மாண்டங்களு மிருக்கும்; சர்வ வியாபி யாகியு ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௪)

## தேஜஸ்.

நீரு காரமெள்ளு நிருகொனி காரம்பு
வானிவத்த நித்ர போனுவச்சு
நீட்டிலோனெ நுண்டு நிகில ப்ரம்மாண்டமுல்
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தண்ணீர்காரமாகும், நீரினிடம் காரங்கொண்ட அதனிடத்தில் ஆனந்த நித்திரைசெய்யலாம்; அத்தெளிந்த நீருக்குள் அகில ப்ரம்மாண்டங்களும் நிறைந்திருக்கும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௫)

ஜ்யோதியந்தெ புட்டு சொம்பைன நாதம்பு
நாதமந்து புட்டெ நரயு பிந்து
பிந்துவந்தெ புட்டெ ப்ருதிவி யாகாசம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சோதியினிடத்திலே பிறக்கும் சுகமாகிய நாதம், அந்த நாதத்தினிடம் பிறக்கும் பிந்து; அவ்விந்துவினிடத்திலே பிறந்தது பிருதிவியும் ஆகாசமும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௬)

ஆத்மலோனி ஜ்யோதி யமருட லிங்கம்பு
தெரசிகனககானி தேடபடது
பதியு குருவுலேக யப்புனு தெலியங்க
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஆத்மாவுக்குள் சோதியமர்ந்திருக்க லிங்கமாகும், அதைத் திறந்துபார்க்காமலல்லது தெளிவுபடமாட்டாது. அப்படித் தெளிவுபடுதற்கு எளிதிலாகுமா? தெரிந்து ஆனந்தமடைவதற்கு குருவில்லாமல் பிராப்தமாகுமா ஆகமாட்டாது. ஆகை

யால் சத்குருநாதன் கிருபாநோக்கத்தால் எளிதிலடையலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று (ருள)

சொம்முக னெடிதாக ஜ்யோதி க்ாவலெகானி
சொம்முகன்ன வெனுக ஜ்யோதி யேல
தேவுடைன வெனுக தேகம்பு சிக்கேல
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) காரணப் பொருளைக் காணும்பரியந்தம் சோதிவேணுமன்றிப் பொருளைக்கண்டபின்பு சோதியேதுக்கு? தேவனன் பிறகு தேகத்தினிடம் ஆவலேன்? சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (ருஅ)

சொம்மு படினசோட்ட சோதிம்பு கனுகுனு
சொம்முலேனி சோட்ட சோதனேல
அஞ்சனம்பு லேக யாசொம்மு தெலியது
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பொருள் போட்டவிடத்தில் தேடக்கிடைக்கும்; பொருள் விழாதவிடத்தில் சோதிப்ப தேதுக்கு? அஞ்சனம் போட்டுப்பார்க்காமல் அந்தப்பொருள் அகப்படமாட்டாது; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று (ருக)

தீபம்பு லேனி யிண்டனு
ரூபம்புலு தெலியலேரு ரூடிக தமலோ
தீபமகு தெலிவி கலிகியு
பாபம்புலு மருகுத்ரோவ படுதுரு வேமா.

(இ-ள்.) தெளிவில்லாதமந்தமதிகள் விளக்கில்லாத வீட்டினில் சொரூபத்தை உண்மையிலேயே காணமாட்டார்கள். விளக்காகுந் தெளிவுண்டாகிய உத்தம ஞானிகள் பாவங்களுருமாய்ந்து புண்ணியத்தைச் சேகரிக்கும் வழியையே நாடுவார்கள், வேமா! ()

சிவுகூர்ச்சி தீபமிடினனு
சிவமந்திரமந்து ஜ்யோதி ஸ்திரமகுட் டருதா

சிவயோகி ஹிருதய கமலமு
சிவத்ரிபுவனமூலனு வெலயு ஸ்திரமுக வேமா.

(இ-ள்.) மனதுடன் சிவனைக்கூட்டி விளக்கை வைத்தால் அவ்வீட்டிற் சிவமென்னுஞ் சோதியானது நிலைத்துப் பிரகாசித்துக்கொண்டிருப்பதோர் அருமையா? அதுபோல சிவயோகியின் யிருதயமென்னுந் தாமரைக்கமலத்தில் மூவுலகமும் சிவமயமாகவே விளங்கும்; வேமா! எ-று (௬க)

அனலம்புன ஜன்மிஞ்செனு
யனலம்புன் ஸலிலயகுச்சு யாகாசமுநன்
கனிபிஞ்சி புட்டுதானே
ஜனகுடு லேனட்டிமாய சரிதமு வேமா.

(இ-ள்.) அக்கினியில் மாயைபிறந்தது; அஃதெப்படியெனில் அக்கினியில் தண்ணீருண்டாகுமாப்போல ஆகாசத்தினில் காணப்பட்டு தனக்குத்தானே பிறக்கும் தந்தை யில்லாத் மாயையின் சரிதை; வேமா! எ-று. (௬உ)

அக்னி தைவமைதெ யக்னி வுபாஸ்தியு
சேரரானி முக்தி சேரு டெட்லு
வீரபத்ருனி சேத வெலசின யக்னியு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அக்கினி தெய்வமாகில் அந்த அக்கினியை உபாசனை செய்தால் சேரவரிதாகிய முக்தியைச் சேருவதெப்படி? வீரபத்திரனால் உண்டாகிய அக்கினியாகையால்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௬௩)

அக்னி சிகல்யந்து நமரங்க மமகார
மபவுமீத த்யான மொனர நுனிசி
யாகுதி யகுவெனுக ஹருனி கற்பிதமௌனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) கொழுந்துவிட்டோடும் அக்னியின்மீது தாணு(?)ற்கும் சிவபெருமான்மீதில் நிர்மல தியானத்தை வைத்து ஆகு

தியாகிய பின்பு அரனுக்கற்புதமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுச)

கனசார மக்னி தரிகேர்னி
கன்சாரமு லேனியட்டி காரண வித்யா
கனசாரமு வித்யாக்னிகி
கனசாரமு கண்டகம்பு கலுகுர வேமா.

(இ-ள்.) மிகவும் சாரமாகும் அக்னியை உட்கொண்டு அப்படிப்பட்ட சாரமில்லாத வித்தைக்குக் காரணமும் மேன்மையுமாகிய சாராக்னிமுட்களுண்டாகும் வேமா, எ-று (சுடு)

தொர்ர மானிலோனி. தொரட்டி ஜீவுல்நெல்ல
மொல்லலேக ஜம்பு முதமுதோட
அக்னிலேனி மண்ட யதியேமி சேர்த்யமோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பொந்துள்ள மரத்திற்குள் வாழும் எல்லா ஜீவ ராசிகளையும் பிரியத்துடன் அக்னியில்லாத சுடர் கொல்லும், அதுவென்ன விந்தையோ? சர்வ வியாபியாகிய; ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுசு)

நாகு யெவரு திக்கு நடினள முலலோனு
வேகு சுக்கவண்டி வெலுகு திக்கு
வெலுகு கன்ன திக்கு வெதுகங்க லேதயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) எனக்குத் திக்கு யாவரெனில் ஆகாயத்திற்குள் விளங்கும் வெள்ளியைப்போன்ற பிரகாசம் திக்காகும். சோதியைவிட வேறு திக்கு தேடிப்பார்க்க எங்குமில்லை; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுஎ)

க்ருகமு கூடுஜேஸி குணமு முப்பிரிஜேஸி
சத்யமனெடி கர்ம சமுரு போசி

மூலநொக்க ஜ்யோதி முட்டிஞ்சி சூடரோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தேகமென்னும் வீட்டை மாடமாக்கி ராஜசம் தாமசம் சாத்வீகமென்னு மூன்று குணங்களை முப்பிரி திரியாக்கி சத்தியமென்னும் கர்ம எண்ணெயைவிட்டு மூலையிலொரு விளக்கேற்றி அவ்விளக்காகுஞ் சோதியைப்பாரும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கூஅ)

பிண்ட அண்டமத்ய பிந்துனாத்ம ஜ்யோதி
ப்ரம்ம அண்டமத்ய பானு ஜ்யோதி
நாதபிந்து நடும நதிகாத்புத ஜ்யோதி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அண்டபிண்டத்திற்கு நடுவில் விந்து ஆத்மாவே சோதியாகும்; பிரமாண்டத்திற்கு நடுவில் சூரியன் சோதியாகும்; நாத விந்துக்கு நடுவில் அற்புதமாகிய அதிக சோதியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கூகூ)

மன்னுராயி லேனி மஹிமீத நொககோட்ட
கொம்ம கலிகியுண்டு கொனலு சாகி
திவ்வெவேலனி வெலுகு தீபிஞ்சி யுண்டுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மண்ணுங் கல்லுமில்லாமல் உலகத்தின்மீது ஒரு கோட்டை கட்டப்பட்டிருக்கின்றது. அக்கோட்டைக்கு நீண்ட மூலையுண்டாயிருக்கும்; முனையுடன் கூடின அக்கோட்டைக்குள் விளக்கில்லாத பிரகாசம் ஒளி பெற்றிருக்கும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எ0)

வாயு.

வாயுவந்தே புட்டி வாயுவந்தே பெரிகி
வாயுவந்தெ மேனு வரூஸ தெலசி

வாயுவனக பிராண வாய்வு சிவுடயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வாயுவினிடத்திற் பிறந்து வாயுவினிடமே வளர்ந்து வாயுவினிடத்திலேயே மேலாகிய வரிசைக் கிரமங்களைத் தெரிந்து அப்படிப்பட்ட வாயுவென்றால் அதென்னவெனில் பிராணவாயுவே சிவனுகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எக)

காலிகாலி கூடி கடிகன்டினி கூடி
தோலுதோலு கூடி தொம்பி ஜேசி
ஜிட்டுஜிட்டு கூடி ஜீவுண்டு நாயரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) காற்று காற்றைச்சேர்ந்தும் ஆண்பெண்ணைச் சேர்ந்தும் தோல்தோலைச்சேர்ந்து தொந்திரவுபட்டு அதிலிருந்து வெளிப்படும் சுக்கில சுரோணிதமிரண்டும் ஒன்று சேர்ந்து ஜீவனுயினுன்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எஉ)

காலிகாலி கலசெ ககனம்பு ககனம்பு
மன்னுமன்ட கலசி மன்டமண்டெ
நீருநீரு கலசி நிர்மலம் பைனட்டி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) காற்று காற்றிற்கலந்தது, ஆகாசம் ஆகாசத்திற் சேர்ந்தது; மண்ணு மண்ணிற்சேர்ந்து பற்றியெரிந்தது, நீர் நீரிற்கலந்து நிர்மலமாயிற்று; சர்வ வியாபியாகி எங்கும் நிறைந்திருக்கும் ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எங)

ஆகாயம் (வெளி)

ஆகாசம்புன வாயுவு
மாகுனதாவாக்னியட்டுல மானஸமந்துன்

ஏகாகாருடு ஜகமுன
ஜோகைதனு தானெ வெலுகு சும்முர வேமா.

(இ-ள்.) ஆகாயத்தினிடம் வாயுவ்பொருந்திருக்கும்; அதெப்படியெனில் மரத்தினிடத்தில் தவாக்னியானதுஇருப்பதுபோல மனதினிடத்திலும் உலகமெங்கும் ஏகாகாரமான யீசன் தனக்குத்தானே பிரகாசித்துக்கொண்டிருக்கும் வேமா! எ-று. (எச)

பைலந்தே புட்டு சர்வமு
பைலந்தேலிய் யமையே பிர்மாண்டம்புல்
பைலுனு பந்தமு துடிபின
கைலாசமு பாசிமுக்தி கலுகுர வேமா.

(இ-ள்.) வெளியினிடத்திலே சகலமும்பிறக்கும்; அந்தவெளியினிடத்திலேயே பிரம்மாண்டங்களும் கலந்திருக்கும்;அப்படிப்பட்ட வெளியையும் மண் பெண் பொன்னென்னு மூவாசையையும் விட்டால் கைலாயத்தைக்கடந்து முக்தியுண்டாகும் வேமா!

பைலுன பந்தமு புட்டெனு
பைலுன பந்தம்பு கலசெ பரிகிம்பங்கா
பைலுனு பந்தமு கலிபின
பைலந்தே முக்தி பட்டபயலுர வேமா.

(இ-ள்.) வெளியினிடத்தில் ஆசை பிறந்தது; அவ்வெளியிலேயே ஆசை கலந்தது; இதையோசித்துப் பார்க்க வெளியையும் ஆசையையும் கலந்தால் வெளியினிடமே முக்தியானது வெட்ட வெளியாகும் வேமா! எ-று. (எசு)

பைலுன பந்தமு கப்பெனு
பைலுன பரமாத்முன்குனு வாஞ்சித மொப்பென்
பைலுன பந்தமு கலிபின
கைலாசமு பாசிமுக்தி காஞ்சுர வேமா.

(இ-ள்.) வெளியை ஆசைமூடிற்று. அவ்வெளியினில் பரமாத்மனுக்கும் ஆசை ஒப்பியது. அப்படிப்பட்ட அரிதாகிய

வெளியில் ஆசையைக் கலந்தால் கைலாயத்தைக்கடந்து முக்தியைக்காண்பர்கள் வேமா! (எஎ)

பைலுபைலுகானு பரிகிம்ப ஜாலக
பைலுலோனி வாரு பைட்ட படிரி
பைலுலோனி பால பரிகிம்ப தத்வமௌ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வெளி வெளியாகும்படி யோசிக்கமாட்டாமல் வெளிக்குட்பட்டவர்கள் அவ்வெளியைக் கடந்து வெளிப்பட்டார். அந்த வெளிக்குள்ளாக மிகவும் யோசித்துப் பார்க்க சுத்ததத்வமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

பைலுலோனிபைலு பரிகிம்ப நேரக
பைடபடிரி பட்ட பகலுகானு
பைலுலோனி பைலு பாவிம்ப முக்திரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வெளிக்குள்ளிருக்கும் வெளியைக்கண்டுணரக் கற்காமல் வெட்டவெளியாகவும் வெளிப்பட்டார்கள். வெளிக்குள்ளிருக்கும் அந்தவெளியைப்பார்க்க முக்தியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எக)

பைலுயில்லு கட்டி பரிகிம்ப நேரக
ப்ரமசி திருகுவாடு பாமருண்டு
பைலுவடின யதடு ப்ரஹ்மம்பு தானய்யே
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வெளிவீடு கட்டிப்பார்க்க வறியாமல் பிரமித்துத் திரியுமவன் பாமரனாகும்; மேற்சொன்னபடி வீட்டைக்கட்டி வெளிப்பட்ட புருடன் தானே பிர்மமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ0)

பைலுலோனி பைலு பரிகிஞ்சி சூடக
பைலுரூபு ஜடெச்சி ப்ரமயனேல

பைலுரூபு லெல்ல பரிகிம்ப தத்வமெள
விஸ்வதாபி ராம வினர. வேமா.

(இ-ள்.) வெளிக்குள்ளிருக்கும் வெளியைக்கண் டுணராமல் வெளிரூபத்தைப்பார்த்து பிரமிக்கவேண்டியதென்ன? அந்த வெளிக்குள்ளிருக்கும் மெல்லாரூபங்களையும் பார்க்கத் தத்வமாகும்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அக)

பைலுரூபுரூபு பைலுனு காஜேசி
பைலுரூபு பட்ட பயலு ஜேசி
பைலுலோனிபைலு பர்விம்ப தத்வம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வெளிரூபத்தில்ரூபத்தை வெளியாகும்படி செய்து அந்த வெளிரூபத்தை வெட்டவெளியாகச் செய்து அவ்வெளிக்குள் வெளியைக்கண்டு தெரிசிக்கத் தத்வமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஉ)

பைலுலோனி பயலு பரிகிஞ்சி சூடக
பைலுரூபு சூசி வலச்சே காக
முரிகியந்து மதினி மோகம்பு விட்டாயெ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வெளிக்குள்ளிருக்கும் வெளியைக்கண்டு தெளியாமல் வெளிரூபத்தைப் பார்த்து மோகித்ததல்லாமல் மெத்தவுங் கேவலமாகிய அழுக்கினிடத்தினில் ஆசையை விடாதவனாயினான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அங)

பைலு ப்ரஹ்மமனுச்சு பாஷிம்பு சுந்துரு
பைலுயேல தானு ப்ரஹ்மமகுனு
ப்ரஹ்மமைன பைலு பாவமுந் தெண்டகா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வெளியை பிரமமென்று மனதிலெண்ணியிருப்பார்கள்; காணவுஞ் சொல்லவுமரிதாகும் பிரமமானவெளியா

னது மனதினிடத்திலிருக்க அற்பமாகிய வெளி பிரமமாகாது; சர்வ வியாபியாகும் ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அச)

பயலேனதி யெந்தாயெனு
பயலுகுபிரம்மாண்டமுனகு பட்டெந்தையன்
ரயமுனவலி யெந்தோயனி
பயபடுதுரு தானிஜ-ூட பயலுர வேமா.

(இ-ள்.) வெளியானது யெவ்வளவு பிரமாணமானது; அந்த வெளிக்கும் பிரம்மாண்டத்திற்கும் பிரமாண மெவ்வளவா யிற்று யென்று கண்டு தெளியாமல் அப்பப்பா அதுயெவ்வ ளவோ வென்று அதைப்பார்க்கப் பயப்படுவார்கள்; விரை விலதை உற்று நோக்கில் வெளியாகும் வேமா! எ-று. (அரு)

எனிமிதி திக்குலு பயலே
எனிமிதி யிண்டிகினிஞரு யெக்குடுபயலே
வினரானிபயலு நடச்சின
கனராயச் சோட்டநேனு கலசிதி வேமா.

(இ-ள்.) திக்குகளெட்டும் வெளியாகி யெட்டுவீட்டிற்கும் ஆறு அதிக வெளியாகி செவியில் கேட்கப்படாத வெளிநடந் தால் பாரும் அவ்விடத்தில் நானுங் கலந்திருப்பேன் வேமா!

மண்டலம்.

மண்டலமுலுமூடு மரிசூடசூடகா
சந்த்ரசூர்யவக்னி ஜெந்து பிதப
தண்டி வெலுகுகானு தரணிகி தைவம்பு
கானுனுண்டு மிகுல கன்த வேமா.

(இ-ள்.) மண்டலங்கள் மூன்று; அதை யோசித்துப் பார்க்கப் பார்க்கச் சூரியன் சந்திரன் அக்கினி இம்மூவர்களாகும்; இவர் களாலுண்டாகும் பிரகாசமானது அற்பமேயாம்; மெத்த ஒளி யாகவும் உலகுக்கு தெய்வமாகியும் விளங்கும் பரம்பொருளின் பிரகாசத்திற்கு நிகரெந்த ஒளியுமுன்னிற்கமாட்டாது; வேமா

## சூரியன்.

சூர்யுனி பொடகன்ன சோலக விகசிஞ்சு
சுக்கலதொரகன்ன சுக்கடெந்து
கலுவதம்மிகாது கலது யீபூமினி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தாமரை மொக்குகளானது சூரியன் கிரணம்பட்ட மாத்திரத்தில் மலர்ந்து வெகுசுந்தரமாகவிருக்கும், அல்லிமொக்கானது சந்திரக்கிரணங்கண்ட மாத்திரத்தில் மலரும், வெள்ளி மூளைத்தவுடனே உதயகாலமாகும்; இம்மூன்று பிரகாசத்தையும் வெட்கிப்போகும்படி அதிக ஒளிபெற்று யெங்கும் பிரகாசிக்கச் செய்யும் ஒளியொன்று இவ்வுலகின்கண் உண்டு; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஅ)

அருண வுதயமுலுனு அஸ்தமானமு லென்னி
ஜனனமரண மென்னி ஜாது லென்னி
தீனியெருகு யோகி தேரகாடையுண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அருணோதயங்களெத்தனை, அஸ்தமிப்பது மெத்தனை, ஜனனமெத்தனை, மரணமெத்தனை, ஜாதிகளெத்தனை; இந்த மொத்தத்தை யறிந்தவன் தெளிவாளியாயிருப்பான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அக)

ப்ரொத்து பொடுசுடெரிகிப்ரொத்துபோவுட்டெரிகி
ப்ரொத்து குருங்குதானி போலிதெரிகி
ப்ரொத்து தெலியுநதடெ பொலுபொந்துப்ரம்மம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா

(இ-ள்.) பொழுதுவிடிவதை யறிந்தும் பொழுது போவதை யறிந்தும் பொழுதுபோகுமதின் திறத்தைப் பகுத்தறிந்து அந்த அரிதாகிய பொழுதின் குறிப்பையறிந்த மகாத்மாவே பிரமத்தில்

கலந்து தானே பிரமமாகும்; சர்வ வியாபியாகிய ஓராமா! கேளும் ,வேமா ! எ-று. (கo)

ப்ரொத்து பொடுச்சுசோட்ட ப்ரொத்து நிலசுசோ
ப்ரொத்துக்ருங்குசோட்ட பொஸகஜூச்சி [ட்ட
ப்ரொத்தெரிகினவாடு பெரலுபைன யோகிரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பொழுது விடியுமிடத்திலும் பொழுது நிற்குமிடத்திலும் பொழுதுபோகு மிடத்திலும் ஆராய்ந்துபார்த்து அதனிடத்தில் காணும் சூக்ஷமாகிய பொழுதையறிந்தவன் சரியான யோகியாகும்; சர்வவியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று.

எண்டநீடவன்னெ யேகமை யுண்டகா
நிண்டு குண்டலந்து நிதுர ஜேசி
தண்டிதத்வமெல்ல தலபோசி சூடரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வெய்யல் நிழல் இவ்விரண்டின் வர்னம் ஒன்றாயிருக்கையில் அந்தநிறம் நிறைந்திருக்கும் பாண்டத்தினிடத்தில் தூங்காமற்றூங்கி அங்கு சித்திர விசித்திரமாக உதிக்கும் அளவிடப்படாத தத்துவங்களையெல்லாம் ஆராய்ந்துபாரும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா! எ-று. (கஉ)

எண்டநீடசந்த மெருக நேர்ச்சினவாடு
யுண்டபோடதண்டு யுர்வி லோன
திண்டிபோது யோகி திருகுச்சு நுண்டுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வெயிலை நிழலுக்கு நிகராக வறிய கற்றுணர்ந்தவன் ஒரு நிமைப்பொழுதேனும் இவ்வுலகத்திலிருக்க அசம்மதனாகி ஆரணியத்தையடைவான்; கள்ளவேடம் புனைந்து பிரசாதமூர்த்தியாகிய துர்க்குணமுடையயோகி இப்பூதலத்தி லுலாவிக்கொண்டிருப்பனேயன்றி உத்தமகுணமுடைய யோகி நாட்டை

விரும்பாமல் காட்டையே யடைந்து சுகித்திருப்பார்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கூரு)

சந்திரன்.

சந்த்ருநீடனுனிக சக்ககா ரவிமீத
நுண்டஜூஎச்சி கொரத மண்டஜேசி
வென்னெலங் கலயுட்டெ வெலயங்க முக்திரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சந்திரனுடைய நிழலைச்சூரியன்மீது நன்றாயிருக்கப்பார்த்துக் குறைவாக யிருக்கச்செய்து நிலவினிற் கலப்பதே பிரகாசம் பொருந்திய முத்தியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கூசு)

சந்த்மாமநீட சக்கர் தனலோன
நுண்டஜூஎச்சிகேல னூதிபட்டி
வென்னலலைபடனு வெதக நந்தனேமுக்தி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சந்திரனுடைய நிழல் தனக்குள் நன்றாயிருக்கப் பார்த்து அந்நிழலைக் கையினால் ஊதிப்பிடித்து வெளியில்தேட அவ்வளவிலே முத்தியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கூ௭)

சந்த்ருடன்டிவாடே சாபம்பு சேதனு
களஹீனவ்ருத்தி கலிகெ கதரா
புட்மி ஜனுலகெல்ல புத்துலட்லுண்டுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சந்திரனை யொத்தவனே தாரையின்மீது அடங்கா மோகங்கொண்டு அம்மாதினைவிட்டுப்பிரியாமலிருந்தபடியால் பிருகஸ்பதி தீராச் சினங்கொண்டு சந்திரனை நோக்கி "அடா சந்திரனே! நாளுக்குநாள் உன்னழகாகிய கலைகள் குறைந்து

போகக்கடவதென்று சபித்தார். அந்தப்படியே சந்திரனுக்குக் கலைகள் குறைந்துபோகச் சிவபெருமானைச் சிந்தித்து வேண்டிக் கொண்டபடியால் சந்திரனைப் பரமசிவம் தனது சடாபாரத்தில் தரித்துக்கொண்டு சூரியனிடத்திற் சேர்த்துக் கலைகள் விருத்தி யாகும்படிக் கிருபைசெய்தார். அச்சந்திரனைப்போல உலகத்தி லுள்ள மனிதர்களுக்கெல்லாம் புத்திகள் அப்படிக்கேயிருக்கும்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கசு)

ப்ரத்யக்ஷமு பூதேவியு
ப்ரத்யக்ஷமு வாயுவக்னி ப்ராணேயும்புல்
ப்ரத்யக்ஷமு ரவிசந்த்ருலு
ப்ரத்யக்ஷமு கானலேரு பதரா வேமா.

இ-ள்.) பிரிதிவி அப்பு தேயு வாயு ஆகாசமென்னும் பஞ்சப் பிராணனும் சூரியசந்திரர்களையும் கண்ணாரக் காண்கின்றார்கள். இவைகளுக்கெல்லாங் காரணப்பொருளாகிய பரமாத்மசொரூ பத்தைக்கண்டு களிப்படையார்கள் உலகத்தினர்; வேமா! எ-று.

சுக்கிரன்.

சுத்தத்ருஷ்டி தெலசி சுக்ருடந் தட்டிவாடு
பட்டலேக மனசு பார விடிசெ
கன்னுபோயி துதனு காகி சந்தம்பாயெ
விஸ்வதாபி ராம வினரவேமா.

(இ-ள்.) சுக்கிரனை யொத்தவனே பரிசுத்தமாகிய இரண்டு கண்களினாலும் பார்த்தும் மனதை நிருத்தமாட்டாமல் ஓடவிட்டு மகாவிஷ்ணுவினால் ஒரு கண்கெட்டுக் காகத்தைப்போல ஒரு கண்ணுடையவனாகினான். சர்வ வியாபியாகிய ஓ ராமா! மனக் கண்களை ஓடவிடாமல் நிருத்திப் பரவஸ்து தெரிசனஞ் செய்து கொண்டு சதாகாலமு மிருப்பவனே பிரமமாகும், வேமா! எ-று.

சூபுகொஞ்சமைந்தெ சுக்கலு நண்டகா
ப்ராவுவெனுகுலேது பருவுகானு

க்ஞான தீபமுவலெ கன்னுலகுனு தோச்சு
விஶ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஆகாயத்தில் தாரகைகள் பிரகாசித்துக்கொண்டிருக்க அவைகளைப் பார்க்கும்பார்வை அற்பமாகில் அத்தாரகைகளும் அற்பமாகவே பிரகாசிப்பதுபோலத் தோன்றும். அதே தாரகைகள் முழுபார்வையினால் பார்க்கப் பூரணமாய்ப் பிரகாசிப்பதுபோல் மனக்கண்களினால் பூரணமாக உன்பார்வை நோக்க க்ஞான விளக்கையொத்துக் கண்களுக்குந் தோன்றும்; சர்வவியாபியாகிய் ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கக)

குருப்ருகஸ்பதியுனு குணமிஞ்சகயுலேக
சந்தமாம கிச்செ சாப மபுடு
குருடுகோபமூன கூடதெப்படிகைன
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சாந்தகுணம் சிறிதுமின்றி பிருகஸ்பதி பகவானனவர் கோபமிகுந்து சந்திரனுக்குச்சாபமிட்டார். ஆகையால் குருவே சினமடைய எப்போதாகிலும் ஆகாது; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (ரா)

## மேகம்.

மேக மட்டமைன மஹிருனி ஜெருச்சனு
சித்த மட்டமைன ஸ்திரமு ஜெருச்சு
மருப்பு லட்டமைன மகிமம்பு ஜெருச்சுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) விண்ணில் மேகங்கள் குறுக்காக சூழ்ந்திருக்கில் சந்திரனுடைய பிரகாசத்தைக் கெடுக்கும்; சித்தம் குறுக்காகில் திறத்தைக்கெடுக்கும்; மறதி குறுகிடில் மகிமையைக் கெடுக்கும் சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா. (ராக)

மேதினி லேனிவாதமுது மிக்குடமைன. பலம்புலேதுலே
நாதுக காலிலேனி மரி நப்புடுமேகமு கப்பதந்தகா

போதயுலேக சத்குருனி புத்ருடுகாடு நிதானத்ருஸ்யமா
வாதுல போகனுண்டுமிகவச்செதெரிங்கியுனுண்டுவேமனு

(இ-ள்.) உலகத்தின்கண் இல்லாத வாதங்களும் அதிகமாகிய பலமுமில்லை; காற்றில்லாதபோது மேகங்கள் ஆகாயத்திலவ்வளவாக கப்பிக்கொள்ளமாட்டாது; அதுபோல சற்குருநாதன் உபதேசமும் சாந்தமும் க்ஞானக்கண் பார்வையும் இல்லாமல் மாணுக்கனும் புத்திரனுமாகமாட்டான்; ஆதலால் வாதுக்குப் போகாமலிருந்து மேல்வருங்காரியத்தை அறிந்துகொண்டிருப்பாய் வேமனு, எ-று. (ாஉ)

மேகுனி யாடம்பரமு
மேகமுலோ யுருமுமெருமு மெருவடி பிடுகுன்
மேகுனி யானெடி பாவமு
மேகாடம்பரமு தெலிய மேதினி வேமா.

(இ-ள்.) இவ்வுலகத்தில் மேகத்தின் ஆரவாரங்களும் அம்மேகத்திற்குள் மின்னலும் பிரகாசமும் இடியும் அந்த மேகத்தில் சார்ந்துகொள்ளுந் தெளிவும் அங்குத் தோன்றும் ஒலியும் அறிந்து கொள்ளுவோம் வேமா! எ-று. (ாங)

## மின்னல்.

மெருமு மெரயகானு மேகுநகு பலிமி
கதசிவானகலுகு கனுதிகானு
மெருமு மெருவகுன்ன மரிவானலுனுசுன்ன
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மின்னல் மின்னிட மேகத்திற்குப் பலமாகும்; அப்பலத்தினுல் கணக்கில்லாத மழைபொழியும்; அப்படிப்பட்ட மின்னல் மின்னுவிடில் ஒருதுளி மழையும் பெய்யமாட்டாது; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (ாச)

தளுகுமெருமு ஜூபச்சி தரலோன ஜனுலெல்ல
கத்துலேது வான கனதகானு

இதிகோ யதிகோயனுசு யிகயேடதந்துரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பளிச்சென்று மின்னி மறைந்துபோகும் தனுக்கு மின்னலைக்கண்டு உலகத்திலுள்ள ஜனங்களெல்லாம் சிலர் மழை பெய்யுமென்றும் சிலர் மழை பொழியாதென்றும் சிலர் இதோ பெய்யுமென்றும் சிலர் இனியேது மழையென்றும் சொல்லுவார்கள் ; சர்வ வியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா ! எ-று. (௯௫)

ஸ்வாதிமெருமு ஜூடச்சி சந்தோஷபடுதுரு
ஸ்வாதிமெருமு யேமி சபலமௌனு
மெருமு தினமூராக மேகம்பு குருசுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சுவாதி நட்சத்திரத்தின் மின்னலைக்கண்டு சந்தோஷப்படுவார்கள்; அச்சுவாதிமின்னலினலென்ன மழைபொழியுமா? மின்னலும், நாளும்வராமல் மேகங்கள் மழை பெய்யுமா? பெய்யமாட்டாது; சர்வ வியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா ! எ-று. (௯௬)

இடி.

உருமுலு வுரிமின யப்புடு
சிரமுன்படி முணுகினட்ளு சித்தமு ப்ரமயுன்
தரபிடுகொக்கட படினனு
மூரியுசு கட்சிதிமடண்ரு மூந்துகவேமா!

(இ-ள்) இடிகளிடித்தபோது சிரத்தில் விழுந்து பிராணன் போயினதுபோல் சித்தப்பிரமையுண்டாம்; இடியானது உலகத்தில் எங்கே விழுந்தபோதிலும் ஆஹா இன்று இடிக்குத் தப்பிப்பிழைத்தேன் என்பார்கள் மூடமதிகள் ; வேமா ! எ-று (௯௭)

பிடுகு படினதாவு தட்பட்காநுண்டு
பிடுகு படினவானி புண்ணியமே மனவச்சு

பிடுகுபடின கொம்ப நடககூனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இடிவிழுந்த இடமானது அலங்கோலமாயிருக்கும் இடிவிழுந்தவீடு இடிந்துபோகும்; சிரத்தில் இடிவிழுந்தவனுடைய புண்ணியமென்னென்று பகரலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௱அ).

பிடுகுனு யரசேத பிகபட்டியந்துலோ
கல்மஷம்பு லெல்ல கடகு தீசி
கடமகரமுசேத கலியுகமுனு ப்ரோச்சு
கர்மகர்த்த நெருக கதர வேமா.

(இ-ள்.) இடியை உள்ளங்கையில் பிருவாகப்பிடித்து அதற்குள்ளிருக்கும் அழுக்கையெல்லாம் வெளிப்படுத்தி, பரிசுத்தமாகிய அவ்விடி மற்றதையும் கரத்தில் வைத்துக்கொண்டு இக்கலியுகத்தில் காத்துரக்ஷிக்குங் கர்த்தனாகிய பரப்பிரமத்தைக் காணவேணும் வேமா! எ-று. (௱க).

தனகாந்தியு பயலெல்லனு
தனகாந்தியெ யடுகுமடுகு தரமைநுருமுன்
தனகாந்தியு பயலெல்லனு
தனகாந்தியெ தலபுவலன தகுனுர வேமா!

(இ-ள்.) இடியில் தன் பிரகாசமே வெளியெல்லாம் நிறைந்திருக்கும்; அவ்விடியின் பிரகாசமே மண்ணும் விண்ணும் நிறைந்திருக்கும்; அந்த யிடியின் ஒளியினால் தன் மனதிலும் பிரகாசித்துக் கொண்டிருக்கும் வேமா! எ-று. (௱க0)

மழை.

வான ராகடமரி ப்ராணம்பு போகட
கானடதுயெந்த கனுனிகைன
கானபடினமீதி கலியெட்ஞு நடுசுரா
விஸ்வதாபி ராம வின்ர வேமா.

(இ-ள்.) மழைவருவதும் பிராணன் போவதும் எப்படிப்பட்டகனவானுக்காகிலுங் காணப்படமாட்டாது; அப்படியல்ல

வென்று ஒருக்கால் காணப்படுமாகில் அம்மகாத்மாவினிடம் கலியின்மாய்கை என்ன செய்யும்? ஒன்றும் செய்யமாட்டாது; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௱௬௧)

வானனு தடியனி வாருனு
பூனுக வேமன்னசேத பொரயனிவாருன்
நாலுதிக்குல வெதகின
கானமுவானந்தவானி கதரா வேமா.

(இ-ள்.) மழையினில் நனையாதவர்களையும் வேமன்னுவினுல் கழிக்கப்பட்டவர்களையும் நாலுதிக்குகளில் தேடியும் மேற் கண்ட மழையை யொத்தவனைக் காண்பதறிதாகும் அல்லவா? வேமா! எ-று. (௱௬௨)

வான குறுவகுன்ன வச்சுனு க்ஷாமம்பு
வான குறுசிதேனி வருதபாரு
வருத கருவுரெண்டு வருசதோநெருகுட
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மழைபெய்யாமலிருந்தால் உலகத்திற்கு க்ஷாம முண்டாகும். காலத்தில் மழைபெய்யுமாகில் வெள்ளம் பெருக் கெடுத்தோடி உலகம் க்ஷேமமடையும். ஆகையால்க்ஷேமம் க்ஷாம மிரண்டையும் வரிசைக்கிரமமாக அறிந்துகொள்ளக்கடவீர்கள் நேசர்களே; சர்வ வியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! (௱௬௩)

சமுத்திரம்.

சமுத்ரமுனகு ஜடெட சரியேதியுனு லேது
அட்டிஜலதிநீரு னனுவுகாது
அனுவுகானிநீரு யதியேமிசேயனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) கரைகாண்ப தரிதாகியுங் கணக்குக்கடங்காததாகி யும் அபாரமாகியும் பூமியை வளைத்துக்கொண்டிருக்கும் கடலைப் பற்றி யோசிக்குமிடத்தில் அக்கடலுக்குச் சரியான கனம்

4

பொருந்தியது யெதுவுமில்லே; அப்படிப்பட்டக் கடல்ஜலம் உப்பேயல்லது இனிப்பாகமாட்டாது; அந்த இனிப்பில்லாத தண்ணீரானது யேது செய்வதற்கு? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று (௱கச)

ஓடசத்வமெல்ல நடிசமுத்ரமுலோன
பண்டி சத்வமெல்ல பைட்ட னுண்டு
ஆடதானி சத்வ மேடனோ ஜடரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) கப்பலின் ஓட்டமெல்லாங் கடலுக்குள்ளும் வண்டியின் ஓட்டமெல்லாம் பூமியின்மீது மிருக்கும்; பெண் பிள்ளேயின் ஓட்டமானது யெங்கோ அதைக் குறிப்பிட்டுப் பாரும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௱கரு)

## விதை.

வேயவேயகானு வித்தன மனுபிஞ்சு
வேயவேய ப்ரபலி வ்ருக்ஷமகுனு
தெலிய தெலியுவாடு தேவுடனந்தகு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) போடப்போட வன்றோ விதையெனத் தோணும்? அவ்விதை போடப்போடச் செழித்துத்தழைத்துப் பெருத்தமரமாகும்; இந்த மர்மத்தைத்தெளிவாகத்தெரிந்துகொண்டவனேத் தேவனெனத்தகும்; சர்வவியாபியாகிய ஓராமா! கேளும் வேமா!

வித்துமொக்கைநேனி வ்ருத்திகா னேரது
வித்துசக்கனுன்ன வ்ருத்தி யகுனு
வித்துவிஸ்வகர்ம விவரிஞ்சி சூடரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) விதைமழுங்கினதாயின் முளேத்துச் செழிக்கமாட்டாது; அதுவே விதைமழுங்காமல் நன்ருயிருக்குமாகில் முளேத்துசெழித்துத் தழைத்துப் பருத்தமரமாகும்; ஆகையால் அவ்

விதையை தீர்க்கமாக யோசித்துப் பார்க்க விஸ்வகர்மாவென்று சொல்லத்தகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

செட்டந்து வித்து புட்டெனு
அட்டாவித்துனனு செட்டு யமரகபுட்டென்
செட்டுனு வித்துனு ரெண்டுனு
புட்டினயதிதெலியவலெனு புவிலோ வேமா.

(இ-ள்.) செடியினிடத்தில் விதைபிறந்தது, அந்த விதையி னிடத்தில் செடிபிறந்தது; ஆகையால் அந்தச் செடியும் விதையு மிரண்டும் இவ்வுலகினிற் பிறந்த அதிசயத்தைக் கண்டு தெளிய வேணும் வேமா! எ-று. (௱கஅ)

செட்டுமொதலுலேது செலகி கொம்மலுநால்கு
பட்டபைட மானு பண்ளு பண்டு
தினகனெசவிலேது தீபுலு பஹுமெண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) செடி முதலேயில்லை; அப்படிப்பட்ட செடியில் தழைத்தும் செழித்துவிளங்கும் கொம்புகள் நான்குளது; அந்தச் செடியில் வெட்டவெளியாகக் கனிகள்பழுக்கும், அக்கனி யைப் புசித்தமாத்திரத்தில் உருசியில்லை, அந்தக்கனியைப்புசிக் கும் விதத்தைத் தெரிந்து புசிக்க அளவில்லாத இனிப்புண்டா கும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௱கக)

செட்டுநந்தெ புட்டு செலரேகி காயலு
தனரகத்திசேத தாகவலயு
வண்டி தினகநாயெ வர்னம்பு தெலியுடு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) செடியினிடத்திலே பிறக்கும் செழுமையான காய் கள்; அக்காய்களைக் கத்தியினாலே அறிந்து சமைத்துப் புசிக்க லாயிற்று; அதனுடைய வர்ணத்தைத் தெரிந்து கொள்ளுங்கள்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௧உ0)

செட்டுமொதடிபானு சிவுனிகன்டனு தீசி
செட்டுமொதடபோசி சிவுனி கொலசி
செட்டுவலெனெ யுண்டெ சாவெட்ளு கனுகுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) செடியின் முதற்பாலே சிவனுடைய கண்களினிடத்தில் எடுத்து செடிக்கி முதலில் வார்த்து அச்சிவபெருமானைத் தொழுது அச்செடியைப்போல விருந்தால் சாவெப்படி யுண்டாகும்? சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஉக)

முஷ்டி வேபசெட்டு மொதலுகா ப்ரஜலகு
பரக மூலிகலகு பனிகிவச்சு
நிர்த்த யாத்மகுண்டு நீச்சுடெந்துனகுனு
பனிகிராடுகதற பரக வேமா.

(இ-ள்.) வேம்பு கெச்சை கண்டங்கத்திரி எட்டிமுதலான செடிகள் மெத்தக் கசப்பாயிருக்கினும் அவ்வஸ்துக்கள் மனிதர்களுக்குப் பலவித வியாதிகளுக்கு மூலிகைகளாய் உபயோகமாகும்; சற்றேனுந் தயாளமில்லாத ஆத்மாவானவன் யேதுக்கும் உபயோகப்படமாட்டான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஉஉ)

சித்தமைன வேரு சிதிலமை னப்புடெ
ப்ரக்ருதி யனெடிசெட்டு பஸ்மமௌனு
கோரிகலனி யேட்டி கொம்மலு னுண்டுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சித்தமென்னும் வேரானது அற்றுப்போனபோதே மாயையென்னுஞ் செடி பஸ்பமாகும். அந்த மாயை பஸ்பமானவுடனே கோரிக்கையென்னுங் கொம்புகளுமிருக்குமா? இராது; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஉ௩)

மரம்.

மானுலோன னக்னி மரியுண்ட காவச்சு
அக்னிலோனி மானு கலிகிகாது

மானிலோனி யக்னி மரியாத சம்சாரி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மரத்திற்குள்ளாக அக்கினி பொருந்தி யிருக்கலாம்; அக்கினிக்குள்ளாக மரமிருக்கத் தரமாகாது. ஆகையால் சம்சாரியானவன் இல்லறத்தி லிருப்பதெப்படியாகு மென்றால் மரத்திற்குள்ளே அக்கினி யிருப்பதுபோலாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஉச)

மாகுன னனலமு புட்டுனு
மாகெருகது யன்லமுனிகி மனுஜ—லுமரித்ர
மாகுனநனலடு வலெனே
காகாரினியோகியுண்டு க்தரா வேமா.

(இ-ள்.) மரத்தினில் அக்கினிபிறக்கும்; அவ்வக்கினியின் இருப்பை மரமறியமாட்டாது; அக்கினி மரத்திற் பிறப்பதும் அம்மரமானது அக்கினி தன்னிடமிருக்கும் இருப்பை யறியாதது போல மனிதர்கள் சம்சாரத்திலிருக்கும் சுகதுக்கங்களை யறியமாட்டார்கள். அன்றியும் இம்மர்மத்தைக் குடுதணிக்த யோகி யறிந்து அன்னிலையைவிட்டுப் பிரியமாட்டார் வேமா!

மாகு காலவேசி மஹிமீத நொகஜாண
பூனிதிருகுசுண்டு பொந்துகானு
கால்சி நட்டிமானு கடுரம்யமையுண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உலகத்தினிலொரு காமியாகிய பெண் மரத்தை யெரியப்போட்டு அம்மரத்தைக் கையிற்பிடித்துத் திரிந்து கொண்டு பொருத்தமா யிருப்பள். எரிந்துபோகும் மரமானது பார்க்கமெத்தச் சுந்தரமாக விருக்கும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஉரு)

மொதட்டி தருவுநந்து மூடுகொம்மலு புட்டெ
அசலு கொன்லு தீகே லாகுலமரி

புவுலு பிந்தெலெல்ல புவனமுல் நிண்டெரா
விஸ்வதாபி ராம வினர வேமா

(இ-ள்.) முதற் செடியினிடத்தில் மூன்று கொம்புகள் பிறந்தன ; அக்கொம்புகளில் கொழுந்தும் நுனியும் இலைகளும் கொடிகளும் பூவும் பிஞ்சுகளும் மூவுலகங்களிலும் நிறைந்திருக்கின்றன ; சர்வவியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா ! எ-று (கஉஎ)

ஆகு கானவச்சு ஹரிஹரா துலகைன
கொம்ம கானராது கோரி சூட
கொம்ம கானராக கொனியாட குந்துரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சகலரும் இலையைக் காணலாகும் ; அவ்விலைகளுக்கு ஆதாரமாகிய கொம்பை பிர்மா விஷ்ணு மயேசுவரன் முதலானோருங் காணவரிதாகும் ; அந்தக் கொம்புகளைக் காணுமல் கொண்டாடாமலிருப்பர்களா உலகிலுள்ள மனிதர்கள் ? சர்வ வியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா ! எ-று. (கஉஅ)

மொதட்ட போயுநீரு முந்து பீஜமுகெக்கி
மொதல குரிகிவேக மொலக லெத்து
மொலக ப்ருதிவியெரிகி வெலயுனு வ்ருட்சானு
விஸ்வதாபி ராம வினர வேமா.

இ-ள்.) முதலில் வார்க்குந் தண்ணீர் முன்னம் விதைக்கேறி அவ்விதையூறி விரைவில் முளையெடுக்கும் ; அம்முளையானது உலகினில் வளர்ந்து அந்த மரத்தின் விதைகளினுல் அனேக தருக்களுண்டாம் ; சர்வ வியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா !

## ஸ்தாவரம்

ஸ்தாவரமுல பட்சிந்துரு
பாவிம்பக ஜகதிவாரு பஹுவித ருசுலன்

ஆவலி தமலோ தாமே
தீவரபடி தம்முதாமெ திந்துரு வேமா.

(இ-ள்.) இவ்வுலகத்தவர்கள் பலவித காய்கனிகளையும் பல் ஜாதி மிருகங்கள் நீர்வாழ்வன பரப்பன முதலான வெகு ஜீவன் களைப் புசிப்பார்கள்; ஏனெனில் அவைகளினிடத்தில் வெகு வாகிய உருசிகளிருக்கின்றபடியால் பிரியமாகப் புசிப்பதன்றியுந் தங்களைத் தாங்களே தீவரப்பட்டு தின்பார்கள் வேமா! எ-று.

கதலனி ஜீவமு லன்னியு
துதமொதனுக ஞறுருச்சுல தொலககயுண்டுன்
கதலெடி ஜீவமு லன்னியு
கதலக கஷ்டம்புலௌனு வசுதலோ வேமா.

(இ-ள்.) எல்லா ஜீவன்களும் உலகத்திலுண்டென்றும் அவைகளினிடத்தில் அறுசுவைகளும் நீங்காமலிருக்கும்; தவிர அசையும் படியான எல்லா ஜீவன்களும் அசையாமலிருக்குமாகில் அவைகளுக்கு கஷ்டங்களாகும். வேமா. எ-று. (கருக)

புடமினிகல நடஜீவுலு
படபாக்னியு தீவுலகுனு பாரெடி யொடனுன்
ஜடமுன கூடின யப்புடெ
கடனுப்ரளயமனெடு வஸ்துகல்குனுவேமா.

(இ-ள்.) இவ்வுலகிலுள்ள நடைஜீவன்களும் வடவாமுகாக் கினி யிருக்கும் தீவுகளுக்குப் போகும் பரவைகளின் உடலும் சடலத்தில் கூடினபோதே முடிவில் பிரளயமென்னும் வஸ்து உண்டாகும் வேமா! எ-று (கருஉ)

நடஜீவுல ஸ்தாவரமுலு
வடிசனிபோவங்கனெரிகி பாவமுலோனே
விடுவக ப்ரம்மமு தலச்சரு
வடிச்சனிபோகுந்துரேமோ வ்சுதலோவேமா.

(இ-ள்.) நடப்பன பறப்பன முதலான சகல ஜீவன்களும் நாம் பார்த்துக்கொண்டிருக்கிறபோதே அழிந்துபோவதை

யறிந்தும் மனத்திற்குள்ளே சதா பிரமத்தை நினைக்கமாட்டார்கள் பூதலத்திலுள்ள ஜனங்கள்; அப்படித் தாங்கள் மரணமடையா திருப்பார்களென்னமோ வேமா. எ-று. (கங௩)

மலைகள்.

கொண்டலெல்ல மேயு மெண்டைன கபிசேன
தண்டுஜேசெ ராம தரணி விபுடு
லங்கயேலெ நொகடு லட்சுமி கடாக்ஷான
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இப்பூதலத்திற்குச் சக்கரவர்த்தியாகிய ஸ்ரீராமசந்திரமூர்த்தி காட்டில் வசிக்கும் வானரசேனைகளைப் பதாதிகளாகக் கூட்டிக்கொண்டு சென்று அவ்வானரங்களால் அளவிறந்த மலைகளைத் தருவித்துக்கடலில் அணைகட்டி இலங்கையைக் கிட்டி ராவணாதி ராக்கதர்களை மடித்து இலங்கையை லட்சுமி கடாக்ஷம் பெற்ற விபூஷணர்க்குப் பட்டங்கட்ட அதை யாண்டானவன்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கங௪)

கொண்டகுதர மன்ன குண்டபாண்டவ மன்ன
உப்பு லவணமன்ன யொகட்டி காதெ
பாஷலென்னி யைன பரதத்வ மொக்கட்டே
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மலையைக் கொண்டயென்றாலும் பாண்டத்தைக் குண்ட யென்றாலும் உப்பை லவணமென்றாலும் ஒன்றல்லவோ; பாஷைகள் பலவாகிலும் பரதத்வமொன்றேயாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கங௫)

காடு.

அடவிலோன லேது ஆகாசமுன லேது
ய்ரயலேது தீர்த்த யாத்ரலந்து

ஒடலு சுத்திஜேசி யொடயுனி ஜ-டோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பரப்பிரமம் காட்டிற்குள்ளேயுமில்லை விண்ணுலகத்திலுமில்லை தீர்த்தயாத்திரை செய்யுமிடத்திலுமில்லை; உடலைச் சுத்தஞ் செய்து உடையவனுகிய பரப்பிரமத்தைப் பாரும்; சர்வ வியாகியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கநக)

எமதண்டனை.

யமுனிபாத்திரி யப்புடெவெடலியு
சமமு சந்திரகளனு ஸரக்ஜீவி
க்ரமமுகானு ஜேரி காலமேகமுநுண்டி
சினுகுகானு வ்ராலு க்ஷிதினி வேமா.

(இ-ள்.) யாதனு சரீரத்தைப் பெற்று யமதண்டனையே யடைந்து வெளிப்பட்ட பிராணனுனது மூலப் பிரகிருதியிற் சேர்ந்து சிலகாலம்மெழுகுண்டையிலொட்டிய அணுப்பிரமாணமாகவிருந்து பெருங்காற்றினுல் அப்பிராணனுனது மூலப்பிரகிருதியை விட்டு மேகத்திற் சேர்ந்து அம்மேகத்திலிருந்து துாத்தலாக உலகத்திலுதிரும்; வேமா! எ-று. (கநஎ)

சினுகுலுபடி தாமொலச்சின
கனதரமுக ஸஸ்வரூபு காச்சின வென்னே
மனுஜ-லு தினகாநப்புடு
கனயிந்திரியமுலகு ப்ராந்தி கலுகுர வேமா.

(இ-ள்.) மழைத்துளிகள் விழுந்து தான் முளைத்த பல விருக்ஷங்களில் நின்றும் கனிகளையும் நவதானியங்களையும் இன்னும் பல வஸ்துக்களையும் மனிதர்கள் தின்றபோது இந்திரியத்தில் கலந்து ஸ்திரீயினிடத்தில் மோகமுண்டாகும் வேமா. எ-று. ()

இந்த்ரியமுல ப்ராந்தி யீரேடு ஜகமுலு
மந்து பெட்டிநட்டி மருவு வலெனெ

பொந்துசுக்முசேத புத்ருலகாஞ்சிரி
சகலஜனுலு யிட்ளு ஜகதி வேமா.

(இ-ள்.) இந்திரிய புஷ்டியினல் காமமதிகரித்து மருந்து வைத்ததை யொத்து யீரேழுலோகத்தில் வசிக்குஞ் சகல ஜனங்களும் மோகமீரினவர்களாகி ஸ்திரீகளைக் கூடியணையுஞ் சுகத்தினல் புத்திரர்களைப் பேற்ருர்களிந்தப்படி ஜெகத்தினில்; வேமா! எ-று. (கஙக)

## பூலோகப் பிராணிகள்.

இஹமுநந்து புட்டி யிம்பாரு சுன்னட்டி
ஜனுலு ம்ருகமு பக்ஷி ஸ்தாவரமுலு
ஜங்கமாதுலனுட்ட ஜகதிலோ பவகோட்டி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இப்பூதலத்தினிற் பிறந்து இன்பமடைந்திருக்கும் படியான மனிதர்கள் மிருக்ங்கள் பறவைகள் தாவரஜங்கமாதிக ளென்னும் பிராணிகள் ஜெகத்தினிற் பல கோடியாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கச0)

அண்டஜமுலு பட்டு யலருப்ராணுலு கொன்னி
புத்புதமுலு புட்டி புருஷுலு கொன்னி
ஸ்வேதஜமுலு புட்டு ஜீவுலு கொன்னிரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அண்டஜங்களிற் பிறக்கும் பிராணிகள் சிலது; புத்புதங்களிற் பிறக்கும் புருஷர்கள் சிலர்; ஸ்வேத ஜங்களிற் பிறக்குஞ் சீவன்கள் சிலது; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கசக)

## நரர்.

புட்டிசச்சு நருலு பூர்வமு தெலியக
பட்டயலு னுண்டு ப்ரமசி யிபுடு

தெலிவிடிசி பூமி திருகங்கனேட்டிகி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பிறந்து மரிக்கும் மனிதர்கள் ஆதியிருப்பை யுணராமல் வெட்ட வெளியிலிருந்தும் பிரமித்துத் தெளிவைவிடுத்து இப்போது மாய்கைக்குள்ளாகித் திரிவதேதுக்கு; சர்வ வியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா ! எ-று. (கசஉ)

## மிருகங்கள்.

ம்ருகமு ம்ருகமுலனுச்சு ம்ருகமுல தூஷிஞ்சு
ம்ருகமுகன்ன செடுகு மூர்க்குடௌனு
ம்ருகமுகன்ன குணமு மூர்க்குனகுனு லேது
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மிருகம் மிருகங்களென்று மிருகங்களை தூஷிக்கும் மனிதன் மிருகத்திற்காகிலுங் கெட்ட மூர்க்கனுவான்; அம்மிருகத்திற்காகிலும் மேலான குணம் மூர்க்கனுக்குமில்லை ; சர்வ வியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா ! எ-று. (கசங)

ம்ருகமு நருலகுநில மேலுகா பசுவுலு
பாலுபிண்டதுன்ன பரகபுட்டி
கஷ்டபடனுகானி கர்ம மீடேரக
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இவ்வுலகத்தில் மனிதர்களுக்காகிலும் மிருகங்கள் மேன்மையாக விளங்கும்; அதெப்படியெனில் பசுக்கள் பால் கரக்கவும் எருதுகள் வயல்களை உழவும் பிறந்து கஷ்டப்படுமல்லாமல் கர்மத்தை யொழிக்கமாட்டா; சர்வ வியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா ! எ-று. (கசச)

## எருது.

எத்துலைகனகானி யேடாதி தெல்பிதே
மாட்டதெல்சிநடுச்சு மர்மமெரிகி

மொப்பெ தெல்பராது முப்ப தேண்ளகுனைன
விஸ்வதாபி ராம வினர் வேமா.

(இ-ள்.) நான்கறிவுடைய எருதையாகிலும் ஒருவருடகாலம் பழக்கினல் சொல்லையறிந்து நமதிஷ்டத்தைப் போல மர்மத்தை யுணர்ந்து நடக்கும்; முப்பதுவருடகாலம் துஷ்டாத்துமனுக்குப் பலவாறு ஓதியபோதிலும் வழிப்படமாட்டான்; சர்வ வியாபி யாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கசுரு)

எத்து மொத்துகேல யிலவேத சாஸ்த்ரமுல்
மூக்தராலு கேல முசலி மகடு
சலிதி லேனியிண்ட சம்சாரமிதியேல
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) எருதைப்போன்ற ஞானசூனியனுக் கிவ்வுலகத் தில் வேதசாத்திர புராணங்க ளேதுக்கு! யௌவனமாதுக்கு வயது சென்ற கிழமாப்பிள்ளை யேதுக்கு; பழையமுதில்லாத வீட்டில் சம்சாரமேதுக்கு; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கசுசு)

பசு.

ஆவுபாலு சிவுனி கபிஷேகமுன கௌனு
ஆவுபாலு ஜூட யௌஷதம்பு
ஆவுபாலுநன்ன அதிசய மெருகுடீ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பசுவின்பால் சிவபெருமானுக்கு அபிஷேகத்திற் காகும்; அப்பசுவின்பாலே அவிழ்தத்திற் குபயோகமாம்; அப் படிப்பட்ட பசுவின்பாலிலிருக்கும் அதிசயத்தையறிந்து கொள் ளுங்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று.

கங்க கோவுபாலு கரிடெடைனனு சாலு
கடவடைனநேல கஜமு பாலு

பக்தி கலுகுகூடு பட்டெடே சாலுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) காசிதீர்த்தமும் பசுவின்பாலும் ஒருகரண்டிகிடைத்தாலும்போதும், யானையின்பால் ஒரு மொடாகிடைக்கினும் யேதுக்கு; அதுபோல பிரியத்துட னளிக்கும் அன்னம் ஒரு கவாளமே போதும், பிரியமின்றி குரோதத்துடன் ஒரு பானையன்னம் பரிமாறின போதிலும் பிரயோஜனமேயில்லை; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ.று. (கசஅ)

கொட்டுட்டாவுபிதுக குண்டகொம்போயின
பாலுயீக தன்னு பண்ணு வூட
லோபிவானி நடுக லாபம்பு லேதயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மலட்டுப் பசுவைக்கறக்கப் பாண்டங்கொண்டு போனால் அப்பசுவு பால்கொடாமல் பல்லுதிரவுதைக்கு மாப்போல லோபியானவனை யாசிக்க சொற்பலாபமேனு மில்லையையா; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கசக)

பசுலருபு வேரு பாலொக்க வர்னமௌ
புஷ்பஜாதி வேரு பூஜ யொகட்டெ
தர்சனம்புலு வேரு தைவம்பு வொக்கட்டே
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பசுக்களின் ரூபங்கருப்புவெள்ளை சிகப்புயென்னும் பலவிதமா யிருக்கினும் பாலின்வர்னம் ஒன்றேயாகும்; மல்லிகை முல்லை கோங்கு மந்தாரை சம்பங்கி நொலசம்பங்கி யென்று பலவித புஷ்ப்பஜாதிகளிருக்கினும் பூசையொன்றேயாம்; பகவானுடைய தெரிசனங்கள் வெவ்வேறுயிருக்கினும் தெய்வம் ஒன்றேயாம்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கடு0)

## எருமை.

ஒடலு நல்லனைன ஓர்ப்பைன சதியைன
குணமு கலிகெநேனி கோட்டிசேயு

வாதயெனும் பாலு ரோதன வச்சுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-இ.) தேகங்கருப்பாகிலும் பொருமையுள்ள மனேயாளாகிலும் நற்குணங்களுண்டா யிருக்குமாகில் கோடிபொன்பெறுவாள். அதுபோல சூடுபோட்ட எருமைப்பாலைக் கேவலமாகச் சொல்லப்போமா ? சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா!

கடுபுநிண்ட தவுடு கம்பலோ பெட்டினு
சன்னிமுட்டனீயது கொன்னிபர்ரெ
வாரகாந்தலெல்ல வலதுரா வூரிகெ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சிலது எருமைமாடுகள் வயிறு நிறையும்படி தவிடு கூடையில் வைத்தபோதிலும் முலேயைத் தொடவொட்ட மாட்டாது ; அதுபோலச் சிலது தாசிகள் பணங்கொடுத்தபோதிலும் பிரியம் வைக்கமாட்டார்கள் ; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஙஉ)

## எருமைக்கடா.

துன்னபோது மடக துரிதமுகா லேது
யெத்து மடககண்டெ யெச்சுகாது
முக்த்ராலிமகடு முஸலினிமெச்சுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) எருதுமாடு ஏரிற்கட்டி உழுவதைப்பார்க்கிலும் எருமைக்கடாவைக் கட்டி உழுவது மேலாகமாட்டாது; அதுபோல வயது மங்கையின் கணவன் கிழவியைப்பார்த்து மெச்சமாட்டான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா! எ-று.

## குதிரை.

குர்ரமுனகு தகின குருதைன ரௌதுன்ன
குர்ரமு லிலநடுச்சு குணமுகானு

குர்ரமுதனவன்டி குணமேல தெலியரோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) குதிரைக்குத்தக்க வல்லவனாகிய சாரதியிருக்க அக்குதிரையானது குணமாக வுலகில் நடக்கும்; அப்படிக் குதிரையைச் செலுத்தும் சாரதியைப்போல தனக்குள்ளிருக்கும் ஐம்புலன்களை யடக்கும் குணத்தையேன் அறியமாட்டார்களோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கசு௪)

கழுதை.

காடிதேமெருங்கு கந்தம்பு வாசன
குக்கயேமெருங்கு கொப்ப கொத்தி
அல்புடேமெருங்கு ஹருனி கொல்செட்டிரக்தி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சந்தனத்தின் சுவாசனையைக் கழுதையென்ன அறியும்? சிறிதென்றும் பெரிதென்றும் நாயறியுமா? அதுபோல அற்பன் அரனைச்சேவிக்கும் விதம் அரியமாட்டான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கசுரு)

காடிதெ தனுவந்து கந்தம்பு பூசின
யேமி யெருகஜால கெகசிதன்னு
யிடுகானி வானி யிஷ்ட மீலாகுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) கழுதையின் தேகத்தில் சந்தனத்தைப் பூசினால் அதன் குணத்தையறியாமல் எட்டியுதைக்கும்; அதுபோல அற்பன் அரனைச்சேவிக்கும் விதம் அறியமாட்டான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று (கசுசு)

ஆடு.

மேகலொக நூறு சனிநனு
ப்ராகட்டமுக நொக்கோதி பர்னம்பெக்குன்

ஆகவுலு நூறு சனிநனு
கோகோயனி யொக்கங்க கூசெர வேமா.

(இ-ள்.) ஆடுகளொருநூறு சென்றக்கால் அதுகளைக்கண்டு பயந்து ஒரு குரங்கு மரத்திலேறிக்கொள்ளும்; அக்குரங்குகள் நூறு சென்றிடக்கண்டு ஒரு நரியானது கோவென்றலறிக் கூவியது; ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஉஎ)

கொர்ரெ கும்புல தோடேலு கொதுவதிர
சொச்சி பட்டெனு கொர்ரெனு சொர்வகானு
குக்க கனுகொனி கொல்லனி கூசி லேப
யதரு பெதருன தேலெனு யதடுவேமா.

(இ-ள்) ஆட்டுமந்தையில் கோனாய் பசிதீரப்புகுந்து வெகு சுருசுருப்பாயொரு ஆட்டைப் பிடித்துக்கொள்ள அதைக்கண்டு நாயானது குலைத்து இடையனையெழுப்ப அவனுருண்டு பிரண்டு எழுந்து அதட்டி உதட்டியாகக் கோனாயையோட்டினான் வேமா!

கொர்ரெலொக்க மந்த கூடின சோட்டுனு
தல்லிநெருகி சேருதானிபில்ல
ப்ரமயோகிநெரிங்கி பக்துண்டுசேருரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஆடுகள் ஒரு மந்தையாகக் கூடின யிடத்தில் ஆட்டுக் குட்டியானது அக்கூட்டத்தில் தன்தாயைத்தேடி அதனிடஞ்சேருமாப்போல பக்தனானவன் பரமயோகியைத் தெரிந்து சேருவான்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று.

கோழி.

பெட்ட புஞ்சுகூடி பெனகினயப்புடு
குட்டுபெட்டிதானி குலமு ஜேசு
புஞ்சுலேனி பெட்ட புடமி குப்பலனுண்டி
தோலுகுட்டு பெட்டு தொடரிவேமா.

(இ-ள்.) பெட்டைக்கோழி சாவலுடன் பிணைந்து கூடிக் கலந்தபோது கருதரித்து அப்பெட்டைக்கோழி முட்டையிட்டுத்

தன்குலத்தை விருத்திசெய்யும்; சாவலில்லாத பெட்டைக் குப் பையயணந்தோலுமுட்டைகளைத்தொட்டுக்குவிடும்வேமா!

நாய்.

குக்கல தளமுலோ கூர்ச்சுண்ட பெட்டின
ஒக்க மனசுதோட நுண்டபோது
ஆத்மநிலுபலேனி யக்ஞானி சந்தம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்) உத்தமஸ்தானத்தில்பட்டுப்பட்டாடைகளைவிரித்து அதன்பேரில் நாயை உட்கார வைக்கினும் அந்த நாயானது ஒரு மனதுடன் இருக்கமாட்டாது. அதற்குத் திருஷ்டாந்த மென்ன வெனில் மனத்தை நிருத்தமாட்டாத அக்ஞானியை யொத்த தாம்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று.

குக்க யேமெருகுனு குருலிங்க தேவரு
நக்கபோதெருகுனே ஒக்கபிராத்து
மொர்க்கிலுண்டெருகுனே மோக்ஷ மார்க்கம்புனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்) பிரமாச்சாரியன் மகிமையை நாயறியுமோ? விரதத்தின் பெருமையை ஆண் நரி யறியுமோ? சர்வமூடனறிவனோ மோக்ஷமார்க்கத்தின் அருமை? சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா! எ-று. (கசஉ)

குண்டி குக்ககேல குந்தேட்டி வைரம்பு
பிரிகி பன்டுகேல பிருதுமிகாடவ
மூஷிகி லஞ்சகேல முசிமூசி நகவுலு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்) முசலினிடம் நொண்டி நாய்க்கேன் வைரம்? பய முள்ள சேவகனுக்கேன் கையில்விருது? கிழவைப்பாட்டிக்கேன் புன்சிரிப்புகள்? சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா!

குக்க தோகதெச்சி கோவிலோ பெட்டிதே
கோலிசாயநுண்டு கொந்தவரகு

கோவி தீசிஜூடட கொடவலி வலெநுண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நாயின் வாலையாதாமொரு குழைக்குள் வைத்தால் அந்த வால் சிறிது நேரங் குழைக்குள் நீண்டிருக்கும்; அக் குழைக் குள்ளிருந்து வெளிப்படுத்திப்பார்க்க அந்தவால் முன்ன மிருந்தபடி அறிவாளிப்போலிருக்கும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (ககச)

குக்க மனுஜுலகன்ன குணமெந்த கல்தனி
மனுஜ குணமுலேக மரியுநுன்ன
குக்ககன்டெநருடு குணஹீனுடையுன்ன
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மனிதர்களுக்காகிலும் நாய்க்கு குணமெவ்வளவுண் டென்றும் மனிதர் குணமில்லாமலிருக்கும் அந்த நாய்க்காகிலும் மெத்த குணயீனனாகியிருப்பன்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (ககரு)

தானுவுண்டு பூமி தனரங்க யுண்டெடு
ஜங்கமைய்யனுகனி ஸரககரச்சு
குக்கயுத்தி வானி குணமேல மானுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தானிருக்கும் பூமியில் வசிக்கும் குருநாதனைக் கண்டு விரைவாகக் கடிக்கும் நாயின் குணமுடையவன் புத்தி யேன் மாறுமோ ஒருக்காலு மாறாது. சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (ககசு)

குக்க தின்னவாடு குருலிங்க ஜங்கம்பு
பந்திதின்னவாடு பரமயோகி
யேனுகதினுவாடு யெந்தசுஞானிரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அன்னியர்மீது கோபித்துச் சள்ளென்று கடுமை யாகப்பேசும் நாயைத் தின்றவன் பரமகுருநாதனாகும். இவ்வி

டத்திய வார்த்தையை அவ்விடத்திலும் அவ்விடத்திய வார்த்தையை இவ்விடத்திலும் சொல்லுவதுடன் நல்லோரை நிந்திப்பதென்னும் மொருவடிவாகிய பன்றியைத்தின்றவன் பரமயோகியாவான். அன்றியும் மதத்தினால் நானென்னும் அகங்காரத்தைத் தின்றவன் எவ்வளவோ நல்லஞ்ஞானியாவான். சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (ககஎ)

குக்கயேமெருங்கு குருலிங்கஜங்கம்பு
மிக்கவடகிபட்டி மீருகாக
சந்தவாடதொர்ந்து சன்யாசிநெருகுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) குருநாதன் மகிமையை அற்ப நாயானதறியுமோ? கண்டசதையைப் பிடித்துப் பிடுங்குமல்லாமல் விடமாட்டாது போல சந்தைவாடையில் வசிக்கும் வேசியானவள் சன்னியாசியென்றறியாமல் மேல்விழுந்து புணர்ச்சிசெய்யாமல் விடமாட்டாள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

குக்க கரிச்செநேனி குய்யங்க பிகபட்டி
பக்க விரகதன்னி பண்டபெட்டி
நிம்மமேகு தெச்சி நெத்தினகொட்டிதே
குக்கவிஷமு திகுனு குதுரு வேமா.

(இ-ள்.) நாய்கடித்ததேயாகில் கூப்பிடாமல் இருகப்பிடித்துப் பக்கமுடைய வுதைத்துப் படுக்கவைத்து எலுமிச்சன் மேக்கு தருவித்துச் சிரசில் அடித்தால் நாயின் விஷமிறங்கிச் சுகமாம் வேமா! எ-று. (கக௯)

நரி.

நக்கவினயமுலுனு நயகார முலுஜேசி
பெனுகு வலதெர கூட்டிபெட்டு தனமு
குக்கயோர துவாத கூடசல்லினரீதி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நரிவினயங்களும் நயவார்த்தைகளும் பேசி திரவியஞ் சேகரித்துப் பெருத்தக்குவியலாக வைத்து தனமானது

எத்தன்மையா மென்றால் நாயின்வாயில் சாதத்தை யிரைத் தாற்போலாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கள0)

நக்கனோட்டிகண்ட நதிலோனி மீனுகை
திக்கபட்டி விடிச்சி மொக்க செகுடனு
மிக்குவைன கத்த மாம்சமெத்துகபோயெ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நரியானது நதிக்குள்ளிருக்கும் பெருத்த மீனைக் கண்டு ஆசித்துத் தன்வாயிலிருந்த இறைச்சியைவிட்டு மீனைப் பிடிக்க முயன்றபோது ஒருபருந்தானது வந்து அவ்விறைச்சியை அடித்துக்கொண்டு போயிற்று: அதைக்கண்டு நரியானது அவமானப் பட்டது; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

பன்றி.

பந்திபில்லவேயு பதியின்டனைதிண்டு
குஞ்சரம்புயீனு கொதமனொக்கட்டி
உத்தம புருஷண்டு வொக்கடே சாலுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பன்றியானது பத்து அல்லது பதினைந்து குட்டிகளைப்போடும்; யானை ஒரேகன்றைப்போடும். அப்பன்றியைப் போல பல துஷ்டபிள்ளைகள் பிறக்கினும் யானைக்கன்றைப் போன்ற உத்தமபுருஷன் ஒருவன் பிறந்திடிற்போதும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (களஉ)

ஊரபந்தெருங்க தூத்தர தக்ஷிணம்
செட்டநரகமெல்லச் செந்துகாக
பாதிவிரதமகிம பலுகாகியெருகுனே
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஊர்ப்பன்றியானது துர்க்கந்தமான நரகலைப்புசிக் குமல்லாமல் வடக்கு தெற்கு அறியமாட்டாதுபோலப் பதிவிர

தையின் மகிமையைச் சப்லசித்தன் அறியமாட்டான்; சர்வவியா பியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஎங)

குரங்கு.

கோதிநாரகெத்சி கொத்த பட்டமுகட்டி
கொண்டமுச்சுலெல்ல கொலச்சினட்ளு
நீதிஹீனுனிவத்த நிப்பாக்யுலுண்டளு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) குரங்கைப் பிரியத்துடனழைத்துவந்து புதுமை யாக அதற்குப் பட்டங்கட்டி கருங்குரங்குகளெல்லாம் அக்குரங் குக்குப் பணிசெய்வது எப்படிப்போலென்றால் நீதியற்றவனிடத் தில் தரித்திரர்கள் சேவை செய்வதுபோலாம்; சர்வ வியாபி யாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஎச)

லட்சிமி யேலிநட்டி லங்காதியதிபுரி
பில்லகோதி யெளஜூ கொள்ளபெட்டெ
சேட்டுகாலமுனகுசெருப நல்புடெசாலு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இலக்குமிவாசம் பொருந்திய லங்கையை ராவ ணன் அநேக வருடகாலம் அந்த லங்கைக்கு அதிபதியாய் மூவு லகமுந்தொழ ஆண்டுகொண்டிருந்து அந்த லக்குமியையே யெண்டாள் வெண்ணின பாமரனுடைய லங்காபுரியைக் குரங் குக் கூட்டங்கள் கொள்ளையிட்டன. ஒரு மனிதனுக்குக் கெட்ட காலம் வந்தணுகுமாகில் அவனைக்கெடுக்க அற்ப மனிதனே போதும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று.

லட்சிமி போவுநாடு லங்கேசு ராஜ்யம்பு
நந்தட்டகபிசேன யாக்ரமிஞ்செ
சேடுகாலமைன செருபநல்புடெசாலு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இலக்குமி நீங்கிப்போகும் நாளில் இலங்கைக்கு ராஜனாகிய ராவணனுடைய நகரத்தை வானரசேனைகள் கவிந்

றுகொண்டது. கெட்டகாலம் வந்தணுகுங் காலத்தில் தன்னைக் கெடுக்க அற்பமனிதனே போதும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (களசு)

பூனை.

பில்லியெலுகபட்டி ப்ரியமுதோடுதமிங்க
அதியகோடிதினனு பலுகனேல
மமதவிடுவகுன்ன மானுனேமோகம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பூனையானது பிரியத்துடன் எலியைப் பிடித்து விழுங்கும் சாமர்த்தியம் தனக்கிருந்தும் அப்பூனை கோழியைத் தின்ன கோபிப்பதேன்? தானென்னும் அகங்காரத்தைவிடாமலிருக்க மோகந் தீருமா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (களள)

எலி.

எலிகதோலுதெச்சி யேடாதிவுதிகின
நலுபுநலுபேகானி தெலுபுகாது
கொய்ய பொம்மதெச்சி கொட்டின பலுகது
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) எலியின்தோலைக் கொண்டுவந்து ஒருவருடகாலம் துவைத்தபோதிலும் அத்தோல் கருப்பு கருப்பேயல்லாமல் வெண்மையாகாது. அதேதப்படியெனில் மரப் பொம்மையைக் கொண்டு வந்து பலவிதமாக அடித்தபோதிலும் பேசுமா பேசா துபோல கருப்புத்தோல் வெள்ளைத்தோலாகமாட்டாது; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (களஅ)

புலி.

புலியுமெட்டிதன்ன பூலோக மந்த்ராஜு
கலியு மெட்டிதன்ன கானராது

புலியுகலியுகன்ன புவினிநாக்லியெச்சு
விஸ்வதாபி ராம் வினர வேமா.

(இ-ள்.) புலியானது யெப்படிப்பட்டதென்றால் இந்தப் பூலோகத்திற்கு மிருகவரசன்; கலியானது யெப்படிப்பட்டதென்றால் அதைக்காண்ப தரிதாகும்; அப்படிப்பட்ட புலியையுங் கலியையும் பார்க்கிலும் பசி யெரிதாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஎக)

கரடி.

பல்லுகமூல லெப்ராக்னுனு
யில்லோகமூலந்து குருனி யெருகரு தமலோ
மூல்லோகமெரிகி நட்டுவலெ
கொல்லுன தமுபொடுசுண்ட்ருகொனகொனிவேமா

(இ-ள்.) கரடியைப்போல தெளிவுள்ளவர்கள் இவ்வுலகத்தினில் குருநாதனை யறியமாட்டார்கள், தங்களுக்குள் மூன்று லோகங்களையும் அறிந்தவர்கள்போலத் தங்களைத் தாங்களே அடிக்கடி புகழ்ந்துகொண் டிருப்பார்கள் வேமா! எ-று. (கஅ0)

கருடன்.

கருடசேவஜேசி கனதகோ புஜியிஞ்சு
வலெனடஞ்சுநருலு வாஞ்சதீர
பலுகுசுந்துருகானி பர்வம்பு கானரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) கெருடதெரிசனஞ் செய்து பின்பு புசிக்கவேணுமென்று வாஞ்சைதீர நரர்கள் வசனித்துக்கொண் டிருப்பார்களன்றி அதன்மர்மத்தை யறியார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஅக)

பல்லி.

பல்லி பலுகுலுவினி ப்ராஜதம பனுலெல்ல
சபலமனுச்சு தாமு சம்மதிஞ்சி

கானியனுலகு தம கர்மமட்டந்துரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) புல்வி வசனிப்பதைக்கேட்டு மனிதர்கள் தங்களுடைய வேலைகளெல்லாம் அனுகூலமாகுமென்று மனதில் திருப்தியடைந்து யிருப்பார்கள், அவ்வேலை யனுகூலப் படாமற் போகுமே யாகில் நமது கர்மத்தின் பயனிதாமென்பார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஅ௨)

பாம்பு.

பாமுகண்டெஜீவி பாபிஷ்டியுனுலேது
அட்டிபாமுசெப்பி நட்டெடவினுனு
கனிகுண்மூமான்பு கனுலெல்லவருனுலேரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பாம்புக்காகிலும் பாபஞ்செய்த ஜீவன்க ளேது மில்லை. அப்படிப்பட்ட துஷ்டஜெந்துவாகிய பாம்பு மந்திர பலத்திற்குக்கட்டுப்பட்டு சொல்வதைப்போலக்கேட்டுத் தடைக்குட்பட்டிருக்கும்; பாபசேருயனுகிய துஷ்டனுடைய குணங்களைப்போக்கும் கினவான்கள் யாருமில்லை; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஅ௩)

தேள்.

தேலுவண்டி தானி தெலியகொண்டெ விஷம்பு
பணிகினுண்டுவிஷமு பண்ளயந்து
தெலிவிலேனிவாரி தேஹமெல்ல விஷம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தேளுக்குக் கொடுக்கில்விஷமிருக்கும்; பாம்பிற்கு கோரைப்பற்களில் விஷமிருக்கும்; தெளிவில்லாத பாமரர்களுக்குத் தேகமெல்லாம் விஷமேயாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஅ௪)

எறும்பு.

சீம குட்டெனேனி சிவுகனிபிஞ்சனு
சிமயெர்க தானி ஜீவமெந்த

சீமகன்டிகுருனி ஸ்ருஷ்டிலோ னெருகரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) எறும்பு கடிக்குமாகில் சுருக்கென்றுநோகும்; அந்த எறும்பு எவ்வளவு? அதன் ஜீவனெவ்வளவு? அவ்வெறும்பை யொத்த சத்குருநாதனைச் சிருஷ்டிக்குள்ளாகத் தெரிந்துகொள்; சர்வவியாபியாகி ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஅ௬)

கோசு.

மசகமு கும் மனிகூயுசு
பஸகுலதேஹமுனவ்ராலி பலுதீட்சணமுகா
கொாகல முக்குதோ பொடுச்சுச்சு
வெஸக்ரோலுனு னெத்துரிலனு வினர வேமா.

(இ-ள்.) கொசுவானது கும்மென்று கூவிக்கொண்டுவந்து பசையுடைய தேகத்தின்மீ துட்கார்ந்து வெகு சுருசுருப்பாகக் கூர்மையுடைய மூக்கினாற்குத்தி விரைவாக ரத்தத்தைப் புசிக்கும் இவ்வுலகத்தில் வேமா! எ-று. (கஅ௬)

ஈ.

ஈகயெட்டிதன்ன யீஸ்வருவண்டிதி
தெலிசிகூடகுன்ன தேட்டபடது
அதிபுகுருவுலேக யப்புடுதெலியங்க
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஈயானது எப்படிப்பட்டதென்றால் ஈஸ்வரனை யொத்தது. அதைத்தெரிந்து பார்க்காமலிருந்தால் தெளிவுபடாது; அப்படி யதைத்தெரிந்து தெளிவடைவதற்குச் சற்குருநாதனில்லாமல் மர்மந் தெரிவதரிதாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஅ௭)

பந்துக்கள்.

மொாகவாடை யாடதியை
வகதெகிபோராநனிவாணி வருசலவாடை

யுகயுகமுல நட்டியிஞ்சுனு
சுகுணயிடுவன்டிவஸ்து சூடரவேமா.

(இ-ள்.) புருஷனாகிப் பெண்ணாகிப் பலவகையறிந்துபோகாதவனை அண்ணனென்றும் தம்பியென்றும் தமக்கையென்றும் தங்கை யென்றும் மனைவியென்றும் மகனென்றும் இன்னும் பலவித வரிசையுடையவனாகி யுகங்கள் தோறும் நடனம் செய்யும் இப்படிப்பட்ட வஸ்துவைப்பாரும்; நற்குணமுடைய வேமா! எ-று. (கஅஅ)

## புருஷன்.

புண்யமந்த்கூடி புருஷுடை ஜன்மிஞ்சே
பாபமுனனு புட்டெட பட்டி புவிலோ
கஷ்டமாசதியனி கனரோய லேரயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) புண்ணியமெல்லாஞ் சேர்ந்து புருடனாகிய ஜென்மமெடுத்தவன், பாபமெல்லாங்கூடிப் பெண்ணாகிப் பூதலத்தில் பிறந்தவனைச்சேர்ந்து காமாதிகளை யனுபவிக்கக் கோரிக்கை கொள்வனேயன்றி அக்கொடிய பாபசொரூபமாகிய பெண்ணைக் கூடினால் நமக்குக் கஷ்டம் சம்பிராப்தமா மென்றுணர்ந்தும் வெறுப்படைவதில்லை; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஅக)

## ஸ்திரீ.

ஆடதனக ரோத்த யந்து ஜநிச்சின ரோத்த
தலசிசூடதமகு தாமெமெச்சி
யெந்தவாரடைனனு யெஞ்சரு தமலோன
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பெண்ணென்றால் ரோத்தை; அப்பெண்ணின் அல்குலைப்பார்க்க ரோத்தை; அதை நினைத்துப் பாராமல் அப்பெண்ணைத் தமக்குத் தாங்களேகொண்டாடி யெப்படிப்பட்டவ

ளுகிலும் தனக்குள்ளாக யெண்ணிப்பாரான்; சர்வ வியாபியா
கிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கக0)

ஜனனமரணவேள ஸ்வதந்த்ர ஹீனுண்டு
மொதட்டகர்த்தகாடு துதனுகாடு
நடவகர்த்தநனுட்ட நகுபாட்டுகாதகோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஜெனனமரணமென்னும் இரண்டு வேளையிலும்
சுதந்திரமில்லாத ஒரு மனிதன் முதலிலும் அந்தியத்திலுங் கர்த்
தாவல்ல; நடுமத்தியில் கர்த்தன் நானென்பது நகைப்புக் கிட
மாமல்லவோ; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

சதி.

சதியந்தே பதி புட்டெனு
சதியுனு பதியந்தெபுட்டெ பரமார்த்தமுகா
சதிபதுலனகா நெவ்வரு
மதிலோ தலபோசிசூட மஹிலோ வேமா.

(இ-ள்.) உலகத்தினில் மனைவியினிடத்திலேயே மணாளன்
பிறந்தான்; அம்மணாளனிடத்திலேயே மனைவியும் பிறந்தாள்;
பராபரவஸ்துவின் கிருபையால் மனதிற்குள் யோசித்துப்
பார்க்க மனைவி மணாளனென்றால் யாவர்? அந்த ரகசியத்தைத் (ககஉ)
தெரிந்துகொள் வேமா! எ-று

சதியொனர்ச்சு துடுகு பதிகவஸ்யமு வச்சு
பதியொனர்ச்சு மஞ்சி சதிகி சகமு
பதியொனர்ச்சு துடுகு சதிகேல ராதுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மனைவி செய்யும்பாவம் அவசியம் மணாளனைச்
சேரும்; மணாளன்செய்த புண்ணியத்தில் பாதிமனையாளைச்
சேரும்; மணாளன்செய்த பாவம் மனையாளுக்கேன் சேரமாட்
டாது? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

கோடிபொரும்; தொங்கின ஸ்தனத்திற்கு விலையென்றுமில்லை; சர்வ வியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா ! எ-று. (உ௦௦)

சன்னு குடிச்சிபெரிகி சன்னுகேயாசிஞ்சி
சன்னுவல்ல முக்தி சுப்பனுயெ
சன்னு விடிச்சுனதடி சர்வதா யோகிரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்) முலையுண்டுவளர்ந்து அந்த முலைக்கே ஆசித்துத் திரிந்தபடியினுலேமுக்திநலமானது கிட்டாமற்போயிற்று; அந்த முலையின்மீது ஆசையற்றவன் சதாகாலமும் பரமயோகியாவான் சர்வ வியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா ! எ-று.

இந்திவிந்தகன்னு விந்தேதசிசன்னு
இந்திகவயுவாடு யெரிகியெரிகி
சேரகுண்டெடுவாடு க்ஷிதிலோன யோகிரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்) மங்கையின் கண்களையும் கைக்கடங்காத பெருத்த கொங்கைகளையுங்கண்டுபிரமித்து அம்மங்கையின்மாய்கைக்குள்ளாகிக்கூடிக்கலந்து நாளைப்போக்கினவன் பாமரனுகி மறுபிறப்புக்குட்படுவான்; அப்படி யம்மாதர்கள் செய்யு மிந்திரஜால தந்திரங்களையும் அவர்களைக் கூடிக்குலாவுவதால் நேரிடும் துக்கங்களையும் பகுத்தறிந்து அவர்களைச் சேராதிருப்பவன் இவ்வுலகத்தினில் யோகியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா ! எ-று. (உ௦உ)

சன்னுல வன்டிதி சம்பத
கொன்னுள்ளகு கோமு ஜடியு கொம்புனஜாருன்
வென்னெனு சிகட்டிவன்டிதி
அன்னுசிவலிங்கமான யவனிலிவேமா.

(இ-ள்.) கொங்கைகளை யொத்தது சம்பத்து; சிறிதுநாள்களுக்கு நிமிர்ந்திருந்து பின்புடனே சாய்ந்துவிடும். அதைப்பற்றித் தீர்க்கமாக யோசிக்குமிடத்தில் சிலநாள் நிலவும் சிலநாள் இருட்

டையும் ஒத்திருக்கும் ; இதுபொய்யல்ல சிவலிங்கத்தின் மீதாணை யாகச் சொல்கின்றேன் அண்ணா இவ்வுலகத்தில் வேமா! எ-று,

இந்திகன்னுசன்னு லிங்தேசியனுஜ-ஒச்சி
மோஹபடுனு புத்தி மோசபோயி
கரிசலேனிவான கானலேதாயரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) கண்சைகைகளையும்பருத்தகொங்கைகளையுமுடைய மங்கையைப் பார்த்துப் புத்திமோசத்தினாலே மோகிப்பன் ; அதெப்படியெனில் கரிசையில்லாத மழை கண்களுக்குக்காணப் பட்டதாயிற்று ; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

ஜிட்டுகாருதாட்ட சீமுகாருனுபுண்ட
கட்டிசிவுகுகிண்ட கானுபண்ட
பிட்ட குடுச்சுசண்ட பிடுவேலயுண்டுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) துளையில் ரத்தமொழுகும், புண்ணில் சீழொழுகும், புல்லினால் மூக்கின் சவுக்கைப்போல பற்களால் பிள்ளையுண் ணும் கொங்கைக்குத் தளர்ச்சியுண்டாகுமே யன்றி வேறில்லை, சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உ0௫)

ஸ்ரீலசனுலுபூலசெண்டு காபோல்தரு
பாலுமாலினட்டி பந்துலெல்ல
படதிசன்னுலெட்லு பந்துலபோலுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஸ்திரீகளுடைய கொங்கைகள் பூச்செண்டுகளா மென்று சொல்லுவார்கள். அப்படிச் சொல்லுபவர்கள் யாரெ னில் அக்கொங்கைகளுக்கு ஆசித்துப் பன்றியைப் போன்றவர் களேயாம் ; மங்கையில் கொங்கைகளெப்படிப் பூச்செண்டுகளைப் போலாகும்? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

குலுகு சனுலஜ-ஒபி கொப்புன சரிகிஞ்சி
சேதிகாசுலெல்ல செல்லதீசி

அனுகஜேஸிதொந்து ரலவாரகாந்தனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்) தாசிகள் குலுங்கும் ஸ்தனங்களைக் காட்டிப் புருடர்கள் மனதை யுருகச்செய்து மயக்கி அவர்கள் கையிலிருக்குங்காசுகளை யெல்லாம் அபகரித்துக் கோமண்டிகளாக்கி அவர்களையோட்டி வேறொருவனைப் பிடிக்கும்பொருட்டு கோபஞ் செய்து கொள்ளுவார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உ0எ)

சன்னுனு பரசதிகொப்பின
கன்னுலகுனு பாபத்ருஷ்டி கதியகமுனுபே
சன்னுலமுனு தாகுடிச்சின
சன்னுனு ஜடலங்கவலயு சஹஜமு வேமா.

(இ-ள்.) பரஸ்திரீகளுக் கொப்பாகிய கண்களுக்கும் ஸ்தனங்களுக்கும் மனிதன் ஆசித்துப் பாபத்ருஷ்டியானது அதுகளின் மீது கவியாமுன்னமே ஆதியில் தானுண்ட பாற்குடங்களாகப் பாவித்துச் சாதாரணமாக அவைகளைப் பார்க்கவேண்டும் வேமா! எ-று. (உ0அ)

## யோனி.

யோனிலோன புட்டி யோனிலோன பெரிகி
யோனிலோனி தெருவு கானலேக
யோனிஜ-ஒசியாம யோகமு மரசெரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) யோனிக்குள்ளே பிறந்து யோனிக்குள்ளே வளர்ந்து யோனிக்குள்ளே யிருக்கும் வெளியைக்காணமாட்டாமல் யோனியைப்பார்த்துப் பிரமித்து மனிதன் பரமயோகத்தை மறந்தான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

ஈதகிஞ்சவன்டி யீசுமந்தயோனி
ஆசபடெடுவாறு அகிலஜனுலு

தீனிவிடசினயட்டி தீரு லெவ்வருலேரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) எச்சங் கொட்டைபோன்ற இவ்வளவு யோனிக்கு ஆசைப்படுமவர்கள் அகில ஜனங்கள், இதனை வெறுத்து விடுத்த அப்படிப்பட்ட தீரர்கள் யாருமில்லை; சர்வ வியாபியாகிய ஸ்ரீ ராமா! கேளும் வேமா! எ-று. (உகO)

யடதியோனிபடுபு பாட்டிஞ்சி ஜூசிதே
கோட்டிபூஜலெல்ல கொள்ளபோவு
செகரு செந்தயுன்ன செடுநட்டதாயம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்) மங்கை யோனியில், சம்பந்தப்படுவதை யோசித்துப் பார்த்தால் கோடி பூசைகளெல்லாங் கொள்ளைப்போகும். அதெப்படியெனில் அனலுக்குச் சமீபத்திலிருக்கினும் தாயங் கெட்டுப் போகுமா போகமாட்டாது. சர்வ வியாபியாகிய ஸ்ரீ ராமா! கேளும் வேமா! எ-று. (உகக)

யோனியந்தெ புட்டி யோனிதா ஜெருச்சனு
சன்னுகுடிச்சிபெரிகி சன்னுமுட்டு
ஸ்ருஷ்டிலோன ப்ராணி சிக்கேல யெருகடோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) யோனியிடத்திற் பிறந்து யோனியிலுழன்றும் முலையுண்டுவளர்ந்து அம்முலையைப் பிடிக்கும் பிராணியானவன் இவ்வுலகத்தில் நன்மையெனறியானே; சர்வ வியாபியாகிய ஸ்ரீ கேளும் வேமா! எ-று. (உகஉ)

## லிங்கம்.

லிங்கமு பரசிவுடு லீலதோ ஜனிச்சின
யங்கமந்து லிங்கமமரியுண்டு
தரணிகருலகெல்ல யராயலிங்கமுலேக
புட்டநேரரைய புவினி வேமா.

(இ-ள்.) உலகத்தின்கண் லிங்கமென்பது பரமசிவன். அந்தப் பரமசிவனைச் சந்தோஷமாகப் பார்க்க தேகத்தினிடத்தி

வமர்ந்திருக்கும்; அப்படிப்பட்ட லிங்கமில்லாமல் பூதலத்தி லுள்ள நரர்களெல்லாம் பிறக்கமாட்டார்கள் வேமா! எ-று.

ஜகதிஜனுலகுனு ப்ரஜாபதி யனுலிங்க
முண்டாரதிலிங்க மொண்டதேல
ரதிலிங்கமொச்சி ரமணுலபோகம்பு
சேயநேரதைய க்ஷிதினி வேமா.

(இ-ள்.) உலகத்திலுள்ள ஜனங்களுக்குச் சிசுனமென்னும் லிங்கமிருக்கச் சிலாரூபமாகிய லிங்கமேதுக்கு? அந்தக்கல்லுருவ மாகிய லிங்கம்வந்து மங்கைகளைப் போகஞ்செய்ய மாட்டாது; வேமா! எ-று. (உகச)

பாவிம்ப லிங்கமுண்டக
பரம்பக லோகமுன னு ப்ரம்மம்பனக்ா
காவிஞ்சு விதமு தெலியக
சவிதமுன னருலுஜெடுது ரிலலோ வேமா.

(இ-ள்.) பூதலத்தில் யோசித்துப்பார்க்க லிங்கமிருக்க அந்த லிங்கத்தைப் பிரமமென்று கருதும் வித்தையறியாமல் மாயா சம்பந்தமாகிய மோகத்தில் மூழ்கி நரர்கள் கெட்டுப் போவார் கள் வேமா! எ-று. (உகரு)

இட்டி லிங்கமந்து யீரேடு ஜகமுலு
புட்டி ப்ரதிகி நருடு புவினி வெலசி
கட்டி காயமுனிகி காலுக்லையுந்து
ரவனிஜனுலு நிபுடு யமர வேமா.

(இ-ள்.) இப்படிப்பட்ட லிங்கத்தினிடத்தில் பதினன்கு லோகங்களும் நாளும் பிறந்துவளர்ந்து கீர்த்தியைப்பெற்று சில காலமிருந்து முடிவிலுண்மையிலேயே எமனுக்குக் காணிக்கை யாவர்கள் எப்போதும்; வேமா! எ-று. (உகசு)

## முட்டு.

நெலகு வொக்கசாரி நெத்துரு காருனு
உஷ்ணமெத்திநபுடு வுபுகுச்சீமு

உத்தபுடதிவுலகு னுச்சீ காருச்சுனுண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஸ்திரீகளுக்கு மாதமொருதரம் மாதவிடாயொழு
கும்; இடையில் சூடு அதிகரித்தபோது சீய் ஒழுகும்; சாதார
ணத்தில் மூத்திரம் ஒழிகிக்கொண்டிருக்கும்; சர்வ வியாபியா
கிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உகஎ)

மூட்டுமூட் டனுச்சுனு மூட்டரா தந்துரு
மூட்டு குதிரியேமி மூலமேமி
நருலகந்தரிகினி நவத்வாரமூலஜூடி
புட்டிநயுடெ புட்டெமூட்டு வேமா.

(இ-ள்.) மூட்டு மூட்டென்றும் அவர்களைத் தொடக்கூடா
தென்பார்கள்; அந்தமூட்டு குதிரந்தென்ன? அதற்கு மூலமென்ன?
உலகத்திலுள்ள மனிதர்கள் யாவருக்கும் நவத்துவாரங்களிலும்
பார்க்க அவர்கள் பிறந்தபோதே உண்டாயிற்று மூட்டு வேமா.

மூட்டுலோன புட்டி மூட்டண்டுகுனுரோசி
வட்டிதீர்த்தமாடு வாருகாக
மூட்டுகுண்டநீள்ளு முஞ்சின சுசியெளனெ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மூட்டுக்குள்ளாகப் பிறந்து மூட்டுதீட்டுக்கு
வெறுத்து வெருந்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வார்களில்லா
மல் அந்த மூட்டுக்குக் காரணமாகிய பெண்ணானவள் பாண்டத்
தில் தண்ணீர் கொண்டுவந்துவைக்க அத்தண்ணீரில் ஸ்னானஞ்
செய்த மாத்திரத்தில் பரிசுத்தமாவார்களோ சர்வ வியாபியா
கிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உகஅ)

முரிகிலோன புட்டி முரிகிலோன பெரிகி
முரிகி ப்ரதுகுகிந்த முரிபமேல
முரிகெரிகினவாடு முரிகிலோ புட்டுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அழுக்குக்குள்ளே பிறந்து அழுக்குக்குள்ளே
வளர்ந்து அந்த அழுக்குப் பிண்டப்புக்கேனே இவ்வளவு பேரா

டை; அவ்வழுக்கை அறிந்தவன் அந்த அழுக்குக்குள்ளே பிறம்பானோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! (௨௨0)

முரிகிநவபில்மூல மொனகிகாருச்சுநுண்ட
பரிமபர்வனமனி பலுகனேல
தோலுபொம்ம லாட்ட கிடுதெலியலேரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நவத்துவாரத்திலிருந்தும் அழுக்குத் தடையின்றி ஒழுகிக்கொண்டிருக்க அந்தத் தேகத்தை மேலானதென்று மொழிவதேனோ? தோல்பொம்மை யாட்டத்தைக்கண்டு மயங்கி அதனிடத்திலிருக்குங் கெடுதியை யறியமாட்டார்கள் உலகத்தினர்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௨௨௧)

முரிகிகொம்பலோன கிரிகிஞ்சிஜீவுனி
கர்ம பாசமுனனு கட்டிவேவலி
பிட்டிகர் மஜீவி கெச்சட்டிமோக்ஷம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அழுக்கு நிறைந்த வீட்டிற்குள்ளே ஜீவனை இருக்கி வைத்து அந்த ஜீவனைக் கர்மமென்னும் பாசத்தினாலே கட்டிப் போட்டு சிரமமடையும்படிசெய்ய அந்தஜீவன் அதற்குள்ளிருந்துகொண்டு படாதபாடும் பட்டுக்கொண்டிருக்கும்; இப்படிப் பட்ட கர்மஜீவனுக்கு எங்குள்ளது மோக்ஷம்? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௨௨௨)

## சேர்க்கை.

தோலுதோலுபெட்டி தோமங்க தோமங்க
முரிகி காரிகாரி முத்தகட்டெ
முத்த சங்கபெட்டி முத்தாட னேலரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தோலுக்குள் தோலைவைத்துத் தேய்க்கத்தேய்க்க அழுக்கு ஒழுகி மொத்தை கட்டியது; அம்மொத்தை பத்து மாதம் பூர்த்தியாய் அவயவாதிகளுடனே பிறக்க அப்பிள்ளையை

இடுப்பினில்வைத்து முத்தமிடுவதேனோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உஉக)

சுக்லமரயசூட சுபாவர்ணமு தெலுபு
ஙரயசோணிதமுலு நயமுநெருபு
தெலுபுனெருபுரெண்டு தேஜரில்லுச்சு னுத்ம
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சுக்கிலமென்றும் சோணிதமென்றும் இரண்டுண்டு, அதில் சுக்கிலமானது வெண்மைநிறத்தோடும் விளங்கும்; சோணிதமானது சிவந்த நிறத்தோடும் விளங்கும். இந்த வெண்மையுஞ் சிகப்பு மிரண்டுஞ்சேர்ந்துதான் ஆத்துமா பிரகாசித்துக் கொண்டிருக்கும் சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

சோணிதமு காமசதுலகு
பராணிதமுக சுக்லமகுனு புஹாபுருஷ புலகுன்
பராணமெமு தெலுபெருபுகலய
கரனகுமீ தேஹகந்தி கனுடகு வேமா.

(இ-ள்.) புருடனிடமிருந்து வெளிப்படுவது சுக்கிலம், ஸ்திரீகளிடமிருந்து வெளிப்படுவது சோணிதம். வெள்ளையும் சிகப்புங் கலந்து இந்தத் தேகத்திற் சாதாரணமான பிராணனுகும்; தனம் பொருந்திய வேமா! எ-று. (உஉ௪)

பஞ்சபூதங்கள்.

மன்னுநீருனக்னி மரிகாலிதோ கூடி
மன்னுதோட விஷயி மெசகஜேரி
கன்னுகானகுண்ட கலிகினதேஹம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பிருதிவி அப்பு தேயு வாயு அக்கினியென்னும் பஞ்ச பூதங்களுஞ்சேர்ந்து அம்மண்ணுடன் விஷயமாகிய ஆண் கூடிக் கலந்து கண்களுக்குக்காணமல் தேகமானதுண்டாயிற்று; சர்வ வியாபியாகும் ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உஉரு)

பஞ்சபூதமைது பரக் மிந்திரியமுதோ
சஞ்சரிஞ்சிகபுடு ஜகமுகலுகு

சஞ்சரிம்பகுன்ன ஜகமுதுகதுகுனு
விஸ்வதாபி ரா்ம வினர வேமா.

(இ-ள்.) பஞ்ச பூதங்களைந்தும் இந்திரியங்களுடன் கலந்து சஞ்சரிக்கும்போது ஜெகத்துண்டாகும். அந்தப் பஞ்ச பூதங்கள் ஐந்தும் இந்திரியங்களுடன் கலந்து சஞ்சரிக்காம லிருக்குமாகில் ஜெகத்துண்டாகுமா? உண்டாகமாட்டாது; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உஉஎ)

ரதமுனகு நைது சீலலு
யதிகுண்ட தலிஞ்கிநபுடு யருகுனு ரதமுன்
ரத த்னுவு லைது சீலலு
விதிதம்புகநடுவுவானி வெதுகுமு வேமா.

(இ-ள்.) ரதத்திற்கு ஐந்து ஆணிகள். அந்த ரதத்திற்கு அதிபனானவன் அதட்டினபோது அத்தேர் ஓடும்; அதைப் போல தேகமென்னும் ரதத்திற்கும் ஐந்தாணிகளுண்டு. இந்தத் தேகமாகிய ரதத்தை நடத்துமவனைத் தேடிக்கண்டு பிடித்துக் கொள் வேமா! எ-று. (உஉஅ)

பூதமு லைதுண்டகனே
க்யாதிகதானெனுக்க தேஹி கலிசின புவிலோ
லோனைன தத்வமெருகக
நூதிலோபடுச்சுந்துாபுடு நோமக வேமா.

(இ-ள்.) பூதங்கள் ஐந்திருப்பதனாலேயே புகழோடு தானொரு தேகத்தைப் பெற்று மனிதனுண்டானான். இவ்வுலகத்தில் அம்மனிதன் தத்துவத்தை யறியாமல் ஆழமாகிய கடலில்மூழ்கி யிருப்பார்கள் வேமா! எ-று. (உஉக)

சீலலைது துண்டகனே
சாலா தனுவனொடிரதமு ஜகமுல திருகுன்
சீலொகட்டி வீடிபடிதே
வேளநொத னுவுநெடி ரதமு வீடுனு வேமா.

(இ-ள்.) ஐந்து ஆணிகளிருப்பதினாலேயே தேகமென்னும் ரதங்களிவ்வுலகத்தினில் கணக்கின்றித் திரியும். அந்த ஆணிகளில்

ஒன்று அவிழ்ந்து விழுந்தால் அப்போது தேகமென்னும் ரதமும் விழுந்து விடும் வேமா! எ-று. (உ௩௦)

சகல்வஸ்துவுலனு சந்ததன்னுவுனு
புட்டகேட பஞ்ச பூதமூலகு
தானிதானிசேத தகபூஷணமுஜெய
யேமிலேது சுகமு யெருகு வேமா.

(இ-ள்.) சகலவஸ்துக்களும் தேகங்களும் பஞ்சபூதங்களும் இந்திரியங்களும் சதா பிறக்குமிடமெங்கேயென்று யோசிக்கில் அது அதினாலேயே சகலத்தையும் பிறக்கச்செய்யும். அதனாலேதாகிலும் வர்பமுண்டோவெனில் ஒருவித சுகமுமில்லை, இதையறிந்து கொள் வேமா! எ-று. (உ௩க)

பிண்டம்.

பிண்ட அண்டமந்து பெனகுசுன்னட்டி
தண்ட்றிபிந்துநாது தனர்கூடி
யண்டமை நிலச்சின யபுடு கர்ப்பமடன்று
யவனிஜனுலநபுடு நரயுவேமா.

(இ-ள்.) பிண்ட அண்டத்தினிடத்தில் பிணைந்து கொண்டிருக்கப்பட்ட தந்தையின் சுக்கிலமுந் தாயின் சோணிதமும் ஒன்றுசேர்ந்து அண்டமாகி நின்றபோது உலகவாசிகளை நோக்கி விசாரிக்கிறபோது அவர்கள் அன்னைக் கெர்ப்பவதியாயிருக்கின்றாளென்பார்கள் வேமா! எ-று. (உ௩உ)

கர்ப்பச் சின்னங்கள்.

கடுபுலோன நுன்ன கனமைன பிண்டம்பு
மூந்து கஷ்டமெல்ல மொதட்டரோசி
யிகனுனைனரேனு யிலமீத க்ஞானம்பு
புத்திதெச்சுகொனுச்சு கொத்திவேமா.

(இ-ள்.) வயிற்றுக்குள்ளாகவிருக்கும் மேன்மையான பிண்டமானது தான் முன்னம் அனுபவித்த கஷ்டங்களை யெல்லாம்

நினைத்து நினைத்து, சம்சாரம் துர்க்குணம் முதல் யாவற்றையும் வெறுத்து, இனிமேலாகிலும் நானிவ்வுலகத்தில் நற்புத்தியை யனுசரித்துக் ஞானமார்க்கத்தைக் கூடியவரையில் தேடுவே னென்று சத்தசத்துவகுணத்தை யடைந்திருக்கும் வேமா!

கர்ப்பகின்னெ கலிகி கனவுபத்ரவமு சேத
தகிலியாதபடுசு தல்லி கடுபு
பிண்ட முதயமைன ப்ரியமுகா கூ-ெச்சேடி
யண்டஜனுலகபுடு நரயவேமா.

(இ-ள்.) தாயின் வயிற்றிலிருந்து க்ஞானமார்க்கத்தைச் சிந்தித்துக்கொண்டிருக்கும் அப் பிண்டமானது சிறியபையினால் நெருக்குண்டு சபராக்னியினாலே தகிக்கப்பட்டு சொல்லப்படாத கஷ்டத்தினாலே பகவானைத் தியானித்துக் கொண்டிருக்க அன்னைக்குப் பிரசவ வேதனையுண்டாகிப் பிண்டம் வெளிப்பட்ட மாத்திரத்தில் அச்சிசுவு சிறிய துவாரத்தில் நெருக்குண்ட சிரமத்தினால் பூர்வக்ஞானத்தை மறந்து ஆயாசமேலிட்டு மெய்மறந்து உலக மாய்கைக்குள்ளாகி யிருக்கும் வேமா! எ-று. (உ௩௪)

பிண்டவுற்பத்தி.

பிண்டம்மை யுதரம்புன
வுண்டுனு கொன்னுள்ள வெனுக வுண்டதுசும்மி
பிண்டம்மை தர படினனு
பிண்டம்மை பிராணரக்ஷ பருதினிவேமா.

(இ-ள்.) இவற்றுள் சிலது பிண்டமாகி உதிரத்திலிருக்கும், சில நாட்களுக்குப் பின்பு அப்பிண்டமானது கரைந்துபோவதுமுண்டு, சிலது பூரண பிண்டமாகித் தரையில் விழுந்தபோதிலும் அப்பிண்டமானது சுதந்திரத்தினால் தன் பிராணனைக் காப்பாற்றுவதிலேயே முயற்சிகொண்டிருக்கும் வேமா! எ-று. (௫)

பிறப்பு.

புட்டினபுடு புவிலோ பொரபடுகோயுமட்டஞ்சு
அபுடெ குருவு மூத்ரனைதிச்செ

முத்ரலேலனிகருது முஜ்ஜகம்புன லேரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உலகத்தில் பிள்ளைப் பிறந்தபோது அப்பிள்ளைக்கு முத்திரைத் தொப்புளறுக்கும்படி குருநாதன் கட்டளையிட்டார். ஆகையால் முத்திரையில்லாத மனிதர்கள் மூவுலகத்திலுமில்லை; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உகசு)

புட்டுவாரலெவரு புட்டனிவாரெவரு
புட்டி புட்டகட்டி புருஷுலெலவரு
புட்டி புட்டனடுல பூரதிஞ்சி சூடரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இப்பூதலத்தில் பிறப்பவர்கள் யாவர் பிறக்காதவர்கள் யாவர்? பிறந்தும் பிறவாமலிருக்கும் உத்தம புருஷர்கள் யாவர்? அப்படிப் பிறந்தும் பிறவாததுபோல் தின்மனதுக்கு நீயே போதித்துப்பாரும், சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உகஎ)

புட்டு வெருகனதனி புருஷார்த்தமுலு பூமி
புட்டரேமி வாரு கிட்டரேமி
புட்டலோனசெதலு புட்டவா கிட்டவா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இவ்வுலகத்தில் தன் பிறப்பை யறியாத புருஷனவன் பிறந்தென்ன? அவனிறந்தென்ன? புத்துக்குள்ளே செல்லு பிறக்காதா இறக்காதா? சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உகஅ)

புட்டிசச்சு நருடு பூர்வமெ தெலியக
பட்டபயலு ஜுண்டி ப்ரமசி யபுடு
தெலிஸி விடச்சிபூமி திருகங்கனெட்டிகி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பிறந்து இறக்கும் மனிதன் சதாகாலமும் நமக்குப் பிறப்பிறப்பு விடாதிருக்குமென்று ஆதியிலே யறியாமல் வெட்ட

வெளியிலிருந்து பிரமித்து அப்போது தெளிவை விடுத்துப் பூமியில் திரிவதேதுக்கு? சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உ௩௯)

ஏமிதொஞ்சுவச்செ னேமிதா கொனிபோயே
புட்டுவேள நருடு கிட்டுவேள
தனமு லெச்சட்டிகேகு தானேகு னெச்சட்டிகி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மனிதன் பிறக்கும்போது யென்ன கொண்டு வந்தான்? இறக்கும்போது யென்னதான் கொண்டுபோவான்? அன்றியும் பிறக்கும்வேளையிலும் இறக்கும்வேளையிலும் பொருள் எவ்விடத்திற்கேகும்? தானெங்கு போவான்? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (உ௪0)

ஒச்செதி பெராய்யெதியுனுமரி
வச்செடிதியுகானவேரு சஹஜம்பனுசுன்
விச்சல விடிகா திருகுச்சு
சிச்சுனபடுமிடுத்தவலெனெ கூஜிதிலோ வேமா.

(இ-ள்.) உலகத்தில் மனிதர்கள் வருவதும் போவதும் மறுபடியும் வருவதுங்காணமாட்டார்கள். இது இயற்கையாமென்று நினைத்து இஷ்டப்படியாகத் திரிந்து கொண்டிருந்து காமத்தீயில் விழும் மங்கையைப்போல் முடிவில் அம்மனிதர்கள் நரகக்குழியில் விழுவார்கள் வேமா! எ-று. (உ௪௧)

சகலம்பை தாபுட்டனு
சகலமு லாசட்டிகானு சர்வமுதானே
விகடம்பை தினஜம்புனு
யகட்டாயா வஸ்து லெவ்வரந்துரு வேமா.

(இ-ள்.) சகலவஸ்துக்களும் தானுகிப் பிறக்கும், அந்தவஸ்துக்கள் அனைத்தும்பசிதாபத்திற்காகவும் சிருஷ்டித்திருப்பதால்

அவ்வஸ்துக்கள் யாவற்றையும் விசட்டமாகத் தின்னக்கொல்லும்,
ஆஹா அந்த வஸ்துவை யாவர் சொல்லுவார்கள்? வேமா!

தானுபுட்டுசோட்ட தனஜூச்சி பலிகின
தானுபுத்தி திருகு தரணிலோன
தானுபுட்டுசோட்ட தத்வம்பு தலயோய
விஸ்வதாபிராம வினர வேமா.

(இ-ள்.) மனிதன் தான்பிறந்தவிடத்தில் தன்னைப்பார்த்து வசனித்த பிரமத்தின் வழிபட்டுத் திரிவானிவ்வுலகத்திலுள்ளே. அப்படியவன் திரிவதற்குக் காரணம் யாதெனில் ஒவ்வொரிவனும் தான் பிறந்தவிடத்தில் யோசித்துப்பார்க்கத் தனக்குத்தானே தத்துவம் விளங்கும்; சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா! எ-று. (உசந)

குழந்தை.

பாலனு இந்துக நப்புடு
சாலங்கா ஜலகமார்ச்சி ஸஹஜமுகதாடன்
பாலிதொ மந்த்ரபு சானியு
யீலோகுலு மெச்சகானு யிலவைபுவேமா.

(இ-ள்.) பிறந்த பாலனை யெடுத்துக்கொண்டபோது இயற்கையிலேயே அப்பாலகனுக்கு ஸ்நானஞ்செய்வித்து அதிகப் பிரியத்துடன் மருத்துவச்சியானவள் அந்தப் பிள்ளையைக் காண்பிக்கக்கண்டு இவ்வுலகத்தார் புகழ்ந்து கொண்டாடி மகிழ்வார்கள் வேமா! எ-று. (உசச)

சிசுவுநரவிபட்டி சேட்டலோனபெட்டி
சுடம கர்ம்முஜேசி கனதநோட
நடுச்சு தினமுலெல்ல நாணட்டி கிட்ளனி
தெலுயஜேசெநபுடு திடவு வேமா.

(இ-ள்.) அச்சிசுவையெடுத்து ஈ யெறும்பு கொசுகடிக்காத படிக்குத் தொட்டிலில் கிடத்தி மைதீட்டி ஆபரணங்கள்பூட்டித் தாலாட்டிச் சீராட்டிப் பாராட்டிச் செல்வமாய் வளர்த்துவர

வெனுக தெலியலேக வெர்ரியை செடிபோவு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தோற்பைக்குள்ளே தன்சினத்தை வைத்திராமித்தவன் விவகாரியானால் பின்னிட்டு அதனாலுண்டாகுஞ் சுபாசுபங்களைத் தெரிந்து நடக்கவேணும். அப்படித் தெரிந்து நடவாதவன் பயித்தியம் பிடித்தவனாகிக் கெட்டுப்போவான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௧௭௦)

மனசுலோன நுன்னே மதமெல்ல யொகடைதெ
மனசுலோன நுன்ன மஹிம தெருகு
மஹிம தெருகனிவாடு மரணம்பு தெருகுனெ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உலகத்திலிருக்கும் மதங்களெல்லாவற்றையும் மனதிற்குள் ஒருவனென்று பாவித்தால் அந்த மனதிற்குள்ளிருக்கும் மகத்துவத்தை யறிவான்; அப்படி யம்மகத்துவத்தை யறியாதவன் மரணத்தை யறிவனோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௧௭௧)

கட்டமு கானிகஜேசி கான்கு யெத்துக ஜேசி
நிர்க்குணமு நுவுலக நீவுஜேசி
தெலிசி காநுகாட திவ்யாம்ருதமு யோகி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இச்சடலத்தைச் செக்காகச் செய்து அந்த செக்கை மாடாகச்செய்து செக்கில்கட்டி நிர்க்குணத்தை எள்ளாகச் செய்து அச்செக்கில் எள்ளைக்கொட்டி எண்ணெயாடும் மர்மத்தைத் தெரிந்திட அது திவ்யமாகிய அமுதமாம்; இந்த சூசனையை யறிந்தவன் யோகியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௧௭௨)

இட்டிகட்டமுலோன யெட்டின ஜீவுனி
கானலேக நருடு காசிகேகி

வெதகிவெதகி நருடு வெர்ரியை செடிபோவு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இப்படிப்பட்ட ஆக்கைக்குள் வைத்த ஜீவனைக் கண்டறியாமல் மனிதன் காசிக்குச்சென்று தேடித்தேடிப் பயித்தியக்காரனுகிக் கெட்டுப்போவான்; சர்வ வியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று. (நஎங)

கட்டமுலோனுன்ன மதமுலன்னியு கோசி
திட்டவுஜேசிமனசு தேடபரச்சி
கட்டமுநில்புவாடு கனதத்வயோகிரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இவ்வாக்கைக்குள் ளிருக்கும் மெல்லா மதத்தையு மறுத்து மனதைத் திடஞ்செய்துத் தெளிவுபடுத்தி இவ்வாக்கையையழியாமல் நிருத்துமவன் கனம் பொருந்திய தத்வயோகியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

ஈகடமு னந்து ஜ-டிச்சின
யேகடமுனயிந்தே யனுச்சு யெருகக மதிலோ
னேகடமு மீதவாஞ்சயு
யீயவனினிதோச்ச தெவரிகெப்புடு வேமா.

(இ-ள்.) இவ்வாக்கையினிடத்திற் பார்த்த சுகம் மெந்தவாக்கையிலும் இவ்வளவேயென்று மனதிலுணராமல் எந்தவாக்கையின் மீதும் ஆசையேனோ? இவ்வுலகத்தாருக்கு இந்த மதி தோன்றுவது மெப்போ? வேமா! எ-று. (நஎ௪)

தோலுகட்டமுலோன தொலககாயுன்னட்டி
ஞனுமொகனி ரீதி னலருசுண்டு
ஜீவிகட்டமு விடிச்சி சிக்கூடி யோவுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தோல்பாண்டத்திற்குள்ளே நீங்காமலிருக்கும்படியான ஜீவனுனது இப்பாண்டமே மனைவி தானே மனைவாள

ஜனைப் போலவும் பாவித்து பாண்டமாகிய மனைவியின்மீது அதிக ஆவல் கொண்டிருக்கும்படியான ஜீவன் இப்பவோ எப்ப வோ ஒரு நாளைக்குச் சிக்கறுந்துபோகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௫௭௬)

கட்டமு ஜலமுலந்து ககனம்பு கனிபிஞ்சு
கட்டமுஜலமு வேமி ககன மேமி
கட்டமுலோன ஜ்யோதி க்ரமமுனு தெலியுடெ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பாண்டத்தின் ஜலத்தினிடத்தில் ஆகாயங் காணப் படும்; அப்பாண்டத்தின் ஜலமென்ன ஆகாயமென்ன? இதை நன்றாக யோசித்துப் பாண்டத்திற்குள் ளிருக்குஞ் சோதியின் கிரமத்தைத் தெரிந்து கொள்ளுங்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௫௭௭)

ஒக்கயிண்டிலோன பெக்கு கட்டமுலு நிலிபி
அன்னியன்னி ரூபு லலருசுண்டு
அதியு தொலகெனேனி னன்னியு பயலௌனு
விஸ்வதாபி ராமா வினர வேமா

(இ-ள்,) ஒரு வீட்டிற்குள்ளாகப் பலபாண்டங்களை நிறுத்திப் பார்க்க அத்தனையிலும் அத்தனை ரூபங்களாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கும்; அந்தப்பாண்டங்களை நீங்கிப்போமாகில் எல் லாம் வெட்டவெளியாகும்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௫௭௮)

காயமு தககூடி கடகி யோகையுன்ன
காயமிலனு பட்ன கனுடுகாடு
காயமுனனுமுக்தி கதிகெகவலெனயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்,) இக்காயத்தினுள்ளிருக்கும் ஆத்துமாவுடன் தக்க படி சேர்ந்து மாயைக்கடந்த யோகியாகியிருந்தபோதிலும் அந்த யோகியின் ஆத்துமா வெளிப்பட்டுப்போனதே அக்காயம் பூமி

யில் விழுந்தால் கன்வானல்லன்; காயமிருக்கிறபோதே முக்தி யாகும் தெரிக்கவேணும்; சர்வவியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று. (நளக)

காயமு பயலெள்ளட்ட பயலு காயம்பெள்ட்ட
காயமு பயலந்து காயமெளட்ட
காயமு விடுட்டலில காயம்பெ முக்திரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) காயம் வெளியாக அந்த வெளியானது காயமாக அக்காயமானது வெளியினிடத்தில் காமமாகவும் காயத்தை விடுவதும் இவ்வுலகத்தில் முக்தியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (ந-அ0)

புட்டிநதியு மொதலு புருஷுடையேதாக
நூந்த்ரசானிகூட மரிகியுண்டு
போயிரா யனுச்சுனு பொந்துகா செலவிச்சி
யம்பேரந்தவாரு யவனிவேமா.

(இ-ள்.) பிறந்ததுமுதல் பிள்ளையின் கூடவே மருத்துவச்சிப் பழகியிருப்பாள். அப்பிள்ளைக்கு வயதாகும் பரியந்தம் பிள்ளையின் தாய் மருத்துவச்சியை மெத்தப் பிரியமாய் அழைப்பதும் உபசரிப்பதுமா யிருப்பாள். தக்க வயது வந்த மாத்திரத்தில் மருத்து வச்சியைப் போய்வாவென்று பொருத்தமாக செலவு கொடுத்து யாவருமனுப்புவார்கள் இவ்வுலகத்தில் வேமா! எ-று. (ந-அக)

புட்டினஜனுலெல்ல பூமிலோயல யுண்டெ
பட்டுனெ ஜகமுலு பட்டதெப்புடு
யமுனிலெக்க ரீதி யறிகி போவுச்சுனுண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பிறந்த ஜனங்கள் யாவரும் இறக்காமல் ஜீவித்து அவனிப்புவியிலிருந்தால் பிடிக்குமா ஜகங்கள்? பிடிக்கமாட்

டாதி. எமனுடைய கணக்கைப்போல நாளுக்குநாள் ஜனங்கள் தேய்ந்து போய்க்கொண்டிருப்பார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩அ௨)

புட்டினதி மொதலுக புருஷுடே காலம்பு
பாபமெட்லுஜேசெ பாடிகாலு
முதியுபுடமுகரணி முதமொப்ப காவலே
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பிறந்தது முதலாக புருடனெப்படி யெக்காலத்திற் பாவஞ்செய்தான்; அதை நன்றாயோசித்துப் பார்த்து எவன் பாபஞ் செய்தவன், புண்ணியத்திற்குடன் பட்டவர்கள் யாவர், இதுகளை நன்றாயுணர்ந்து முதிர்ந்த சுக்கங்காயைப்போல புருடனாக வேணும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩அ௩)

## நாள்.

ஒகதினமுனு கொகனெலயுனு
அகணிதமுகமுகமொக்கமேடு நருலகுகட்டுதா
யுகயுகமு லெக்கலு
பொகடொந்துனு ஜகமுலந்து பொனுயுத வேமா.

(இ-ள்.) ஒருதினம் ஒருநாழிகை, ஒருமணி ஒரு முகூர்த்தம், பகலிறவுஞ் சேர்ந்தது ஒருநாள், எழுநாள் ஒருவாரம், பட்சம் பதினைந்து நாள், முப்பதுநாள் ஒருமாசம், நாற்பதுநாள் ஒரு மண்டலம், ஆறுமாதம் ஒரு அயனம், இப்படி இரண்டயனமா னல் ஒருவருடமென்று நரர்களுக்கிந்தப் படியாக யுகங்கள்தோ றும் மிக்கணக்குகளிவ்வுலத்திற் பொருத்தமாகப் புகழப்படும்; வேமா! எ-று. (௩அ௪)

தினமொக்கட்டி நடச்சனுமரி
மினசந்த்ர ஸ்வரமுலில

இருவைவொதாகவெய்யனகா நார்னூரச்சுனு
மன்மூனதெலியங்கவலயு மஹிலோ வேமா.

(இ-ள்.) ஒருநாளைக்கு இருபத்தோராயிரத்து நானூறு சந்திரதலை நடக்குமென்று மனதினிடத்தில் தெரிந்து கொள்ள வேணு மிவ்வுலகத்திலுள்ள ஜனங்கள்; வேமா! எ-று. (நூஅரு)

ஈஸ்வரம்புலன்னி யேடுபாள்ளுகஜேசி
ஏடுமூர்த்துலகுனு யிச்சிவேசி
நித்தியகர்மமுன னு நிலுச்சுராகொரயோகி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இந்தச் சுரங்கள் யாவையும் ஏழுபங்காகச் செய்து அதை யேழுமூர்த்திகளுக்குங் கொடுத்துவிட்டு நித்திய கர்மத்தினில் யோகியானவர் நின்றிருப்பார்; சர்வ வியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று. (நூஅசு)

பரகினவாயு ஜபம்புன
நொயங்கா நீருநண்டியங்கம் பணச்சுன்
தரியுனு தாயுனுயெருகக
யிருவுன்னதி தெலிய ஜனுலகிஹமகு வேமா.

(இ-ள்.) புகன்றவாயுஜபத்தினால் நீரைத்தொட்டு அங்கத்தை மடக்கி தூரமும் சமீபமுமறியாமல் நடுநிலைமையாய் யிருப்பதை ஜனங்கள் தெரிந்துகொள்ள இகமாகும் வேமா! எ-று. (நூஅஎ)

ஆகொரத்தின விதமெருகுச்சு
சேகொனியாமூலதனமு ஜெங்துசுனுன்னன
யாகல் யாந்தரமுசுதா
மேகாலமுபின்னவயசு யிஹமுன வேமா.

(இ-ள்) அந்தச் சிறிய உருவத்தையறிந்து அந்த மூலதனத்தைக் கைக்கொண்டு தெரிசித்திருந்தால் சதா அழிவில்லாமல் கல

யாந்தரத்தினும் யெர்தகாலத்திலு மித்தரையில் சிறுவயதுடையவனுக்வே யிருக்கலாம் வேமா ! எ-று. (ரு௲அ)

கரதலம்புநொத்தி காலநதிமி பட்டி
ஊர்த்வத்ருஷ்டி சேத கொனரகில்மி
சர்வமைதனருட்ட சாலநாயுவுதல்கு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்) கரதலத்தினாலே காலையழுத்திப் பிடித்து மேல் நோக்கி திருஷ்டியைப் பொருந்தும்படி நிறுத்தித் தானே சகலமுமாகி பிரகாசித்துக்கொடிருக்க சால்வும் ஆயுசுண்டாகும்; சர்வவியாபியாகிய ஓ ராமா ! கேளும் வேமா ! எ-று. (ரு௲அக)

வாரம்.

ஆதிசோமபௌம புதுலாதிகாகூடி
குருவுசுக்ரசனியு வாரகுருதுலென்னி
இனன்னிதினமூலன யிலநொக்கதிவசமே
விஸ்வதாபி ராமா வினர வேமா.

(இ-ள்.) ஞாயறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி முதலானவர்களுஞ் சேர்ந்த வாரங்களின் அடையாளங்கள் எத்தனை? இந்த அடையாளங்கள் பொருந்தின நாள்கனௌத்தனையானால் இப்பூதலத்தில் ஒரு திதியாகும்? சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (ரு௲கo)

லோக மந்து புட்டி லோகமந்தெ பெரிகி
லோகமேலு கோர்வ லேக ஜனுலு
லோகமந்து சிகி லோபடி செடிபோவு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உலகத்திலே பிறந்து இந்த வுலகத்திலே வளர்ந்து இவ்வுலகமேன்மைக்கு வெறுக்காமல் ஜனங்கள் இவ்வுலகமாய்கைக்குள்ளே விழுந்து கெட்டுப்போவார்கள்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (ரு௲கக)

லோகமு மாயனிமதிலோ
லோகம்புன கலியகுண்டு லோனகுவெலியுன்

யாகும்மர புருகுனுவலெ
லோகம்புன னுண்டு யோகலோனுடு வேமா.

(இ-ள்.) உலகமே மாயையென்று மனதிலெண்ணி இந்த வுலகத்திற் கலக்காமலிருக்கும் உத்தமபுருடன் உள்ளும் புறம்புமாக சேற்றினில் வசிக்கும் பிள்ளைப் பூச்சியைப் போல உலகத்தினில் யோகவேலாலனுக விருப்பன்; வேமா! எ-று. (௩௧௨)

இந்த்ரலோகமனக யிந்த்ரஜாலமனக
இந்த்ரவித்யலனக யின்னியொகட்டெ
கலியுகமுனநருலு கானகப்ரமதிரோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இந்திரலோக மென்றும் இந்திரஜால மென்றும் இந்திரவித்தை யென்றும் இத்தனையும் ஒன்றே. இந்த மர்மத்தை கலியுகத்து ஜெனங்கள் காணுமல் ப்ரமிக்கின்றார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௧௩)

விஸ்வமனமேனமிவரிஞ்சி சூடண்டி
விஸ்வ மைதுமேத வெலயுசுண்டு
விஸ்வமு மதிலோனவெதகி வீக்ஷிஞ்சண்டி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) விஸ்வமென்றுலென்ன அதை யோசித்துப்பாருங்கள்; இந்த விஸ்வமானது பிரிதிவி அப்பு தேயு வாயு ஆகாசமென்னும் இவ்வைந்தினுலே விளங்கிக்கொண்டிருக்கும்; அந்த விஸ்வத்தை மனதிற்குள்ளாகத் தேடிப்பாருங்கள்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௧௪)

லோககு தனுச்சீயனகர
லோகமுதாச்சீயனங்க லோகமுலோன
லோகமு தனலோ யுண்டுட்ட
லோகமு இலஞ்சங்க முத்திலோகமு வேமா.

(இ-ள்.) இவ்வுலகம் தன்னைச் சீயென்னத் தானிந்த வுலகத்தைச் சீயென்ன இந்த வுலகத்திற்குள்ளேயே தானிருப்பதை

யும் தனக்குள்ளே இந்த லோகமிருப்பதையும் எண்ணிப் பார்க்க முக்தி யுலகம் தனக்குள்ளே யிருக்கின்றது; வேமா! எ-று. ()

தனதுகர்மமுசேத தானுலோகமுலோன
தனதுதல்லி கர்ப்பமுன னுபுட்டி
தன்னுமரச்சிதானு தனுவனிசெநேயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தன்னுடைய கர்மத்தினாலேயே தானிந்த வுலகத்திற்குள் தாயின் வயிற்றினில் பிறந்து தன்னை மறந்து தானே யிந்தத் தேகமென்று கெடுமையா; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௬௬)

மருபு சேத மானவ தேஹம்பு
எத்தவலசெகானி யிஹமுநந்து
மருபுலேகயுன்டெ மரண மெக்கடிதன்னு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மறப்பதும் இறப்பதினாலே இந்த மானிட ஜென்மம் யிவ்வுலகத்தினில் எடுக்கவேண்டியதாயிற்று. ஆகையினாலே மரதி யில்லாமலிருந்தால் மரணமேதையா சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௬௭)

மருவவலெ பாபசங்கதி
மருவங்காவலெ மதுரமு மரிவிஸ்வமுலோ
மருவவலெ பருலநேரமு
மருவங்காவலதுமேலு மஹிலோ வேமா.

(இ-ள்.) பாவிகளுடைய நேசத்தை மறக்கவேணும்; தனங்களின்மீது நோக்கத்தை இவ்வுலகத்தில் அவசியம் மறக்கவேணும்; அன்னியர்களுடைய தப்பிதத்தை மறக்கவேணும்; ஒருவர்செய்த நன்றியை எப்போதும் மறக்கவேண்டாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௬௮)

தருச்சு தம்சுபாசி தரிதோடதனுமரச்சி
தானுநேனனி யெடி தலபுமரச்சி

வுண்டுநா தடெகதா வுத்தமயோகியெள
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ராஜஸம் தாமஸங்களை மறந்து நீர் நாமென்னும் நினைப்பை மறந்துயிருக்குமவரல்லவா உத்தமமாகிய யோகியாகும்? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

மதுமுதாரிமரச்சுமுதுரா மருதமுஜ ஒச்சி
மருவருபுஜ ஒச்சி மனசுமரச்சு
யோனிஜ ஒச்சிபரம யோகம்புமரச்சுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மதுரமாகிய அமுதத்தைப் பார்த்து தன் குலத்தையும் மதத்தையும் மறப்பான்; மங்கையின் முகரூபத்தைப் பார்த்து மதிமறப்பன்; இந்த மங்கையின் யொனியைப் பார்த்து பரமயோகத்தை மறப்பன்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சூ00)

பசி.

ஆகலிச்சே யெட்சுசு மரி
லோகமு தனவெக்வரனுச்சு லோலாட்சுடுதா
மாகலிதீரின யப்புடு
சீகட்டி பாபங்கசவியு செலகுனுவேமா.

(இ-ள்.) பசியினு லழுதுகொண்டு பின்னு மிவ்வுலகத்தில் தனக்கு யெதிரியாரொன்று ஆத்துமா விசனப்படுகிறபோது பரமாத்துமா பசிதீரும்படி அனுக்கிரகம் புரிந்தமாத்திரத்தில் அந்த ஆத்துமாவுக்குப் பசிதீர்ந்தபோது இருளைப்போக்கிப் பிரகாசம் ஒளிபெற்றுத் துலங்கும் வேமா! எ-று. (சூ0க)

ஆகலிவலெ செடுனு ஆசார க்ரமமெல்ல
சீகட்டிவலெ செடுனு சித்தசுத்தி
வேகட்டிவலெ செடுனு வெனகட்டிபிருவல்ல
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஆச்சார சீலங்களெல்லாம் பசியினாலேகெடும்; நிர்மலமான மனது அந்தகாரத்தினாலே கெடும்; தேகத்தின்

வனுவெல்லாங் கெற்பத்தினாலே கெடும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௨0௨)

பனிதொட்டவுனு வேரு பங்காரமொக்கட்டி
பரக கட்டமுனு பஹு ப்ராணமொக்கட்டி
ஆரயதின்னனுவேரு யாஹாரமொக்கட்டி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஆபரணங்கள் வெவ்வேறு பொன்னொன்றேயாம்; தேகங்கள் பல பிராணனொன்றேயாம்; பிரசாதங்கள் வெவ்வேறு ஆகாரமொன்றேயாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௨0௩)

சகலமுயாகலி தொரங்க
நிகிலா த்மூடுபெட்டிடெ மருகுநீச்சபுகுணமுல்
சகலம்பை தாஜம்புனு
ய ஃட்டாயாவஸ்து வெவ்வரந்துரு வேமா.

(இ-ள்.) பசியினிமித்தியம் சகல வஸ்துக்களையும் சர்வாத்துமன் உலகின்கண் பிறப்பித்து மறைத்துவைத்தார்; நீசகுணங்கள் சகலமும் தாமாகிக் கொல்லும் ஆ-ஹா! ஹா அந்தவஸ்துவையாரறிந்து தெளிவார்கள்? வேமா! எ-று. (௨0௪)

அழுகை.

காவுகாவு மனுச்சு கருணதோ நேட்சு
சிசுவுக்ஷுத்துசேத சிக்கிசொக்கு
பாலுயிச்சுநட்டி பணதிகிபுண்யம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மெத்தப் பசியினால் காவுகா வென்று சிசுவானது இளைத்துச் சோர்ந்திடக்க அச்சிசுவுக்குக் கிருபையுடன் பால் கொடுக்கும்படியான மங்கையற்கு வெகுபுண்ணியமுண்டாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௨0௫)

பால்.

பாலப்ரியமுசேத பரகநேட்சேடிசிசுவு
க்ஷுத்து தப்பிகில னுசோககபட

தல்லிபனுலு தீர்ச்சி தனயுனி முத்தாடு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பசிதாபங்கொண்டு பாலின்மீது அவாமிகுந்து அழுது சோர்ந்துப் பூமியில் விழுந்து கிடக்கும் சிசுவுக்கு அன்னையானவள் வீட்டு வேலைகள் முடித்துவந்து புதல்வனை யெடுத்து அவாதீரப் பாலூட்டிக் கொஞ்சி விளையாடுவள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௧௦௬)

பாலுத்ராகினபுடு ப்ராணம்பு ரக்ஷிஞ்சு
பாலுத்ராகுகுன்ன படலிகானு
பாலவலன முக்தி பலமந்தகாலேக
சாலமூர்க்குடைய ஜகதி வேமா.

(இ-ள்.) ஒரு மனிதன் ஞானப்பாலுண்டபோது அப்பாலானது அவன் பிராணனைக் காப்பாற்றும்; அப்பாலை யுண்ணமலிருந்தால் ஆயாசமுண்டாகும்; அப்பாலினாலே முத்திபல னடையமாட்டாமல் சாலவும் அற்ப மனிதனிவ்வுலகத்தில் மூர்க்கனாகினன்; வேமா! எ-று. (௧௦௭)

அம்ருதஸா தனமுன நருகு பலுதுரு
அம்ருத மெஞ்சிசூட நந்தலேரு
அம்ருதமு விஷமாயெ யதியேமி சித்ரமோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) யோக்யர்களெல்லவரும் அமுதத்தைப் புசித்துச் சாதனஞ் செய்வதினாலே தேகம் பூரித்துப் பருத்திருப்பார்கள்; சாமானிய மனிதர்களந்த அமுதத்தை யெண்ணிப்பார்க்க முயலமாட்டார்கள்; அதேனெனில் அவர்களுக்கிந்த அமுதம் விஷமாயிற்று; அதென்ன சித்திரமோ; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௧௦௮)

பாலலோன புலுசு லிலதோ கலசின
விரிகி துனகலவுனு விரிவுகானு

தெளிவிமன்முலோன திவ்ய தத்வமுதேட்ட
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பாலுக்குள் புளிப்பு கலந்தால் அப்பாலானது முறிந்து துண்டுகளாவதுபோலத் தெளிவில்லா மனதையுடைய வன் மாயசம்சாரத்தில் விழுந்து நைந்து நரகத்தை யடைவான்; தேர்ந்த மனதிற்குள் திவ்வியமாகிய தத்துவமானது தெளிவாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

பால கலயுநீரு பாலைராஜில்லு
நதியு பான யோக்ய மைனயட்லு
சாதுஸஜ்ஜனுமூல சாங்கத்யமுலசேத
மூடஜனுடுமொனயு முக்திவேமா.

(இ-ள்.) பாலுடன் கலந்தநீரும் பாலாகி விளங்குவதுபோலும், நதிஜலமானது அருந்துவதற்கு யோக்கியதையானதுபோலும், சாதுக்களுடைய சங்கத்தினாலே மூடனாயிருக்கும் மனிதனும் முக்தியையடைவான்; வேமா! எ-று. (சஅ0)

பாலுபெருகுநெய்யி பாயசம்புனுசல்ல
பாலலோனெனகல்கு கானலேரு
பாலவண்டிகுலம்பு ப்ரம்மம்புகானுண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பால், தயிர், நெய், பாயசமும் குளிர்ச்சியான பாலுக்குள்ளேயுண்டாகும் அதை அவிவேகிகள் காணமாட்டார்கள்; அப்பாலையொத்த குலமானது பிரமமாக விருக்கும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சஅக)

பாலுபஞ்சதார பாபரபுன்னலோ
சாலபோசிவண்ட சவிகிராது
குட்டிலமானவுலகு குணமேலகல்குரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) எட்டிப்பழத்தில் பாலுஞ் சர்க்கரையும் மெத்தக் கொட்டிச் சமைக்க அது மதுரமாகாததுபோல மாயாசம்பந்த

மூடையமரானவனுக்கு க்ஞானமார்க்கங்களை எத்தனையா யெடுத்தோதினபோதும் அவனுடைய துர்க்குணத்தை மாற்றமாட்டான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று.

செட்டபாலு ஜனுலு சேதந்து ரிலலோன
நென்னபெகாட்டபாலு யெந்தஹிதவு
பிதுகுராடு மாட்ட பாட்டிம்ப நிஜமயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இவ்வுலகத்திலுள்ள ஜனங்கள் எப்படிமரத்தின் பாலைக் கசப்பென்றும் எருமைப்பாலை மெத்தயினிப்பென்றுஞ் சொல்லுவார்கள்; அதைப்போலப் பத்துப்பேர்கள் நவிலுஞ் சொல்லை யோசிக்கிலுண்மையாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சகங)

காலுகாலு பெனசி கரமுன சன்னண்டி
சன்னுபொடிசிசால சப்பிசப்பி
பாலுத்ராகுவாடு பதியெளனு சுதுடெளனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மங்கையின் கால்களுடன் தன்கால்களைப் பிணைத்துக் கைகளால் ஸ்தனத்தைத் தொட்டு முட்டிமுட்டி மெத்த சப்பி சப்பிப் பால்குடிக்குமவன் பதியுமாவான் சுதனுமாவான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சகச)

நித்ரலோனி னித்ர நிர்ஜர ஸங்கம்பு
தாமசம்புநித்ர தலகத்ரோச்சு
நித்ரலோனி னித்ர நிர்ப்பீதி னுதயிஞ்சு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ராஜஸநித்திரைக்குள் நித்திரைசெய்வது தேவஸ்திரீ சங்கமஞ்செய்ததாம்; தாமசநித்திரைக்குள் நித்திரைசெய்வது மரணிட சங்கமஞ் செய்ததாம்; சாத்வீக நித்திரைக்குள் நித்

நித்திரைசெய்வது நிர்ப்பயத்தைப் பரமாத்துமாவுடன் கலந்திருக்கச் செய்கும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

நித்ரலோனினித்ர நீர்ஜரசங்கம்பு
தாமசம்புநித்ர தலகிபோவு
சதிபதேதகமைன சமயம்புநித்துர
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நித்திரைக்குள் நித்திரைசெய்வது தேவபோகத்தையனுபவிப்பதாகும்; தாமசத்தினாலுண்டாகும் நித்திரையினால் பரமாத்துமாவை விட்டதாகும்; மனைவியாகிய ஆத்துமாவும் மணவாளனாகிய பரமாத்துமாவும் ஒன்றாகியிருக்கும் சமயத்தின் நித்திரையே நித்திரையாகும்; சர்வ வியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று. (சகக)

நித்ரலோனினித்ர நிஜ முகாதெலிசின
பத்ரமகுனுமீதி ப்ரம்மவித்ய
நித்ரதெலிசினதடே நிஜமைனயோகிரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நித்திரைக்குள்ளே யிருக்கும் நித்திரையை உண்மையாகத் தெரிந்து கொண்டால் மேற்சொன்ன பிரம்ம வித்தையானது ஆத்துமாவை யழிக்காமல் பத்திரமாகக் காப்பாற்றும்; இந்த நித்திரையைத் தெரிந்தவனே உண்மையான யோகியாகும். சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

நித்ர மேலுதெலசி நிலுபுடி மீலோன
ப்ராணி மேலுதெலசி பாயகுண்டு
ப்ராணிநிதுரந்து பரமாத்மு டெருகுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நித்திரையிலிருக்கும் மேன்மையறிந்து உங்களுள்ளத்தில் நிருத்தி அசையாமல் படியவைத்துக் கொள்ளுங்கள். அப்படி யந்த பரமாத்துமாவை நிருத்திக்கொண்டால் அப்பர

மாத்துமா ஆத்துமாவின் மேன்மையையறிந்து நீங்காமலிருக்கும்; அப்பரமாத்துமாவைக் காண்பதெப்படியெனில் நித்திரை செய்ய அன்னித்திரையின் சந்தில் பரமாத்துமாவைத் தெரிந்து கொள்ளக்கடவீர்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

நியமதாசனமுன நிலிசினசித்தம்பு
தாமசம்புநித்ர தலகத்ரோசு
நித்ர தொலகினதரி நிரப்பீதி நுதயிஞ்சு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நியமமென்னும் ஆசனத்தின்மீது மனமானதுநின்ற மாத்திரத்தில் தாமசநித்திரையானது அக்கணமே பறந்துபோகும்; அந்த நித்திரை நீங்கினவுடனே நிர்ப்பீதி உதயமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சகக)

சனு குடிச்சினசிசுவு சரசநித்ரிஞ்சங்க
ஸ்வப்னமந்துஜொச்சி சரசபாடு
நவ்வு நேட்புகானு நவனிலோ ஜனுலெல்ல
விந்தஜூசு துரயுடு வேரி வேமா.

(இ-ள்.) பாலுண்ட சிசுவானது சந்தோஷத்துடன் நித்திரை செய்கிறபோது அக்குழந்தையின் கனவிற் புகுந்த விலாவாகப்பாடிச் சிரித்து அழும்; அதை யிவ்வுலகத்தோர் யாவரும் அவ்விந்தையை அப்போது வைத்தியங்கொண்டு பார்ப்பார்கள், வேமா! எ-று. (சஉ0)

சொப்பனம்.

ஸ்வப்னமனக தேஹ ஸ்வதந்த்ரமுனுகாது
ஸ்வப்னமனகஜீவ சங்கடம்பு
அல்பநருடுதெலியு டவனிலோநருதயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சொப்பனமென்றால் தேகத்தின் சுதந்திரமுமல்ல, சொற்பனமென்றால் தேகவுபாதி. இந்தரகசியத்தை யிவ்வுலகத்

தில் அற்பமனிதன் அறிந்து நடிப்பது மெத்தவுமரிதாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சஉக)

ஜனனமரணமெல்ல ஸ்வப்னசுஷுப்துலு
ஜகமுலெல்லநிண்டி ஜலமுலண்ட்ரு
அவனிலோ ஜனுலந்த ரரயங்க லேரயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஜன்னமரணம் யாவும் சொப்பனசுஷுப்திகளாகி ஜகமெல்லாம் நிறைந்து இதை ஜலமென்பார்கள்; இந்தச் சூசனையை உலகத்திலுள்ள ஜனங்கள் யாவரும் தெரிந்துகொள்ளும் பொருட்டு ஆராய்ந்து பார்க்கமாட்டார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சஉஉ)

சுஷுப்தி.

நித்ர ஜாகரமுலு நெலவுல தானுண்டே
கப்புகொன்ன மாயு கானலேக
தப்பர நிஜமுலனு தானுலெஸ்ஸகனுக
கொப்புன செடிபோவு குணமு வேமா.

(இ-ள்.) நித்திரை சாக்கிரதை இவ்விரண்டும் தமக்குண்டாகிய இருப்பிடத்தில் தாமிருக்கையில் அவ்விரண்டையுஞ் சூழ்ந்துகொண்ட மாயையின் குணத்தைக் கண்டு கொள்ளாமலும் அதன் பொய்மெய்யை நன்றாகத்தான் காணாமல் உடனே குணங் கெட்டுப்போகும் வேமா! எ-று. (சஉங)

ஜாக்கிரதை.

நருடு ஜாகரமுன நட்டிபிஞ்சு சுண்டுனு
நருனிகிலனுஜாக்ர தருதுசும்மு
நருடுஜாக்ரதனுட்ட னவனிலோ பரமாத்ம
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஜாக்கிரதையில் நரஞனவன் நடித்துக்கொண்டிருப்பான்; அந்நரனுக் கிவ்வுலகத்தில் மேன்மையான ஜாக்கிர

தையிலிருப்பது அரிதாகும்; அந்த நரஜனவன் னன்றாகவாராய்ந்து இதுவே ஜாக்கிரதையென்று கண்டு தெளிந்து சொல்லுமவனே பரமாத்துமாவாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஉ௪)

ஜாக்ரதனகநேமி ஜன்மமனகநேமி
ஜன்மமுனகுநரய ஜாக்ரதாயே
ஜன்மஜாக்ரதகுனு ஜதகூடுட்டேதி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஜாக்கிரதை யென்றாலென்ன? ஜன்மமென்றாலென்ன? இதை யோசிக்கில் ஜன்மத்திற்கு ஜாக்கிரதையிலிருப்பதே உரித்தாகியது; அந்த ஜன்ம ஜாக்கிரதைகளிரண்டும் ஏகோபித்து ஒன்றாய்க் கூடுவதேது; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஉ௫)

மூஜ்ஜகமூலவஸ்த மூடைய் யேசோதிஞ்ச
மூட்ட ஞாக்கட்டுந்தி மொதட்டரோசி
மூட்டிலோனனுண்டு மூக்தினிகன்டிரா
விஸ்வதாபி ராம வினர வெமா.

(இ-ள்.) மூவுலகங்களிலுஞ் சோதித்துப்பார்க்க சொற்பனஞ் சுஷுப்தி ஜாக்கிரதையென அவஸ்தைகள் மூன்றாயிற்று; இந்த அவஸ்தைகள் மூன்றிலும் ஒன்றிருக்கின்றது; அஃதியாதெனில் சுஷுப்தியவஸ்தையேயாம்; அந்தச் சுஷுப்தியவஸ்தையை முதலில் வெறுத்து அம்மூன்றுக்குள்ளேயிருக்கும் முத்தியைக் கண்டு கொண்டேன் சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஉ௬)

## மூத்திரம்.

உத்சனுபுட்டின தனுவுகு
யெச்சோட்டனு யேதிகுலமு யேதிஜம்பெள

மச்சரமு மானுசத்யமு
யச்சுபடன் னிலிசெனேனி யதிகுடு வேமா.

(இ-ள்.) மூத்திரத்திற் பிறந்த காயத்திற்கு யெவ்விடத்தி லுங் குலமேது கோத்திரமேது. எது வுண்மையாகுமோ அந்த மாச்சலியத்தைவிட்டு நிஸ்தரங்க சாகரத்தைப்போல மனது நிர் மலமாய் நிற்குமேயாகில் அப்புருடன் சத்தியமாக மேன்மையா னவனாகும்; வேமா! எ-று. (சஉஎ)

உச்சலோனே புட்டி வுச்சலோனே பெரிகி
வுச்ச காசபடிடு யோகிகலடே
உச்சரோயுவாடு வுத்தம யோகிரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மூத்திரத்திற்குள்ளே பிறந்து அம்மூத்திரத்தி லேயே வளர்ந்து அந்த மூத்திரத்திற்கு ஆசைப்படும்படியான யோகியு முண்டோ? அம்மூத்திரக்குழியை வெறுக்குமவனே உத்தமமான யோகியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சஉஅ)

அத்தமாம வுச்ச ஆலயி ஜன்மிஞ்சே
ஆலிமகனி வுச்ச யரயெசுதுடு
உச்ச தேஹமுனகு வுச்சாஹ படனேல
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மாமி மாமன் மூத்திரம் மனைவியாகி ஜென்மித் தாள்; அந்த மனைவி மணாளன் மூத்திரம் புத்திரனாகினான்; இப் படிப்பட்ட அசுசியாகிய மூத்திரதேகத்திற்கு ஆனந்தப்படுவ தேனோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

உச்சலோனகாம மொச்சுடகதலிஞ்சி
உச்சகதனுஜேஜி யுர்விநெரிசெ
இச்சட்டகுல்ஜாண்டு யெவ்வடுலேடயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மூத்திரத்துவாரத்தி னுள்ளிருந்து இந்திரியம் வரு வதைப்போல் அசைத்து இந்த மூத்திரத்துவாரத்தின் வழியே

பிறந்து இவ்வுலகத்தில் புருஷனுகினுன்; சொல்வதற்கு அசுசி யாகிய துவாரத்தில் பிறந்த அம்மனிதனை நல்ல குலத்தனென் றுலகத்தோர் கொண்டாடுவார்கள், அதுயொய்யே; இப்பூதலத் தில் நற்குலத்துதித்தவ னெவனுமில்லையையா; சர்வ வியாபி யாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுகூ0)

கச்சது காமனுகூடுக
தர்ச்சங்காஜகமூபுட்டே தாதலநாடே
இச்சட்டகுல ஜுண் டெவ்வடு
சச்சரித்து புந்தரனுச்சு சாட்டர வேமா.

(இ-ள்.) பாட்டன் மூப்பாட்டன் நாளிலேயே புருடனும் பெண்ணுங்கூட இவ்வுலகத்தில் பிள்ளைபிறந்தான். அப்பிள் ளையை வளர்த்து அவனைப்போல நற்குலத்தோன் யாவன் ஒரு வருமில்லை யென்பார்கள்; சிலர் இழிகுலத்தோ னென்பார்கள். அதை யோசிக்கில் உயர்ந்த குலத்தனென்றும் தாழ்ந்த குலத்த னென்றும் பேதாபேதமில்லை; யாவத்திராளும் நற்குலத் துதித் தவர்களே யென்று சொல்லும் வேமா! எ-று. (சுகூக)

கச்சகாம ரெண்டு கதியங்க கதியக்க
வுச்சலோனேபிண்ட மூத்பவிஞ்சே
இசட்ட குலஜுடேடி யசட்டஹீனுண்டேதி
விஸ்வதாயி ராம வினர வேமா.

(இ-ள்.) புருடனும் பெண்ணுஞ் சேரச்சேர உஷ்ண மதிக ரித்து இந்திரியம் பெண்ணின் வயிற்றிற்சேர்ந்து பத்துமாதங் கடந்து பிண்டம் உற்பவமாயிற்று. அப்பிண்டத்தை யெடுத்து வளர்த்து அவனை உயர்ந்த ஜாதியென்றும் மற்றொருவனைத் தாழ்ந்த ஜாதியென்றும் சொல்லுவது அஞ்ஞானமே? அங்கு உயர் குலத்தவனேது இங்குயிழிகுலத்த வனேது? குலமெல்லா மொன்றேயாம்; சர்வ வியாபியாகிய வேமா! எ-று (சுகூஉ)

மலம்.

கடுபுலோனே மலமு கடமெல்ல யெமுகது
தோவுனொக்கமாம்ச துலமுகாதெ

மலமு ஙெந்திமீத மாணெட்ளு கலிகேரா
விஸ்வதாபீ ராம வினர வேமா.

(இ-ள்.) வயிற்றுக்குள்ளே மலமும் உதிரமும் நரம்பும் சீழும் எலும்பும் இறைச்சியுந் தோலுமாகிக் காண்பதற்குஞ் சொல்லுவதற்குங் கூடாத அசுசி நிறைந்த இம்மலபாண்டத்திற் குள்ளிருக்கும் மலத்தின்மீது மரமெப்படியுண்டாயிற்றோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௨௩௩)

பச்சிமல்மு தினுச்சு பண்டுட்டாகுல நமிலி
உச்சதப்பி த்ராகி யுடுகு கோர்ச்சி
கச்ச பிகியுஜெய கலுகுணு தத்வம்பு
விஸ்வதாபீ ராம வினர வேமா.

(இ-ள்.) பசியைப் போக்கப் பச்சைமலத்தைத் தின்று பழுப்பிலைகளை மென்று தாபந்திர மூத்திரத்தையருந்தி உஷ்ணத்திற்கும் பொருத்துச்சுவாசத்தை வெளிவிடாமல் பந்தனஞ் செய்யும் பிராணிகளுக்குத் தத்துவமுண்டாகுமா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௨௩௪)

மலமூத்ர ரத்தமுல மாம்சமுல யுக்தமெள
முட்டகுண்டனீள்ளு முஞ்சநேல
மைமுரிகியெபோவு லோமுரிகியுபோது
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உதிரம் மாமிசம் நரம்பு எலும்பு சீழ் மலம் மூத்திரம் முதலான துர்க்கந்தம் வீசிக்கொண்டிருக்கும் அசுசியாகிய இந்த முட்டுப் பாண்டத்தைத் தண்ணீரில் மூழ்த்தித் தேய்த்துக் குளிப்பாட்டுவதால் தேகத்தின்மீதுற்ற அழுக்கு போகுமேயன்றி உள்ளேயிருக்கும் அழுக்கென்னுங் கசடானது எள்ளின் மூக்களவேனும் போகமாட்டாது; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௨௩௫)

வாலியம்.

பால்யமந்து தனகு பாலயை ப்ரேமச்சே
தல்லிநபுகெருசி தனயுடேட்சு

தன் து பனுலுதீரி தனயுனி மூத்தாடு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பாலியத்தில் தனக்குப் பாலின்மீதிச்சைகொண்டு அப்போது அன்னையைப் பார்த்துப் புதல்வன் தேம்பித்தேம்பி யழுதுகொண் டிருக்கினும் அன்னையானவ ளப்புத்திரனைப் பாராட்டாமல் தன் வேலைகளெல்லா முடித்துவந்து புதல்வனை யெடுத்துப் பாலூட்டி முத்தமிட்டுக் களிப்படைவள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஙசு)

பால்யமந்து சிவுனி பரிகிம்பகா லேரு
யவ்வனம்புநந்து னநயலேரு
மூதுமியந்துச்கூட மோஸமை போயெரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பாலியத்தில் விளையாட்டினாலே சிவனைத் தேடக் காணமாட்டார்கள். யௌவனத்தில் காமவிகாரத்தினாலே அச் சிவபெருமானை மறந்து வெறிகொண்ட நாயைப்போலத் திரிந்து நாளைப்போக்குவார்கள். மூப்பு திசையினில் மீளவிருமலாலும் முன்னம் தானனுபவித்த துக்கங்களைச் சுகமென நினைந்துருகி மிகு கஷ்டமடைந்து சிவபெருமானைக் காணமல் மோசம்போய்ச் சக்கடக்காலைப்போல இறப்பும் பிறப்பில் உழன் றுகொண்டிருப்பன்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஙஎ)

வார்த்தைகள்.

மாட்டலு மாட்டலு வொச்சுனு
மாட்டலனே கலுகுச்சுண்டு மணிமந்த்ரம்புல்
மாட்டல பொந்திக தெலசின
மாட்டலனே முக்திகலுகு மஹிலோ வேமா.

(இ-ள்.) வார்த்தைகள் பேசப்பேசத் தெளிவான வார்த் தைகளும் அவ்வார்த்தையிலேயே யுண்டாகிக் கொண்டிருக்

கும் மணிமந்திரங்களைப்போல வார்த்தைகளின் பொருத்தந் தெரிந்து அவ்வார்த்தைகளாலே முக்தியுண்டாகும் இவ்வுலகத்தில் வேமா! எ-று. (சஙஅ)

மாட்டலாடனேர்ச்சி மனசுராஜிலஜேசி
பரகப்ரியமுஜெப்பி படலகுன்ன
ஒகரிசேதிசொம்மு லூரிகெவச்சுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வார்த்தைகளைக்கற்று அவ்வார்த்தைகளாலே மனதைச் சந்தோஷிக்கச்செய்தும் பிரியவசனங்களைச் சொல்லியும் ஆயாசப்படாமலுமிருந்தால் ஒருவர் கைப்பொருள் தன்னிச்சையாய் வருமா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சஙக)

மாட்டலாடவச்சு மனசுநிலுபராது
தெலுபவச்சு தன்னு தெலுபராது
சூரிப்பட்டவச்சு சூருண்டகாராது
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஞானமார்க்கத்தைப் பல்வாறு வாசாலகங்கரியமாகப் பேசலாமேயன்றி மனதைச் சஞ்சலமின்றி ஒருமைப்படுத்த முடியாது; ஒருவருக்குத் தெரியச்சொல்லலாமன்றி தன்னைத்தானறிவதருமை; சூலத்தைக் கையிற் பிடிக்கலாமன்றிச் சூரணகக் கூடாது; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

மாட்டலாடுடொகட்டி மனசுலோநொக்கட்டி
ஒடலிகுணமுவேரே பூஜவேரே
எட்லுகலுகுமுக்தி யிலாகுதானுண்ட
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மனதிலொன்று வாக்கிலொன்று குணம்வேறு பூசைகள் வேறு இவ்வாறாக மனதை சஞ்சலத்தில் விட்டிருக்குமவனுக்கெப்படி முக்தியுண்டாகும்; சர்வ வியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று. (சசக)

மாட்டலெல்லகல்ல மனசெல்லமரிதொங்க
லேடிப்ராணமிங்க யேட்டிநிஜமு
மாட்டசத்யமைதெ மரிசதாயுஷ்யம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வார்த்தைக ளெல்லாம் பொய்; மனதெல்லாம் விசேஷத்திருடு; இதுகளுக்காதாரமான ப்ராணன் என்ன உண்மை; வார்த்தை சத்தியமாகில் அப்புருஷ வுத்தமனுக்கு மேலும் நூறு வயதாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௪௪௨)

மாட்டக்செருபுமாட்ட மர்மமு கர்மமு
யாசலுகட்டகன்னு யப்புமுப்பு
பாபதோஷமைன பலுகுலு முலுகுலு
லேசமைன தெலிய லேரு வேமா.

(இ-ள்.) நல்லவார்த்தை துஷ்டவார்த்தைகளும் மர்மங்களும் கர்மங்களும் ஆசைகளுங் கஷ்டங்களும் கடனும் மூப்பும் பாபதோஷங்களுக் குரித்தாகி சொற்களுஞ் சோர்வுகளும் இப்பூதலத்திலுள்ள மனிதர்கள் தெரிந்துகொள்ள மாட்டார்கள் வேமா! எ-று. (௪௪௩)

அங்கிலெரிகிமாட்ட லாடனேர்ச்சினஜாலு
பின்னபெத்ததனமு லென்னனேல
பின்னசேதிதிவ்வெ பெத்தகாவெலுகதா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சத்திய மறிந்து வார்த்தைகளாட கற்றுணர்ந்தால் போதும்; அவர்களைச் சிறுவரென்றும் பெரியவர்களென்று மெண்ணுவதேனோ? அச்சிறுவன் கையிலிருக்கும் திருவிளக்கு பெரியதாய்பிரகாசிக்க மாட்டாதோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௪௪௪)

பதுகுராடுமாட்ட பாடியைதரஜெல்லு
னொக்காடடுமாட்ட யெக்கதெந்து

மாரகாடுவானி கூரெல்லனேபுரோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இவ்வுலகின்கண் யுத்தப் பேர்கள் சொல்லும்
வார்த்தைகளான்து நன்றாகிச் செலாமணியாம்; ஒருவன் சொல்
லுஞ் சொல்லானது யெங்கும் செலாமணியாகமாட்டாது யென்
பார்கள்; சகல ஜீவராசிகளிலும் உள்ளும் புறம்புமா யிருந்து
கொண்டு பொம்மைகளைப்போ லாட்டிவைக்கும் ஏகனாகிய பர
மாத்துமாவினுடைய கட்டளையை ஒப்புக்கொள்ளமாட்டார்
களோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

மாட்டலோனிவானி மஹிமதாதெலியக
மாட்டதெலியலேக மமதஜிக்கி
மாட்டதெலிஸெரெனி மரியாத்மயோகிரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சொல்லுக்குள் ளிருக்கு மவனுடைய மகுத்துவத்
தைத் தான்தெரிந்துகொள்ளாமலும் அந்தச் சொல்லைத் தெரிந்
துகொள்ளமாட்டாமல் தானென்ற கர்வங் கொண்டு வீணாள்
கள் கழித்து முடிவில் மரணமாவான். அச்சொல்லின் மர்மங்க
ளைத் தெரிந்து கொள்வனேயாகில் அவன் மென்மேலும் ஆத்து
மயோகியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

ராஜு மாட்டவலெனு ரவிகுடாடகவலே
நிந்தபனிகியுபிகி யெகராராது
கதிசியெரிகிதேனி க்ரஹசமானமுகாது
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அரசனுக்கிணைப்படி ஊழியக்காரன் நடக்கவேண்
டும், அப்படிக் கந்தசேவகன் நடக்காவிடில் அரசன் உடனே
யவனைப் பிடித்துத் தண்டனை செய்விப்யான்; இவ்வளவு
வேலைக்கு வீணாய்க் குதித்து தள்ளிவிழலாகாது. இப்படிக்கிரா
மல் மனம்போனபடி குதித்துத் தள்ளுவனேயாகில் அவன்
பிசாசு பூதங்களுக்குச் சமமாகமாட்டான்; அதற்குந்தாழ்ந்த அந்

த்ஸில் திரிந்துழலுவான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௪௪௭)

பிகமுவனமுலோன விலஸில்லிபலுகுனு
பங்கிப்ராக்ஞஜனுலு பலுகுகுலுகு
காகிகூதல்போலு காமபந்துலகூத
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வனத்தினுள் குயிலானது இனிமையாக மொழிவதைப் போலப் பெரியோர்கள் நன்மார்க்கங்களையே மொழிந்து கொண்டிருப்பார்கள்; காகத்தின் கடுமையான மொழியைப் போல காமிகள் கடுமையாகவே வசனிப்பார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௪௪௮)

பலுகமன்ன நாதோ பலுகக யுன்னவு
பலுகவையநீவு ப்ரபலமுகனு
பலுகவையநீது பலுகுலுநேனெருகு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பேசுமென்றால் யென்னுடன் பேசாமலிருக்கின்றீர்; அப்படிக் இருப்பது ஞாயமோ? தேவரீருடைய கீர்த்திக்குத் தாழ்வாகுமாதலால் தயவுசெய்து பிரபலமாகப் பேசுமையா? அம்மொழிகளை நானுணர்ந்து சந்துஷ்டியடையும்படியாகக் கிருபைசெய்யும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

பலுமரு பிலச்சினனு பலுகக யுன்னவு
பலுகராதா நாது ப்ரமனுதீர
பலுகுன்னநின்னு பருலு தூஷிந்துரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பலதடவையழைத்த போதிலும் பேசாமலிருக்கின்றீர்; என்னுடைய பிரமை தீரப்பேசலாகாதா? அப்படி யென்னுடன் பேசாதிருந்தால் தங்களைப் பலரும் நிந்திப்பார்களையா; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ( )

பலுகுலோனி பலுகு பரகங்க ஜசிச்சினு
பலுகுலந்துப்ரஹ்ம பதமு கலுகு
பலுகுகானலேக பருவுதப்பிரிஜனுல்
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சொல்லுக்குள் சொல்லின் விசேஷத்தைப் பார்த்தால் அந்தச் சொல்லினிடத்தில் பிரம்மபதவியுண்டாகும் அப்படிப்பட்ட சொல்லைக் காணமாட்டாமல் ஜனங்கள் மானங்கெட்டார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

நீவுபலுகுச்சுன்ன நித்யபூஜிதுடௌனு
நீவுபலுககுன்ன நித்ரபோவு
நீவுபலிகெயலுகு நிர்மலுண்டெருகுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) யோகியினிடத்தில் நீர் பேசிக்கொண்டிருந்தால் அந்தயோகியானவர் சகலரும் பூசிக்கத்தக்கவராவார்; நீர் பேசாதிருந்தால் அந்தப்பாமரன் நித்திரைபோவான்; ஆகையால் நீர் சொல்லுஞ்சொல்லை நிர்மலமானமனத்தையுடைய சாதுவரிவாரேயன்றிப் பாமரர்கள் அறியமாட்டார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௫௨)

பாஷலாடநேர்ச்சி பரகப்ரியமுலுபலிகி
க்ராசபோஷணைகை கடனஜேஸி
வாஸனடிதலசினனு வாடேபோமுக்துண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வார்த்தைகள் பேசக்கற்று அன்னியரிடத்திற் சென்று அவர்களிக்கும்படி பிரியவசனங்கள் பேசி தேகயாத்திரைக்கு வேண்டிய சாமக்கிரியைகளைச் சேகரித்துப் புசித்துத் தேகத்தைப் போஷித்து மதோன் மத்தனுகி விஷயாந்திரங்களிலீடுபட்டு துர்வாசனைக்கே யாசித்துத் திரியுமவன் பாமரனுகும்; நல்வாசனையாகிய பரமாத்துமாவை யறிந்து அப்பரமாத்துமாவுடன் கலந்து வர்த்திக்குமவனே முக்தனுகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௩௫௩)

பாஷலாடநேர்ச்சி மோசம்புஜேய்ச்சு
த்ராசுமுனகுவேஷ காடுநைதி
தோஷகாருலகில் தொருக்கு மோக்ஷம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வார்த்தையாடக் கற்று மோசங்கள் செய்து பிர சாதத்திற்காக வேஷக்கார னுகினேன். இப்படிப்பட்ட தோஷி களுக்கு மோக்ஷமுண்டாகுமா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுகூச)

பாஷலாடகுன்ன பருலு மெச்சருகானி
பாஷலாடவலயு பருவுஜூசி
பாஷபருவுநந்து பரமாத்மு டேருகுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வார்த்தையாடாமல் ஊமையைப்போல மௌன மாயிருந்தால் அன்னியர்கள் மெச்சிக்கொள்ளமாட்டார்கள்; ஆத லால் சமயம்பார்த்து வார்த்தைகளாடவேணும்; அந்தவார்த்தை களிலும் சமயத்தில் பரமாத்துமாவை யறிந்துகொள்ளுவாய்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுகூடு)

வார்த்தயந்துஜகமு வர்த்திம்புசுன்னதி
அதியுலேனிநாடு யவனிபதுலு
அந்தியகாலமக்னு லகுச்சு நந்துருகானி
வார்த்தநிர்வஹிம்ப வலயு வேமா.

(இ-ள்.) இவ்வுலகமானது வார்த்தையினில் கட்டுபட்டிருக் கின்றது; அவ்வார்த்தையில்லாத நாளில் இப்பூதலத்தரசர்கள் அந்தியகாலம் சம்பவித்துவிட்டதென்று மக்னர்களாகி யிருப் பார்கள்; ஆதலால் அந்த வார்த்தையை யெப்போதுங் காப்பாற் றவேணும் வேமா! எ-று. (சுகூசு)

வார்த்தலோனிவார்த்த வசுமதீசுனிஜேர்ச்சு
வார்த்தலோனிவார்த்த வஸ்யுடகுனு

வார்த்தலோனிவார்த்த வரகவி யகுனயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வார்த்தைக்குள்ளே வார்த்தையானது அண்ட பிண்ட பிரமாண்டத்திற்கும் அதிபதியாகிய யீஸ்வரனுடன் சேர்ப்பிக்கும்; அந்த வார்த்தைக்குள் வார்த்தையினால் அந்தப் பரமசிவன் வசியமாகுவார்; அப்படிப்பட்ட வார்த்தைக்குள் வார்த்தையால் வரகவியாகுவாரையா; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுருஎ)

அட்டிவார்த்தமஹிம நரயகபுவிலோண
மிட்டிபடுதுரிலனு மிடுதரீதி
கட்டிஜேஜிஸிதுபு கனுடேபோசிவயோகி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அப்படிப்பட்ட மேலான வார்த்தையின் மகத்துவத்தை யாராய்ந்து யாராமல் பூதலத்திலுள்ள மனிதர்கள் மோகாந்தகாரர்களைப்போல தள்ளிவிழுந்துபோகிறார்கள்; இவ்வண்ணங்கெட்டுப்போகாமல் மனதைத்திடஞ்செய்து நிருத்தி மேற்சொன்ன வார்த்தையின் மகத்துவத்தை யாராய்ந்துணருங் கனவானே சிவயோகியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுருஅ)

அன்னரசம்.

அன்னரசமுவலன யுலபிந்துரசமைமெயு
பிந்துரசமுவலன பீஜமைமெயு
பிந்துபீஜசந்து பேதிஞ்சிருடோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அன்னரசத்தினாலே முன்னம் விந்து ரசமாயிற்று; அவ்விந்து ரசத்தினாலே பீஜமாயிற்று; அந்த விந்து பீஜத்தின் சந்தில் பேதப்படுத்திப்பாரும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுருக)

அன்னமுனகுனன்டு யைனஞத்மகுநன்டு
யாத்மனுபென்கொன்ன யன்னமன்டு
ஆத்மசுத்தியன்ன மன்னசுத்தியஞத்ம
மின்னுமன்னுமாட்சி மெரயு வேமா.

(இ-ள்.) அன்னத்திற்குத் தீட்டானல் அந்த அன்னத்தைப் புசித்த ஆத்துமாவுக்குத் தீட்டாகும். அவ்வாத்துமாவைப் பிணைந்து கொண்டிருக்கும் அன்னத்திற்கும் தீட்டேயாம் இந்த யோசிக்குமிடத்தில் ஆத்துமாவுக்கு சுத்தி யன்னம்; அந்த அன்னத்திற்கு சுத்தி யாத்துமாவாகி மண்ணும் விண்ணைப்போலப் பிரகாசிக்கும் வேமா! எ-று. (சகο)

அன்னமதிகமைன யுரயம்ருத்வுநீஜம்
பன்னமன்டகுன்ன ஞத்பமொச்சு
சம்புயெம்புயுவ்வ சாலவாவெய்யேல
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அளவுக்கு மேலாக அன்னம் புசிக்கில் உண்மையாக மரணமுண்டாக்கும், அந்த அன்னத்தைத் தொட்டுப் புசிக்காமலிருந்தால் ஆத்துமாவுக்கு நோவுண்டாகும்? இவ்வுலகத்தில் சாகச்செய்வதும் அன்னமே வளரச்செய்வதும் அன்னமே. ஆகையால் இது போதாதோ இன்னமும் ஆயிரம் யேதுக்கு? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சகக)

காலிபணிகிஜேஸெ கசவுபசிகிஜேஸெ
மன்னு யரகுஜேஸெ மருவகிலனு
புடமிலோர்ஜனுலகு புவ்வடுஜேஸெரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பாம்புக்குக் காற்றும் பசுவுக்குப் புல்லும் அறை வீட்டிற்கு மண்ணும் ஜனங்களுக்கு அன்னமும் பகவான் மறவாமலுண்டாக்கிவைத்தார்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சகஉ)

எசவிதொரிகின லொல்லரு
வாசவிகினிரித்தியமன்ன வாக்யம்புலமே
ஜூச்சினசையுன வெரச்சின
யாசந்தமுலாயெஜகமு லின்னியு வேமா.

(இ-ள்.) எந்த மதுரமான வஸ்துக்கள் கிடைத்த போதிலும் பசிக்கு உபயோகிக்கமாட்டார்கள்; இன்னும் அறுசுவையன்னங் கிடைக்கில் புசித்துப் பசியாறி இனிய வசனங்களைக் கேட்டுச் சந்தோஷித்திருப்பார்கள்; கடுமையான மொழிகளால் பயமுறுத்துவதைப் பார்த்தமாத்திரத்தில் பயந்ததைப் போலாயிற்று ஜனங்கள் யாவத்தும்; வேமா! எ-று. (சகூ௩)

வண்டவச்சுணபுடு வண்டகமம்ருதம்பு
கண்டிகிம்புகானு கானிபிஞ்சு
நோடல்தின்னதிண்டி வடிமிஞ்சுகடதேரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சாதஞ்சமைக்கலாம்; அந்தச் சாதம்போது கண்களுக்கின்யமாகக் காணப்படும்; அச்சாதத்தைப் புசிக்கத் தேகம் பெருத்துக் கடைத்தேருவார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சகூச)

வண்டதப்புனது வண்டகமுவிஷமு
கண்டஜாடகானெ கண்டிகிஞ்சு
கண்டகமுன தின்ன கட்டி கண்டமைலச்சு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பலவேளை சாதந்தப்பிபோனவனுக்கு அந்தச் சாதமே விஷமாகும்; அப்படிப்பட்ட விஷமாகிய சாதத்தைத் தண்ணில் பார்த்தமாத்திரத்தில் அவனுக்கு அவாமிகுதியாகும்; அந்த அவாமிகுதியால் புசித்தவுடனே அம்மனிதனுக்குக் கடுமையான கெண்டம் வந்தணுகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சகூ௫)

உப்புலேனிகூர வூனம்புருச்சுலகு
பப்புலேனி திண்டி பலமு லேது
அப்புலேனிவாடு யதிகசம்பன்னுடு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உப்பில்லாதகறி ருசிகளற்றது; பருப்பில்லாத சாதம்பலனேயில்லை; கடனில்லாதவன் கோடீஸ்வரனாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௨௬௬)

பப்புலேனி கூடு பருலகஸஹ்யமௌ
யப்புலேனிவாடு யதிகபனுடு
மொப்பெலேனிவாடு மொதலுசுக்ஞானுண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா,

(இ-ள்.) பருப்பில்லாத சாதமானது அன்னியர்களுக்கு அசுசியாகும்; கடனில்லாதவன் மெத்தப் பலவானாகும். மோகாதி விஷயாந்திரங்களில்லாதவன் க்ஞானிகளில் முதல்வனாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

ப்ரியமுலேனிவிந்து பிண்டிவண்டலசேட்டு
பக்திலேனி பூஜ பத்ரிசேட்டு
ஒஜ்ஜமாலுநாலு வோலிமாண்ளகுசேட்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பிரியமில்லாத விருந்து பலகாரங்களுக்குக் கேடு; பத்தியில்லாத பூசை பத்திரங்களுக்குக்கேடு; வேலைக்குப் பால் மாரும் மனைவிக்குப் பரியங்கட்டின வராகனுக்குக் கேடு; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௨௬௮)

நெய்யிலேனி கூடு நிய்யானகனுவதி
கூரலேனி திண்டி குக்கதிண்டி
ப்ரியமுலேனி கூடு பிண்டபுகூடயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நெய்யில்லாத உண்டியானது அசுத்தமாகும்; பதார்த்தமில்லாத புசிப்பு நாய்புசிப்புக் கொப்பாகும்; பிரியமில்

லா சாதம் பிண்டப்பிரசாதத்திற் கிணையாகும்; சர்வ வியாபியா கிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௬௯)

மாம்சமு தனகுன்ன மாட்டுகா ஜேசுக
மாம்சமுதினுனட்டி மாயஜீவி
மாம்சமு செடிபோவ மாடெட்லுயாடுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மாம்சம் தனக்கிருப்பதுபோல செய்துகொண்டு அந்த மாம்சத்தைப் புசிக்கும்படியான மாயாஜீவனுன்து அம் மாம்சம் கெட்டுப்போனால் எப்படி வார்த்தைகளாடுமோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௭௦)

பட்சிஜாதி பட்டி பரதஹிம்சபெட்டி
குட்சினிண்டகூடு கூரகானு
வண்டிதினெடிவானி வண்டு ஜேமனவச்சு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பலஜாதி பட்சிகளைப் பிடித்துக் கொன்று வயிறு நிரம்ப சோறுங் கறியுமாகவும் சமைத்துத் தின்னுமவன் சமையலை என்னவென்று சொல்லலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௭௧)

ஆரு ருச்சுலுவேரு சாரம்பு வொக்கட்டி
சத்யநிஷ்டவேரு சத்தியமொகட்டி
பரமருஷுலுவேரு பாவ்யுடுவொக்கடு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உருசிகளாறு சாரமொன்றாகும்; சத்திய நிஷ்டை கள் வெவ்வேறு சத்தியமொன்றாகும்; மாமுனிவர்கள் வெவ் வேறு அவர்கள் மனதிலுறைபவ னொருவனே யாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௭௨)

தோகலுகலவாட்டி தொடரிகொந்துலு கோவலி
மோகஜீவமுலனு மெடலு விரச்சி

கடமஜீவமுலனு காலச்னைசன திந்திரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வால்களுடைய மிருகங்களைத் தொடர்ந்து பிடித்து சிறத்தையறுத்து ஆடுகளின் கழுத்தை யொடித்து ஜீவனைப் போக்கிச் சமைத்துப் புசிப்பதுடன் மற்ற ஜீவராசிகளைப் பிடித்துக் கொன்று சுட்டாகிலும் தின்பார்கள்; சர்வ வியாபியாகிய ஜீராமா! கேளும் வேமா! எ-று. (சஎரு)

ஷட்ருச்சுலிலவேரு தர்லோனசாரமொகட்டி
சப்தமதமுலேவேறு சாத்யுடொகடு
பக்துலகனங்க வேரய்யெ ப்ராப்துடொகடு
குவலயம்புனனீனிகை கொனுமு வேமா.

(இ-ள்.) இப்பூதலத்தில் அறுசுவைகள் வேறுவேருகும் சாரமொன்றேயாகும்; மதங்கள் வெவ்வேறு அவைகளுக்கு சாத்தியனொருவனாகும்; பக்தர்களென்ன வெவ்வேறு பிராப்தனொருவனாகும்; இந்தமேன்மையை யிக்குவலயத்தில் கைக்கொள்ளும் வேமா! எ-று.

நோரெரிகி தாமுடேயமியு
நேரனிஜந்துவுலனும்பி ரெம்மதிதினுயா
க்ரூரபுசங்கர ஜாதுல
மாரணமேமந்துரீங்க மஹிலோ வேமா.

(இ-ள்.) எதுமறியாமல் பேசவாயில்லாத ஜீவராசிகளைக் கொன்று களங்கமற்றுத் தின்னுமந்த கொடிய கிராதக ஜாதிகளின் மரணத்தையின்னமென்ன வென்று சொல்லுவேன் இப்பாரினில்; வேமா! எ-று. (சஎசு)

## தாம்பூலம்.

நோட்டிபுண்டிகொக்க நொப்பிராகுண்டக
நாகுபோகசுன்ன மௌஷதம்பு

பெட்டகுன்னனேரு பெனுகப்புகொட்டுரா
விஸ்வதாபி ராமவினர வேமா.

(இ-ள்.) புண்ணும் வாயிக்கொரு நோயும் வாராதிருக்கும்படி வெற்றிலைப்பாக்கு சுண்ணம்கூட்டி அவிழ்தமாக உபயோகப் படுத்தாமலிருந்தால் அந்த வாய் பெருத்த துர்நாற்றமடிக்கு மன்றோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று.

சிலவ்ருக்ஷல தலபுட்டின
ஜலஜாட்சுலுமுக்குருகூடி சதுரததோடன்
தலவாகிட்ட ரதிசேயக
யிலஜனுலகு லட்சுமிகரமு யிச்சுரவேமா.

(இ-ள்.) சிலவிருட்சம் தொடி இவைகளிற் பிறந்த ஸ்திரீகள் மூவருங்கூடி சந்தோஷத்துடன் தலைவாசலில் ரதிக்கிரீடை செய்ய இப்பாரிலுள்ள ஜனங்களுக்கு லட்சுமிகரங்கொடுக்கும் வேமா! எ-று. (சஎஎ)

ஆசை

ஆசபாபஜாதி யன்னிட்டி கன்டெனு
ஆசசேதயதுலு மோசபோரே
ஆச்சிவிடச்சுநதடு சுத்தாத்முலென்றைதன
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) எல்லா வற்றிற்கேனும் ஆசையானது பாபஜாதியா கும்; அந்த ஆசையினால் யதிகள் மோசம் போகமாட்டார்கள்; ஒவ்வொன்றையும் ஆராய்ந்து பார்த்து அவ்வாசைகளாலேயிருக் குங் கெடுதியையுணர்ந்து அவ்வாசையை விட்டொழித்தவன் பரிசுத்தாத்துமனாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சஎஅ)

ஆசகன்னசுதமு யதிசயம்புகலேது
ஜுபுகிலுபகுன்ன சுக்முலேது

முன்கூரிதுபகுன்ன மரிமுக்தி லேதயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஆசைக்காகிலும் சுகம் அதிசயமாகிய தில்லை; உட்பார்வையை நிருத்தாம லிருந்தால் ஆனந்தமேயில்லை; கஷ்ங்க மற்று மனதை நிருத்தாம லிருந்தால் முக்தியேயில்லை; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுஎகூ)

ஆசயனெடித்ராட்ட யகிலஜந்துவுலெல்ல
கட்டுபடெனுகானி கிட்டலமுன
க்ஞானசுரியசேத ப்ரூனிகோயகலேக
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஆசையென்னும் பாசக்கயிற்றினால் சகல ஜந்துக்களும் கட்டுப் பட்டதேயன்றி இப்பூதலத்தில் க்ஞானமென்னும் வாளைக்கொண்டு அப்பாசக்கயிற்றை யறுத்துத் தள்ள மாட்டாமல் மாய்கைக்குட்பட்டு ஆசையை யொழிக்காமல் அந்தகர்களைப் போலத் திரிகின்றார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுஅ0)

ஆசசேதமனுஜு லாயுவுகலகாள்ளு
திருகுசுந்திருப்ரமு திப்பலேக
முரிகிபாண்டமந்து முசுருநீகெலுபங்கி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மனிதர்கள் ஆசையினாலே ஆயுளிருக்கும் நாள்பரியந்தம் பிரமையைத் திருப்பமாட்டாமல் திரிந்துகொண்டிருப்பதெப்படியாமெனில் அழுக்குப் பாண்டத்தினில் ஈக்கள் மொய்த்துக் கொண்டிருப்பது போலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுஅக)

ஆசகோசிவேஸி யனலம்புசல்லார்ச்சி
கோச்சிபிகியகட்டி குட்டுதெலசி

நிலசினனதடைய நெரயோகிஇயர்லிதன
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மண் பெண் பொன்னென்னு மூவாசைகளையும் பற்றறுத்துத் தள்ளிக் காமாக்கினியைக் குளிரச்செய்து கௌபீனத்தை யிறுக்கிக்கட்டி அதிலுள்ள ரகசியத்தை யுணர்ந்து நிலையில் நின்றவரே பரம யோகியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௪௮௨)

ஆசவிடககானி பாசமுக்துடுகாடு
முக்துடைடெத்தகானி ம்ருதுடுகாடு
ம்ருதமுவடயகுண்டே க்ஷிதிமோகமூடது
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஆசாபாசத்தைப் பற்றற விட்டாலன்றி முக்தாத்துமனாகமாட்டான்; அப்படி முக்தாத்தும னானாலன்றி மரணமடைய மாட்டான்; அப்படி மரணமடையாமலும் முக்தாத்துமனாகிச் செத்தவனைப்போ லிராவிட்டால் உலகத்தாசை விடமாட்டாது; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௪௮௩)

தானமொசககுன்ன த்யானம்பு மதிஹெச்சு
த்யானமொனரகுன்ன சனுனுதெலிவி
தெலிவிகன்னச தெகவேசினதிஹெச்சு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தானமளிக்காமலிருக்கும் தியானமும் மதியும் மேன்மையாகும்; அப்படிப்பட்ட தியானஞ்செய்யாமலிருந்தால் தெளிவு பரந்து போய்விடும்; அந்தத் தெளிவுக்காகிலும் ஆசையை அடியோடும் வெட்டி யெறிவதே மேன்மையாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௪௮௪)

சதுவுலந்து ராஜ்ய பதவுலந்துனு பாடி
மொதவுலந்துனுமுத்து முதிதலந்து

ஆசவிடசினட்டி யயபலுகலரகோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வாசிப்பினிடத்திலும் செல்வமுதல் அரசாக்ஷியி னிடத்திலும் நெய் பால் தயிர் மோர்களுக்கு யிருப்பிடமாகிய பசுக்களிடத்திலும், ரூபரேகை முதலான மெத்த சுந்தரம் வாய்ந்த மாதர்களிடத்திலும், ஆசையைவிட்டொழித்தப் புருடர் களுண்டோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

சதுவுலந்து பாடி மொதவுலந்துனுஸ்திரீல
பெதவுலந்துனு ராஜ்ய புதவுலந்து
ஆசலேனிவாரு யவனிலோலேரயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) கல்விகற்பதிலும் பாடியைத் தரும்படியான கோக் களிடத்திலும் ஸ்திரீகள் அதரத்தினிடத்திலும் அரசு முதலான சம்பத்துகளிடத்திலும் ஆசையில்லாதவர்கள் இவ்வுலகத்தி லெவருமில்லையையா; ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுஅசு)

லெக்கலேனியாச லெய்யுமையுண்டினு
திக்கபட்டி நருடு திருகுகாக
குக்கவண்டியாச கூர்ச்சுண்ட நிய்யது
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இவ்வளவென்று கணக்கிட்டுச் சொல்லமுடியாத ஆசைகொண்டு மனிதனானவன் அந்த ஆசையைத்தீர்ப்பதற்குப் பல விடங்களிலும் ஓடித் திரிந்து கொண்டிருப்பான்; அஃதெப் படி யெனில் நாயானது ஓரிடத்திலேனுஞ் சற்றுநேரம் நிற்கா மல் பல விடங்களிலேயும் ஓடித் திரியுமாப்போல மனிதனையும் ஆசையானது ஓரிடத்திலேயும் நிற்கவொட்டாது; சர்வ வியாபி யாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுஅஎ)

பாலவர்த்திலோன பல்வளிஞ்சினவாடு
கொல்லபிள்ளபாலு கோரலேனு

எதடிவாரி சொம்மு யெல்லவாரிகி யாச
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பாற்கடலிற்குள்ளே சயனித்த ஸ்ரீ கிருஷ்ண பரமாத்துமாவுக்கு இடையர்கள் வீட்டுப் பாலின்மீது ஆசையுண்டாகியதைப்போல அன்னியர்கள் பொருளின்மீது ஆசையெல்லோருக்கு முண்டாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (கஅஅ)

கனகபர்வதமுன காபுரம்புண்டியு
அனிமிஷேஸ்வருனகு யாசபோது
கனகுண்டலமுலு கர்ணுனி யடுகடா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இந்திரன் குடியிருப்பது சொர்னபர்வதமாகியிருந்தும் ஒருகாலத்தில் கர்ணமகாராசனைக் குண்டலங் கொடுக்கும்படிக்கேழ்க்கவில்லையா? அப்படிப்பட்ட இந்திரனுக்கும் ஆசைமாறவில்லை; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று.

நீள்ளலோனி மீனு நெரிமாம்சமாசசே
காலமந்து ஜிக்கு கரணிபுனினி
ஆச தகிலிருடு ஆலாகெ செடிபோவு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தண்ணீருக்குள் மீனானது அற்ப மாங்கிசத்துக்காசித்துத் தூண்டிமுள்ளினிடத்தி லகப்பட்டுக்கொண்டு மடிவதுபோல இவ்வுலகத்தில் மனிதனானவன் ஆசைவலையிலகப்பட்டு மோசம் போவான்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

தூலமுள்ளுவன்டி தாரயஸ்தலமெல்ல
ஜூஒச்சுயாசலன்னி கோசிவேசி
வாஸன்னுதெலிசின வாடெபோப்ரஹ்மம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சுருக்குமுடிகளையொத்த தூரிய அவஸ்தைகளையெல்லாம் பார்க்கும் ஆசைகளனைத்தையுங் கொய்துப்போட்டு

அங்குண்டாகும் சுவாசனையைத் தெரிந்தவனே பிரமமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சகக)

கச்சமீதயாச கனகம்புமீதாச
லேனிவாடுபுடமி லேனிவாடு
கலிகெநேனியதனி கானங்கராதயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வனிதையின்மீதும் பொன்னின்மீதும் ஆசையில்லாதவன் உலகத்திற் பிறக்காதவன்; அப்படிப்பட்ட உத்தமனுண்டாவனேயாகில் அப்புருடனைக் கண்ணாரக் காண்பதரிதாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

கடகிவட்டியாச கடதேரநிவ்விது
இடுமூலந்துபெட்டி யீட்சுகானி
புடமிஜனுல்பக்தி பொடமங்கநிய்யது
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அடையக்கூடாத வீணாசையானது ஜனங்களைக் கடைத்தேரச் செய்யமாட்டாது; அன்றியும் அந்த ஆசையானது இடுக்கண்படவைத்து மேலும் மேலும் வலித்து அலையச்செய்யுமல்லாமலும் பகவத்பக்தியையுங் கெடுத்து நரகத்துக்காளாக்கும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

கோமட்டிகினியாச கொண்டலுவாமலு
சந்ததம்புசோத சந்த்ரகளலு
ஆசகு மிதிலேது யக்கட கதிலேது
வசனசுத்திலேனி வாடு வேமா.

(இ-ள்.) கோமட்டிக்கு உலகத்திலுள்ள சகல சொத்துகளும் தனக்கே சுவாதீனமாக வேணுமென்ற ஆசையைச் சொல்லிமுடியாது. அந்த ஆசைக்கு அளவில்லை; அங்கே கெதியில்லை; அவன் வாக்கிய சுத்தியில்லாதவன்; வேமா! எ-று. ()

பக்மமீதனுச பாகபுருஷுனகுண்டு
மேத்ரமந்துயாச மெலதகுண்டு

சிவுனிமீதயாச சித்துனகுண்டுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) புருடனுக்கு அல்குலின் மீதும் வனிதைக்குச் சிசுனத்தின் மீதும் சித்தனுக்குப் பரமசிவத்தின் மீதும் ஆசையிருக்கும்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுகுசு)

ஆசபாசலுமொாத லண்டகாகோசியு
பாரவேயகுன்டெ பலமுகலதே
கொக்குபேலலகுனு ஜிக்கிசச்சினரீதி
விஸ்வதாபி ராம வினர வேமா

(இ-ள்.) ஆசாபாசங்கள் முதலானதுகளை முதலிற் பற்றறுத்து விட்டெறியாம லிருந்தால் பலனே தாகிலுமுளதோ அப்படிக்கிந்த ஆசைக்குட் பட்டிருப்பது எப்படியாமெனில் பொறிமாவுக்காசித்து அகப்பட்டுக் கொண்டுசெத்த பெருச்சாளியைப் போலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

ஆடதானிகன்ன யர்த்தம்புபோடகன்ன
சாரமைனருசுலு சுவியுகன்ன
ஏட்டி வானிகைன புட்டுபோயாசலு,
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பெண்டுபிள்ளையையும் திரவியத்தையும் உருசியாகிய சிறுதிண்டி பதார்த்தங்களையும் பார்த்த மாத்திரத்தில் எப்படிப்பட்டவனுக்காகிலும் ஆசை பிறக்கும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (சுகஎ)

பாசம்.

பாசமூனனுஜ-டெ பாகதேஹானகு
ஹானிவச்சுனுகானி யதியுஜ-டெ
ஞ்ஞானதிவ்வெவேசுத கடகொத்தவலெனயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பாசம்வைத்து யோஷிக்கும் தேகத்தை யோசித்துப் பார்க்க அந்தத் தேகத்திற்கு விரைவில் பழுதுவருமல்லா

மல் நீடித்திராது; அப்படிப்பட்ட அழிவைத் தரும்படியான பாசத்தைத் ஞான விளக்கினால் களைகொத்த வேணுமைய்யா; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௧௯௯)

பாசபந்துசேத பந்துவர்க்கமுலெல்ல
ஜிக்கஜேதுராய ஜீவிதாலகு
நொக்கடைனசேக னுசுருமாத்ரமெகானி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பந்து வர்க்கங்களெல்லாங்கூடி ஒரு மனிதனைப் பாசபந்தத்தில் கட்டுப்படும்படியாகத் திருத்தி விவாகஞ்செய்து வைக்க அம்மனைவியால் அந்தமனிதன் புத்திரர்களைப்பெற்று அவர்களைப் பேரக்ஷிக்கும் பொருட்டுப் பலவித அல்லல்பட்டுத் திரிந்து முடிவில் ஜீவனைவிடுவான்; இவ்வாறே உலகத்திலொருவனாகிலும் ஜீவன் முக்தனாகாமல் பாசபந்தத்தி லகப்பட்டுக் கடைசியில் எல்லாரும் உயிரிழப்பார்கள் வேமா! எ-று. (௧௯௯)

## தாயார்.

தல்லியுதரமந்து தாஜனியிஞ்சின
தனதுபோகசதிகி தானெபுட்டி
தல்லியிருவுரனக தனுவுனு யொகடயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள். அன்னையின் வயிற்றில் தான் ஜென்மித்தால் தன்னுடையபோகமங்கைக்குத் தானேபிறந்தும் அன்னையிருவரென்றால் தேகமொன்றாகுமைய்யா; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௨௦௦)

தல்லிதண்ட்ரிமீத தயலேனி புத்ருண்டு
புட்டனேமிவாடு கிட்டனேமி
இலனுபுட்டிகடகு யமூனகுபன்டுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தாய் தந்தைகளின்மீது தயையில்லாத புத்திரன் பிறப்பதேன்? பிறந்து இறப்பதேன்? அப்படிப்பட்ட புத்திரன்

விஜயுடிம்முதப்பி விரட்டுனி கொல்வடா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தனக்கு நிகரற்றவனிடத்தில் தன்னுடைய வீரத் தன்மையைச் சொல்லலாகாது; காலத்தையனுசரித்துத் தாழ்ந்து நடக்கவேண்டும்; அஃதெப்படியெனில் சமயபேதத்தினால் அர்ச்சுனன் விராடமகாராஜனைப் பணிந்து சேவித்ததைப்போலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எகூஎ)

இம்முதப்புவேள வெம்மதிலல்லயுமானி
காலமோக்கரீதி கடுபவலயு
விஜயுடிம்முதப்பி விரட்டுனி கொல்வடா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சமயபேதமான வேளையில் வீரத்தன்மை முதலானதுகளையும்விட்டு காலத்தை யனுசரித்து நடக்கவேணும்; அஃதெப்படியெனில் சமயபேதத்தினாலே விஜயன் விராடராஜனை சேவித்துக்கொண்டிருந்ததைப்போல ஒவ்வொருவருங் காலத்திற் கிணங்கி நடக்கவேணும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எகூஅ)

பாலுநீடிகிண்ட க்ரோலுச்சுனுண்டேனு
மனுஜுலெல்லகூடி மத்யமண்ட்ரு
நிலிவதகனிசோட்ட நிலுவகிந்தெலுவச்சு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஒருமனிதனானவன் பனைமரத்தடியிலிருந்துபாலைக் குடிப்பனே யாகில் அதைப்பார்த்தவர்கள் யாவரும் கள்ளைக் குடித்தானென்பார்கள்; அஃதெப்படியெனில் நிற்கத்தகாத விடத்தில் நின்றிருந்தால் நிந்தைகள் வெகுவாகவருவது போலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

தாவுலேனிசோட்ட தாவுதானையுண்டு
தாவுகலிகினசோட்ட தானுலேது

ஈதலுநேர்ச்சின நீலோ
ம்ரோதலுமமரிசூட்டசூட்ட ம்ரொக்கிதி வேமா.

(இ-ள்.) நீந்தும் வகையறியாதவர்களெல்லாம் ஆழமாகிய நீரில்விழுந்து மடிந்துபோக அந்த நீந்தும் வகையைக் கற்றுத்தேர்ந்த உனக்குள் பார்க்கப்பார்க்க ஓசைகள் மெத்த உண்டாவதினல் அந்த ஓசைகளுக்கு மென்மேலும் வந்தனஞ் செய்கிறேன்; வேமா! எ-று. (எகச)

நம்மிநட்டெடயுண்டு நெளனபூத்மமெனடி
சாப பொரலவேசி சக்கபோவு
ஈதகாடைனனு யேல போனிச்சுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நீஞ்சல் தெரியாதவன் கப்பல்மேலேறி அக்கரையை யடுக்கும் பொருட்டு பாயைவிரித்து நம்பிக்கையுடன் செலுத்துகிறபோது பெருங்காற்றொன்று கிளம்பி பாய்மரத்துடன் கப்பலைக் கவிழ்த்துவிட்டுப்போகும்; நீந்தத்தெரிந்தவனுகில், கப்பலைக்கவிழ்ந்து போகவிடுவனே? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எகரு)

பொருத்தமில்லாதவை.

அனுவுகானிசோட்ட னதிகுலமனராது
கொஞ்சமைனநதியு கொதவகாது
கொண்டயத்தமந்து கொஞ்சமையுண்டதா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பெருந்தன்மையில்லாத விடத்தில் நான்மேலானவனென்று பகரலாகாது; அவ்விடத்தில் தாழ்ந்துபோவதினலே குறைவில்லை; அஃதெப்படியெனில், பெருத்தமலையானது கண்ணுடியினிடத்திற் சிறிதாகக் காணப்படுவதைப்போலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எகசு)

அனுவுகானிசோட்ட நதிகுலமனராது
காலமொக்கரீதி கடுப வல்யு

விஜயுடிம்முதப்பி விராட்டுனி கொல்வடா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தனக்கு நிகரற்றவனிடத்தில் தன்னுடைய வீரத் தன்மையைச் சொல்லலாகாது; காலத்தையனுசரித்துத்தாழ்ந்து நடக்கவேண்டும்; அஃதெப்படியெனில் சமயபேதத்தினால் அர்ச்சுனன் விராடமகாராஜனைப் பணிந்து சேவித்ததைப்போலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எகூஎ)

இம்முத்தப்புவேள யெம்மலெல்லயுமானி
காலமொக்கரீதி கடுபவலயு
விஜயுடிம்முதப்பி விரட்டுனி கொல்வடா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சமயபேதமான வேளையில் வீரத்தன்மை முதலானதுகளையும்விட்டு காலத்தை யனுசரித்து நடக்கவேணும்; அஃதெப்படியெனில் சமயபேதத்தினாலே விஜயன் விராடராஜனை சேவித்துக்கொண்டிருந்ததைப்போல ஒவ்வொருவரும் காலத்திற் கிணங்கி நடக்கவேணும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எகூஅ)

பானுரீடிகின்ட க்ரோலுச்சுனுண்டெனு
மனுஜுலெல்லகூடி மத்யமண்ட்ரு
நீனிவதகனிசோட்ட நிலுவநிந்தெதுவச்சு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஒருமனிதனானவன் பனைமரத்தடியிலிருந்து பாலைக்குடிப்பனேயாகில் அதைப்பார்த்தவர்கள் யாவரும் கள்ளைக் குடித்தானென்பார்கள்; அஃதெப்படியெனில் நிற்கத்தகாத விடத்தில் நின்றிருந்தால் நிந்தைகள் லெகுவாகவருவது போலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

தாவுலேனிசோட்ட தாவுதானையுண்டு
தாவுகலிகினசோட்ட தானுலேது

தாவுதானையுன்ன தத்வம்பு தெலியுமு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இடமில்லாத விடத்தில் இடந்தானுயிருக்கும்; இடமுண்டான விடத்தில் தானில்லை; அந்தவஸ்து இடந்தானுயிருக்கும்; அப்படிப்பட்ட தத்துவத்தைத் தெரிந்துகொள்ளுங்கள்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௭௨௦)

தாவுதப்பகுண்ட தன்மனம்புனநில்பி
தாவுஜேருநட்ள தந்த்ரயரச்சி
தானுதாவுஜேரி தாவுதானேகமை
தானுதாயெனுயகுச்சு தனரு வேமா.

(இ-ள்.) இடந்தப்பாமல் தன்மனதில் நிறுத்தி அந்தவிடத்தைச் சேரும்படித் தந்திரப்படுத்தித் தானவிடஞ் சேர்ந்து அவிடமும் தானும் ஒன்றாகித் தானே தானுகிப் பிரகாசிக்கும்; வேமா!

காலவசதபுட்டி கர்மஜீவுலபிண்டு
மத்துலகுச்சுனு மதமத்துலரி
மத்துலனஜனுல மனசேட்டி மனசயா?
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) காலவசத்தினுற் பிறந்து கர்ம ஜீவர்களைக்கசக்கிப் பிழிந்து புசித்து மத்தர்களாகிக்கொண்டு மதோன் மத்தர்களாயினார்கள்; இப்படி மத்தர்களாகிய ஜனங்களின் மனதென்ன மனதைய்யா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

காலகதி யந்தவாரிகி
வாலாயமு சலகதனமு வச்சுட்டனருதா
வேலகிரியெத்தி க்ருஷ்ணுடு
தேலெலெட மர்ராகுமீத தெலியுமு வேமா.

(இ-ள்.) எல்லவர்களுக்கும் காலத்தின் சுபாவத்தினுலே எப்பொழுதும் எளிதன்மை வருவது அரிதோ? அரிதல்ல; அஃதெப்படியெனில் முன்னம் சுண்டுவிரலினுலே மலையை

யெடுத்த க்ருஷ்ண பரமாத்துமா காலத்தின் சுபாவத்தினாலே ஆலிலைமீது மிதக்கவில்லையா? அதுபோலத் தெரிந்துகொள்ளும் வேமா! எ-று. (௭௭௩)

காலமுல மஹிமதெலியக
வாலாயமு நித்யமனுச்சு யந்துருதாரிந்தே
யேலாகாலமு தெலியரு
வாலாயமுச்சாட்டவைய வசுமதி வேமா.

(இ-ள்.) காலம் அகாலமென்னு மிவ்விரண்டின் மகிமை தெரியாமல் எப்பொழுதும் நீடித்திருக்குமென்று இவ்வளவிலே யே அநித்தியத்தை யுணராமல் கெர்வித்து நடப்பர்கள். இந்த காலாகாலத்தையென்றே அறியாமல் சதாகாலமும் வீணிற்கழிக்கிறார்கள்; இவ்வுலகத்திலிதை யாவருமறிந்துகொள்ளும்படி தெரியப்படுத்தும் வேமா! எ-று. (௭௭௪)

காலமுதன்கிக சாலா
காலமுகல தஞ்சுநன்ன காலமுநந்துன்
கூளுடுதனு தாதெலியக
கூலெனுதொலிஜாமுநந்து கொப்புன வேமா.

(இ-ள்.) காலமானது தனக்கின்னும் வெகு காலமுளதென்றிருக்குங் காலத்தினில் துஷ்டன் தன்னைத்தானறியாமல் மூன்னமொரு ஜாமத்தினில் கொப்பென மறைந்துபோயினான்; வேமா! எ-று. (௭௭௫)

கதமுஞுத்தமன்டெ கதுகுட்ட கஷ்டமு
நடுச்சுகாலமெமல்ல நம்மராது
க்ஷணமுலோனி ப்ரதுகு சம்சார விப்ராந்தி
விஸ்வதாபி ராம வினுர வேமா.

(இ-ள்.) கடந்தகாலம் நிகழ்காலம் மேல் நடக்கப்போகிற காலமென்னு முக்காலத்தையுங் காணலாமென்றால் அதுகிடைப்பது கஷ்டமாகும்; இக்காலத்தி லிந்தநேரத்தில் ஆத்துமா இத்

அலத்தைவிட்டுப் பிரிந்துபோகுமென்று கணக்கிட்டு நம்பி யிருக்கலாகாது; கணநேரத்தும் பிழைப்புக்கேனு சம்சாரத் தினி விச்சை கொள்வது; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௭௭௬)

தாமுவுன்ன வூர க்ஷாமம்பு வாட்டில்ல
நட்டியூருவிடச்சி யவலசனுமு
கொலகுலெண்டிதேனு கொக்கெர லுண்டுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தாங்களிருந்த ஊரில் பஞ்சம் சம்பவிக்குமாகில் அந்த ஊரைவிட்டு வேறு ஊருக்குச்சென்று ஜீவனஞ் செய்யக் கடவீர், அஃதெப்படியெனில் ஏரியில் ஜலமில்லாமல் காய்ந்து போகுமாகில் அவ்விடத்தில் கொக்கு வசிக்குமா? ஜலமிருக்கு மிடத்தையே தேடிச்சென்று வசிப்பதுபோல க்ஷாமமில்லாத ஊரையடுத்துப் பிழையுங்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௭௭௭)

மகனிகாலமந்து மகுவகஷ்டிஞ்சின
சுதுல்காலமந்து சுகமுபொந்து
கலிமிலேமுலிலனு கலதெந்தவாரிகி
பலிமி புத்ரபதுலு பலிமீ வேமா.

(இ-ள்) நாயகன் காலத்தினில் நாயகி கஷ்டத்தை யடைந்த போதிலும் புதல்வர்கள் காலத்திலேனுஞ் சுகத்தையடைவள்; அதுபோல புதல்வர்கள் பெரியோர்கள் முதலான எப்படிப் பட்டவர்களுக்கும் இவ்வுலகத்தினில் சிலகாலஞ் சுகமும் சில காலம் கஷ்டமுமே சம்பவிக்கும்; வேமா! எ-று (௭௭௮)

ஆதிகாலமுலனு யல்புண்டுதானெரிகி
செப்பலேடுகானி தப்புபட்டு
தோயனேர்ச்சு குக்க தொந்துலு போர்சுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) முற்காலத்தினியல்பை அற்பனானவன் தானறிந்து சொல்லவகையறியானன்றிக் குற்றங்கள் பகர்வன்; அதுபோல

யழுங்கலத்தைத் தள்ளக்கற்ற நாயானது மறுபடியும். அப்பழங்
கலத்தைப் பொருத்தமாக அடுக்கிவைக்கமாட்டாது; சர்வ வியா
கியாகிய ஒ ராம! கேளும் வேமா! எ-று. (எஎகூ)

எந்தகருவுயைன யெங்கிலியன்னமு
பருலகிடெடுதர்ம பருலஜாடட
பூமிநெங்கிலேன புல்லாகு நாகெடு
ஸ்வானமை புடுதரு ஜகதி வேமா.

(இ-ள்.) எவ்வளவு தனக்கு க்ஷாமகாலம் வந்து நேர்ந்த
போதிலும் அன்னியர்களுக்கு யெச்சிற் சோற்றைப் போடும்
தருமாத்து மக்களுடைய கதியெப்படியாமெனில் இவ்வுலகத்தி
லெச்சிலாகிய புளித்த, யிலையை நக்கும் நாயாகிப் பிறப்பர்களித்
தறையில்; வேமா! எ-று. (எஅ0)

எனுடு சுபிக்ஷமுதன
கேனுடிரனவயெணச்சட்டி கெகும்ருகம்புல்
தானுன்ன சோட்டுவிலிகின
மர்ணவுலகு கிவுகநேல மஹிலோ வேமா.

(இ-ள்) மிருகங்கள் தமக்கு எத்தனை நாளைக்குச் சுகமிருக்கி
றதோ அத்தனை நாளைக்கு அவ்வனத்திலேயே வசிக்கும்; எந்த
நாள் சுகமில்லையோ அந்தநாளே தமக்குச் சுகமானவனத்தை
யடைந்து சுகித்திருக்கும்; அதுபோல மனிதர்களுக்குத் தாமி
ருக்குமிடமானது வெறுக்குமேயாகில் அவர்களுக்கு யிருப்பிடம்
மயானபூமியேயாகும் இவ்வுலகத்தில்; வேமா! எ-று. (எஅக)

ராதிலோனிகப்ப ரம்யுமை யுண்டகா
நீருநன்னநச்சட்ட னெரபுவேசே
புட்டஜேசெ ஸ்வாமி பூரியு மேபுணு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) கல்லினுள்ளிருக்குந் தேரைக்கும் தண்ணீரும்
அன்னமுங் கொடுத்துக் காப்பாற்ற வில்லையா? அதுபோல
நம்மைப் பிறப்பித்ததெய்வம் நமக்கு அன்னபானதிகளைக் கொ

ெத்துக் காப்பாற்றாமல் புல்லைமேயச்செய்வனோ? சர்வ வியாபி
யாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எஅஉ)

சிந்தனை.

எல்லிரேபுநேடு யேலாகுதனலாகு
யனுசுபதுலுகுசுந்து ரகிலஜனுலு
சிவுடுபாரகர்த்த சிந்திம்ப நேலயா
விஸ்வதாபி ராம வினுர வேமா.

(இ-ள்.) இப்பவோ எப்பவோ இன்றோ அல்லது நாளையோ யென்றிவ்விதமாக சகல ஜனங்களும்சிந்தனைசெய்து கொண்டிருப்பார்கள்; சகலத்துக்கும் கர்த்தாவாகியும் பாரத்தை யேற்றுக் கொண்டிருக்கும் சிவபெருமானிருக்க வீணாகச் சிந்திக்க வேண்டிய காரணமேதுக்கோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! (எஅங)

ராஜவருலகெல்ல ரணரங்கமுனசிந்த
பரம்முனுல கெல்ல பரமுசிந்த
யல்பவருலகெல்ல யதிவலபைசிந்த
விஸ்வதாபி ராம வினுர வேமா.

(இ-ள்.) அரசர்களுக்கெல்லாம் யுத்தத்தின்மீது நீங்காத சிந்தையும் முனிவர்களுக்கெல்லாம் பரத்தின்மீது நீங்காதசிந்தையும்; அற்பமனிதர்களுக்கெல்லாம் மங்கைகள்மீது நீங்காத சிந்தையும்; உண்டாகும். சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா! எ-று. (எஅச)

ராநிதிகோரின ராததி
ராநுன்னதிசேரகுன்ன ரானேவச்சுன்
தாநெஞ்சி சிந்தஜேசின
காநுன்னதி காகபோது கதரா வேமா.

(இ-ள்.) தனக்கு பிராப்தமில்லாத வஸ்துவைக் குறித்துத் தலைகீழாக நின்று தவஞ்செய்தபோதிலும் வரமாட்டாது? தனக்

குப் பிராப்தமாகும் வஸ்த்துவைக் கோராமலிருந்தாலும் தனக்குத்தானேவரும்; அன்றியுந் தானெவ்வளவு சிந்தனை செய்தபோதிலும் நடக்கவேண்டியது நடக்காமற்போகாது அல்லவா? வேமா! எ-று. (எஅ௫)

கடுபுகேலமீரு களவளயடியேரு
கடுபுசல்லன்ன கலதுபுக்தி
கடகுராதிலோனி கப்பகு லேதகோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வயிற்றுக்காக நீங்களேன் சங்கடப்படுகின்றீர்கள்? அந்த வயிறுகுளிர்ந்தால், சுழ்பத்துண்டாகும்; அதுபோல கல்லினுள் தேரைக்கு ஆகாரமுந் தண்ணீரும் புகவான் அளித்துக் காப்பாற்றவில்லையா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எஅ௬)

எந்தயாக்யமுன்ன னந்தகஷ்டபுசிந்தி
சிந்தசேயதிகமு சிவுகுமனசு
சிந்தலேகயுன்ன செடனிசம்பதுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்) எவ்வளவு பொருளிக்கின்றதோ அவ்வளவுகஷ்டமும் விசனமுண்டாகும்; அந்தவிசனத்தினால் மனதுக்குமெத்தக் கவலையுண்டாகும். அந்தக் கவலையில்லாமல் ஏழையாயிருப்பதே என்றும் அழியாத சம்பத்தாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று (எஅஎ)

பயம்.

யுகமுலுசல்லக ஜூசெச்சுச்சு
தகலக யுகயுகமுலந்து தபசுலகைனன்
வகபேவக வக்றுண்டின
நிகநிகமன காந்திமதினி நிலுச்சுர வேமா.

(இ-ள்.) யுகங்களைக் குளிர்ச்சியாகப் பார்த்துக்கொண்டு மாய்கையிலகப்படாமல் யுகயுகங்களிலிலும் சஞ்சரிக்கும் தவசி

டுத்துக் காப்பாற்றாமல் புல்லைமேயச்செய்வனோ? சர்வ வியாபி யாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எ௲உ)

சிந்தனே.

எல்லிரேபுநேடு யேலாகுதனலாகு
யனுசுபதுலுசிந்து ரகிலஜனுலு
சிவுடுபாரகர்த்த சிந்திம்ப நேலயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இப்பவோ எப்பவோ இன்றோ அல்லது நாளையோ யென்றிவ்விதமாக சகல ஜனங்களும்சிந்தனைசெய்து கொண்டிருப்பார்கள்; சகலத்துக்கும் கர்த்தாவாகியும் பாரத்தை யேற்றுக் கொண்டிருக்கும் சிவபெருமானிருக்க வீணாகச் சிந்திக்க வேண்டிய காரணமேதுக்கோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! (எ௲௩)

ராஜுவருலகெல்ல ரணரங்கமுனசிந்த
பரமமுனுல கெல்ல பரமுசிந்த
யுல்பவருலகெல்ல யதிவலபைசிந்த
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அரசர்களுக்கெல்லாம் யுத்தத்தின்மீது நீங்காத சிந்தையும் முனிவர்களுக்கெல்லாம் பரத்தின்மீது நீங்காதசிந்தையும்; அற்பமனிதர்களுக்கெல்லாம் மங்கைகள்மீது நீங்காத சிந்தையும்; உண்டாகும். சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா! எ-று. (எ௲௪)

ரானிதிகோரின ராததி
ராநன்னதிசேரகுன்ன ராணேவச்சுன்
தாவெஞ்சி சிந்தஜேசின
காநுன்னதி காகபோது கதரா வேமா.

(இ-ள்.) தனக்கு பிராப்தமில்லாத வஸ்துவைக் குறித்துத் தலைகீழாக நின்று தவஞ்செய்தபோதிலும் வரமாட்டாது; தனக்

ருப் பிராப்தமாகும் வஸ்த்துவைக் கோராமலிருந்தாலும் தனக் குத்தானேவரும்; அன்றியுந் தானெவ்வளவு சிந்தனை செய்த போதிலும் நடக்கவேண்டியது நடக்காமற்போகாது அல்லவா? வேமா! எ-று. (எஅ௫)

கடுபுகேலமீரு களவளபடியேரு
கடுபுசல்லனைன கலதுபுக்தி
கடகுராதிலோணி கப்பகு லேதகோ
விஸ்வதாபி ராம வினுர வேமா.

(இ-ள்.) வயிற்றுக்காக நீங்களேன் சங்கடப்படுகின்றீர் கள்? அந்த வயிறுகுளிர்ந்தால், சம்பத்துண்டாகும்; அதுபோல கல்லினுள் தேரைக்கு ஆகாரமுந் தண்ணீரும் பகவான் அளித் துக் காப்பாற்றவில்லையா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கே ளும் வேமா! எ-று. (எஅ௬)

எந்தபாக்யமுன்ன னந்தகஷ்டபுசிந்த
சிந்தசேயதிகமு சிவுகுமனசு
சிந்தலேகயுன்ன செடனிசம்பதஹுரா
விஸ்வதாபி ராம வினுர வேமா.

(இ-ள்) எவ்வளவு பொருளிக்கின்றதோ அவ்வளவுகஷ்ட மும் விசனமுண்டாகும்; அந்தவிசனத்தினால் மனதுக்கு மெத்தக் கவலையுண்டாகும். அந்தக் கவலையில்லாமல் ஏழையாயிருப்பதே என்றும் அழியாத சம்பத்தாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று (எஅஎ)

பயம்.

யுகமுலுசல்லக ஜெச்சுச்சு
தகலக யுகயுகமுலந்து தபசுலகைனன்
வகபேவக வக்றுண்டின
நிகநிகமனெ காந்திமதினி நிலுச்சுர வேமா.

(இ-ள்.) யுகங்களைக் குளிர்ச்சியாகப் பார்த்துக்கொண்டு மாய்கையிலகப்படாமல் யுகயுகங்களிலிலும் சஞ்சரிக்கும் தவசி

களுக்காளுலும் பயமேனே? அந்தப் பயத்தை யொழித்து நிம்மதியாயிருக்கில் பளப்லென்னுப் பிரகாசம் மனதில் நிற்கும் வேமா! எ-று. (எஅஅ)

இந்தவகுவனேல யேகாந்தபுத்தினி
ஹரிஹராதுலந்து ஞசலுடிகி
வாசனதெலிசின வாடெபோ ப்ரம்மம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இவ்வளவு பயப்படுவதேதுக்கு? சகல பற்றுகளுமற்று ஹரிஹராதிகளிடத்தில் புத்தியை யேகாந்தமாக நிருத்தி வாசனையைத் தெரிந்து கொண்டவனல்லவோ பிரமமாகும்? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எஅக)

வத்தனி நனுபோது வலெனன காராது
தானு ஜேஇனட்டி தானபுலமு
உல்லமந்துவகவ குண்டுட்டயோகம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) முன்னந் தான்செய்த தருமத்தின் பலனைத வேண்டாமென்றாலும் வராமற்போகாது; வேணுமென்றால் வராது; உள்ளத்தினில் பயப்படாமலும் அல்லது சந்தேகப் படாமலுமிருப்பதே யோக்மாகும்; சர்வ வியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று. (எகo)

கொண்டெகாடுசாவ கொம்பவாகிட்டிகினி
வச்சிபோதுரெந்த வகவுலேக
துடவாகச்சுனெபுவினு தோடேலுஜச்சிஞு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) கோள் சொல்லும்படியானவன் சாவானே யாகில் அவன் வீட்டுவாசலுக்குச் சகலரும் சந்தேகமின்றி வந்துபோவார்கள்; அஃதெப்படியெனில் காட்டினில் ஓநாய் செத்தால் அதனிடத்திற்குப் பசுங்கன்றானது பயப்படுமோ? பயப்படாது; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எகக)

வெரவவலெ பாபமுலகுனு
லெவரவவலதும்மரணமுன்கு விஸ்வமூலோனன்
மருவவலெ பருல நிந்தெதனு
மருவவலென்சதுலசுதுல மஹிலோ வேமா.

(இ-ள்.) இவ்வுலகத்தினில் பாவங்களுக்குப் பயப்படவே ணும்; மரணத்திற்குப் பயப்படவேண்டாம்; அன்னியர்களை நிந்திப்பதை மறக்கவேண்டும்; மேலும் புத்திரமித்திராதிகளையும் மறக்கவேணும் வேமா! எ-று. (எகஉ)

லெவர்வலெ பாபமுல்குனு
லெவரவலலென்ருணமுல்குனு விஸ்வமூலோனன்
மருவவலெ பருலனேரமு
மருவங்கர்வலதுமேலு மூஹிலோ வேமா.

(இ-ள்.) பாவங்களைச் செய்வதற்கும் கடன்களுக்கும் பயப் படவேணும்; அன்னியர்கள் செய்த குற்றங்களை நீடித்து மனதில் வைக்காமல் அப்போதே மறந்துவிட்டு ஒருவர் செய்த அற்ப உபகாரமேனும் அதை மலையாக என்று மறக்காமலும் இவ்வுல கத்தில் வசிக்கவேணும்; வேமா! எ-று. (எகங)

பொருளுடைமை.

கலிமிகலிகெனேனி காமுனிகாஜ—டச்சு
லேமிசேதஜிக்கி லேவலேனி
மதனுவன்டிவானி மாலகா ஜூ-ஒது
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பொருளுண்டானவனை மன்மதனைப் போலவும் பொருளில்லாமையினால் இளைத்து யெழுந்திருக்கச் சத்தியற்ற மன்மதனையொத்த ரூபமுடையவனாகி யிருக்கினும் அவனைப் பஞ்சமனைப்போலவும் காண்பார்கள் உலகத்திலுள்ள மனிதர்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எகச)

கலிமிசகலமைமன குலமுலிகக்குவா
கலிமிலோகபாக்கிய மூலகுமினளவு
கலிமிலெனிவானி குலமேமி குலமயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தாழ்ந்த குலத்தனுகிலும் பொருளுண்டானவனு கில் அவன் சகல குலங்களுக்கும் மேலான குலத்தனும்; மேலான குலத்திற் பிறந்தவனுகிலும் பொருளில்லாதவனுகில் அவனுடைய குலமென்ன குலமாகுமையா? சர்வ வியாபியா கிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எகஙி)

கலிகினட்டியுண்டு கலுகக யுண்டுனு
மரியுலேகபோவு திரிகிகலுகு
கலிமினச்சட்டஜ-டு கானகசெடுதரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பொருளுண்டானதைப்போ லிருக்கும் சிலருக்குப் பொருளுண்டாகாமலிருக்கும், சிலருக்கு அப்பொருள் மறுபடியு மில்லாமற் போருந் திரும்பவும் உண்டாகும், அப்பொருளை யெங்கும் பார்க்கக்காணமற் கெடுவார்களிவ்வுலகத்தினர்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எகஉ)

கலிமிநாடுமகனி காமுனிகாஜ-டச்சு
லெமிஜிக்குநாடு லெவகுண்டு
முசலிமகனிகின மூங்துசம்பகஜ-டச்சு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உண்டானபோது கணவனை முன்மதனைப் போல வெண்ணிப் பலவாறு உபசரித்து மரியாதை பழுதின்றி நடப் பள்; பொருளில்லாதபோது மரியாதையின்றிக் கிழமனுளனு லும் அவனைக் கொல்லப் பார்ப்பள். சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எகஎ)

பூர்வவாசனகல புண்யாத்யமுகல்மெபுடு
வூட்டசெலமரீதி வூருசுண்டு

பெந்தரிகொசகினனு பெப்பட்டியட்டுண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பூர்வ்வாசனையினா லுண்டாகிய புண்ணியவானுடைய பொருளெப்போதும் ஊற்று ஜலத்தைப்போல ஊறிக் கொண்டிருக்கும்; அப்பொருளை யெத்தனை பேர்களுக்கு அளித்த போதிலும் அப்புண்ணியவானுடைய பொருளானது கிஞ்சித் தேனுங் குறைவுபடாம லெப்போதும் போலவே பூர்ணமாக விருக்கும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று.

## இல்லாமை.

பரகலேமிசேத பந்துவுல் பகவாரு
பரகலேமிசேத பரமு தப்பு
பரகலேமிசேத பரதத்வமுனு தப்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இல்லாமையினாலே பந்துக்களெல்லாம் பகையாளிகளாகும்; அந்த இல்லாமையினாலேயே பரமும் தப்புவதன்றியும் பரதத்துவமும் தப்பிப்போகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (எகக)

பேதரிக மெந்ததோஷம்
பேதோயி ஜகதிலோன மீஸ்வருடெருகுன்
பேதனு பொடகனு வாடனு
காதனி சபமனுச்சு ஜகச்சு கதரா வேமா.

(இ-ள்.) ஏழ்மைத்தன மெவ்வளவு தோஷத்தினாலுண்டாகியதோ அதை இந்த ஜகத்திற்குள்ளாக சிவபெருமானறிவனே யன்றி மற்றவர்களாலறியலாகுமோ? அப்படிப்பட்ட யேழையைப் பார்த்த பொருளாளி யவனை உயிருடையவனல்ல சவமென்று காண்பனல்லவா? வேமா! எ-று. (அ00)

தனமுலேமினனு தாவானலம்புன
தன்னிஜெருச்சனுதரி தாபுஜெருச்சி

தனமுலேலமிச்குட்டு தலசனே பாபம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பொருளில்லாதபடியால் அன்னுளிலுண்டாகும் விசனுக்கினியானது தன்னைக் கெடுப்பதன்றியும், நிலையையுஞ் சமீபத்தையுங் கெடுக்கும்; அப்பொருளில்லாமையைப் பார்க்கவும் நினைக்கவும் பாவமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ0க)

தனமே மூலமு ஜகதிகி
தனமே மூலம்புசகல தர்மம்புலகுன்
குணமே மூலமு சிருலகு
மனமே மூலம்புமுக்தி மஹிமகு வேமா.

(இ-ள்.) உலகத்திற்குப் பொருளே மூலமாகும்; சகல தருமங்களுக்கும் பொருளே மூலமாகும்; பொருளுண்டாவதற்கு நற்குணமே மூலமாகும், மகிமை பொருந்திய முக்தியை யடைவதற்கு மனமே மூலமாகும் வேமா! எ-று. (அ0உ)

தனகுலேலமினடு தைவமு தூருனு
தனகு கல்கெனேனி தைவமேல
தனகுதைவமுனகு தகலாட்டமா கொந்த
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தனக்குப் பொருளில்லாத நாளில தெய்வத்தைத் தூஷிப்பன்; பொருளுண்டாகுமாகில் தெய்வத்தை நினைக்கான்; அந்தத் தெய்வத்திற்குந் தனக்குமேனோ சிறிதுகஷ்டம்? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ0௩)

மைலகோகதோட மாசின தலதோட
யொடலுமுரிகி தோடனுண்டெனேனி
யதிக குலஜுடைன யட்டிட்டு பில்வரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மலின வஸ்திரத்துடனும் அழுக்குச் சேர்ந்த தலையுடனும் தேகத்திலழுக்குடனு மிருப்பனேயாகில் அவன் மேற்

குலத்தனுகிலும் அவனை அப்படிவா இப்படிபோவென்றும் அழைக்கமாட்டார்கள் பொருளுடையவர்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ0௪)

லேதுலேதட்டன்ன லேதுலேதேலேது
காதுகாதட்டன்ன காதுகாது
தோடுதோடட்டன்ன தோடனே தோடௌனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இல்லையில்லை யென்றாலது யில்லவேயில்லை; ஆகாது ஆகாதென்றாலது ஆகவே ஆகாது; அன்றியும் துணை துணையென்றாலது வுடனே துணையாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ0௫)

க்ராசலேமிசேத கடுகஷ்டமையுன்ன
வித்யயேல நிலுச்சு வீலுபோக
பசிகுண்ட நீள்ளு பட்டின நிலுச்சுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) புசிப்புக்கில்லாமையினாலே மெத்த கஷ்டமாகி யிருந்தால் மறந்துபோகாமல் கல்வியேதுக்கு நிற்கும்; அஃதெப்படி யெனில் பச்சை பாண்டத்தில் பிடித்த தண்ணீரானது நிற்குமா; நில்லாதது போலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ0௬)

அண்டலேனிநருடு அதிதார்மிகுனி யில்லு
ஜேரவலய ப்ரதுக ஜேயுநதடு
ஆவிபீஷணுனகு நதிகௌரவம்புன
பூதலமுனராமு ரீதி வேமா.

(இ-ள்.) நிற்க நிழலில்லாதமனிதன் மெத்த தருமவானுடைய வீட்டைச் சேரவேணும்; அப்படிச் சேர்ந்த யேழையை யந்த தருமவான் ஆதரித்துக் காப்பாற்றுவன்; அஃதெப்படி யெனில் இப்பூதலத்தில் ஸ்ரீராமரைச் சரணமடைந்து இலங்கைப் பட்டமும் அபயஸ்தமும் பெற்ற வீபீஷணரைப் போலாகும்; வேமா! எ-று. (அ0௭)

விருடைனலேது வித்யநேர்சினலேது
சதுவுலந்துலேது சட்டலலேது
ஜன்மபலமெமானி ஜபியிஞ்சினலேது
விஸ்வதாபி ராம வினர வேமா. ௪

(இ-ள்.) சுத்த வீரனாலுமில்லை, கல்வி கற்றவனாலு மில்லை. வாசிப்பினிடத்திலுமில்லை; நற்குணத்தினாலுமில்லை, பல வருடங்கள் ஜபஞ்செய்தபோதிலுமில்லை, முன்னர்தான் செய்த புண்ணியத்திற்குத் தக்கபடி ஜன்மமும் பொருளும் உண்டா கும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ௦

இக்கியுன்னவேள சிம்ஹம்புநைனனு
பக்ககுக்கஜேரி பாதஜேயு
பலிமிலேனிவேள யந்தம்பு ஜெல்லது
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மிருகங்களுக்கு அரசனாகிய சிங்கமானது காலவித் தியாசத்தினால் பலமொடுங்கி யிளைத்திருக்குமாகில் அந்த வேளை யில் அற்பபலமுடைய நாயானது அச்சிங்கத்தினருகிற் சென்று அதைப் பாதைப்படுத்தும்; அஃதெப்படியெனில் வீரனாகியிருந்த போதிலும் தனக்குப் பலமொடுங்கின காலத்தில் புத்தியுஞ் செல்லமாட்டாது; சர்வவியாபியாகிய ஓராமா! கேளும் வேமா!

பிழைப்பு

ப்ரதுகு நித்யமனுச்சு பதருச்சு வகமீர
விர்ரவீகுவாரு வெர்ரிவாரு
ப்ராணுலெல்ல யமுனி பாரிகொர்ரெலு சுமீ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பிழைப்பு என்றும் அழியாததென்று அளவில்லா மல் கர்வித்துத் திரியுமவர்கள் பயித்தியக்காரர்கள்; ஏனெனில் பிராணிகளெல்லவரும் யமனுடைய பெருத்த ஆகாரமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௮௪௰)

வேதசாஸ்த்ரமுலனு வினமேனமிகுடிச்சிரி
யரிதிதிரிகிசத்து ரந்தரட்ஞு
ப்ரம்மமகிமதெலசி ப்ரதுகுட்ட நீஜமுரா
விஸ்வதாபி ராம் வினர வேமா.

(இ-ள்.) வேதசாஸ்திரங்களைக் கேழ்க்க எது கிடைக்கும் என்று அதுகளைவிட்டு வயிற்றுக் கிரைதேடிப் புசித்துத் திரிந்து மரணமடைவர்கள்; அதுபோலப் பிரமத்தின் மகத்துவந் தெரிந்து பிழைப்பதரிதாகுமையா; சர்வ வியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று. (அகக)

ப்ரதுகுல ஸ்ரதிமனி ப்ராவிம்பகாலேரு
கிர்ரவீகெதுத்ர வெர்ரிவாட்ர
ப்ராணமெல்ல யமுனி பாரிகொர்ரெனுசுமீ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இவ்வுலகவாழ்க்கை அனித்தியமென்று கருதி நித்தியப் பொருளைக்கண்டு தெளிவடையமாட்டார்கள் மனிதர்கள்; அந்த வனித்தியத்தையே நம்பி கர்வங்கொண்டு திரியும் பயித்தியக்காரர்களே! உங்கள் பிராணன் யாவும் யமனுடைய பெருத்த ஆட்டுக்கடாக்களாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அகஉ)

தானதர்மமுலனு தகரேபுநேடனி
காலவ்யமுசேத கஷ்டநருடு
தானு யேமியெளனோ தனப்ரதுகேமௌனோ
மாயதெலியலேரு மஹினி வேமா.

(இ-ள்.) தானதருமங்களைச் செய்ய இன்றைக்கு நாளைக் கென்று வீண்காலத்தைப் போக்கும் லோபியாகிய நரன் தான் யேதாவனோ தன் பிழைப்புமேதாகுமோ? அந்த மாயையைத் தெரிந்துகொள்ளார்கள் இவ்வுலகத்தில்; வேமா! எ-று. (அகங)

ப்ரதுகுவாரலெவரு ப்ரதுககுண்டெடெவரு
ப்ரதிகிப்ரதுகலேனி ப்ராணுலெவரு

செலகி நீவுநீலோ ஷிரமுகா ஜடோரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பிழைக்கும்படியானவர்கள் யாவர்? பிழைக்காமலி ருப்பவர்கள் யாவர்? பிழைத்தும் பிழைக்கமாட்டார்த பிராணி கள் யாவர்? இதுகளை உனக்குள்ளே நீ திறமாகப் பாரும் சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அகஎ)

கதமுகுதமண்டெ கதுகுட்ட கஷ்டம்பு
நடுச்சுகாலமெல்ல நம்மராது
க்ஷணமுலோனேப்ரதுகு சம்சாரவிப்ராந்தி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பூர்வ விவகாரத்தைக் காணலாமென்றால் அது கஷ்டமாகும்; நிகழுங் காலத்தையெல்லாம் நம்பலாகாது; சம் சாரத்தில் பிரியம் வைத்திருப்பது கணநேரத்தின் பிழைப்பா கும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

## உயர்வு.

தனகுசேஜயுமேலு தாதெலியகனேர்ச்சு
நெலமிதோடகுக்க யெருகபுனி
தனகுசேஜயுமேலு தாதெலியகலேனி
மனுஜாடெந்தகலடு மஹினிவேமா.

(இ-ள்.) நாயானது தனக்கு அன்னியர்கள் செய்த மேன் மையை நன்றாய்த் தெரியக் கற்றுத் தெளிவடைந்து அவர்களி டத்தில் விசுவாசம்வைத்து நடக்கும்; அதுபோல மனிதனுக்குச் செய்த உபகாரத்தை மறந்து நன்றிவுணராத மனிதனெவ்வளவு அற்பனாகுவன் இவ்வுலகத்தில்; வேமா! எ-று. (அகக)

## தாழ்வு.

ஹிம்சஜேயுவாடு யிலலோனணக்ஞானி
ஹிம்சஜேயகுன்ன ஹீனுடகுனு

ஹிம்சஹிம்சபரசு யிலலோனசுக்ஞானி
விஸ்வ்தாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஜீவவதை செய்யுமவன் இவ்வுலகத்தி லக்ஞானி யாகும்; துஷ்டர்களை வதைசெய்யாமலிருக்கில் அவன்மீனனு கும்; ஆறு துர்க்குணங்களையும் பிடித்து வதை செய்யுமவன் நல்ல ஞானியாகும்; சர்வ வியாபியாகிய ஒ ராமா! கேளும் வேமா! எ-று. (அகஎ)

ஹிம்சலன்னிமானி ஹிதுவைடஜனுடுசும்
சாரரோகியகுச்சு சேரவலயு
புடமபண்டுரீதி பொசகினகல்குன
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இம்சைக ளனத்தையும் நீக்கிச் சம்சாரத்தில் வெறுப்படைந்து பரப்பிரமத்தினிடஞ் சேரவேணும். அப்படிச் சேராமல் சுக்கம்பழத்தைப்போல் பொருத்தமாகி யிருந்தாலும் அப்பரப்பிரமத்தின் சேவையுண்டாகும்? சர்வ வியாபியாகிய ஒ ராமா! கேளும் வேமா! எ-று. (அகஅ)

செட்டவானிமிகுல ஜெருச்சுனுதைவம்பு
அட்டபட்டுவானி காபதைன
செட்டதைனயட்டி சேனிகிபொங்கலீ
பெட்டுநெட்டரரெட்டி ப்ருதிவி வேமா.

(இ-ள்.) இவ்வுலகத்தில் தெய்வம் கெட்டவனை மெத்தகஷ்டமடையச் செய்யும்; அவனுக்கு ஆபத்துண்டாகில் ஆதரிக்க மாட்டாது; அஃதெப்படி யெனில் கெட்டதாகிய கழனிக்கு ரெட்டியானவன் பொங்கலிடுவனோ? இடான்; அதுபோல துஷ்டனைப் பகவான் கிருபைசெய்ய மாட்டான்; வேமா! எ-று. ()

வேருபுருகுஜேரி வ்ருக்ஷம்பு ஜெருச்சுனு
சீடபுருகுஜேரி செட்டஜெருச்சு

குஸ்தி துண்டுஜேரி குணவந்து ஜெருச்சுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வேற்புழுவுசேர்ந்து மரத்தைக் கெடுக்கும்; சீடைப்புழுவுசேர்ந்து செடியைக்கெடுக்கும்; அதுபோல துர்க்குணமுடையவன்சேர்ந்து குணவானைக்கெடுப்பன்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ௨௦)

ஒக்னிஜெரிசெதமனி வுல்லமந்தெந்து
தமதிசேடெருக்கு தரனுநெருனு
தம்முஜெருக்குவாடு தைவம்புகாதகோ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உலகத்திலுள்ள மனிதர்கள் தங்களுக்கு நேரிடுங் கெடுதியை உணராமல் ஒருவனைக் கெடுக்கிறேனென்று உள்ளத்தினி லெண்ணுவார்கள்; தங்களைக்கெடுப்பவன் தெய்வமல்லவோ? இதையுணராமல் நாமென்று கர்வித்துத் திரிகிறார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ௨௧)

செருகுதோட்டசக்க சேயராகுன்னனு
கொந்தயைன தானி குணமுசெடது
பெருகுவானிவந்த பொட்டவாடுன்னட்லு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) கரும்பு தோட்டத்தைச் சீர்திருத்தாமலிருக்கினும் அக்கரும்பின் குணஞ் சிறிதேனுங்கெடாது; அஃதெப்படியெனில் பொதிமாட்டுக்காரனிடத்தில் ஒட்டனிருந்ததைப் போலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று.

கைகபுட்டிசெரிசெ காகுஸ்துபட்டம்பு
சீதபுட்டிலங்க ஜெரிசெமுனனு
செப்பராதுகானி சித்ராங்கி செரிசெரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) கைகையானவள் பிறந்து ஸ்ரீராமர் பட்டந்தரிப்பதைக் கெடுத்தாள்! சீதையானவள் பிறந்து லங்கையைக் கெடுத்

தாள்; சித்திராங்கி பிறந்து சாரங்கதரனைக் கெடுத்தாளையா; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ௨௫)

பூபதி க்ருபஸம்பதி பூமி ஜெருச்சுவாடு
ப்ரஜலகோடு தாகி ப்ரதுகயோடு
யெக்ரவைச்சுபந்தி யென்னாள்ளு நிலுச்சுரா
விஸ்வதாபி ராம விநுர வேமா.

(இ-ள்.) அரசனுடைய நேசத்தை நம்பி வெகுகாலத்தைக் கெடுப்பவன் குடிகள் மனோதுக்கப்பட்டுப் பிழைப்பதில்லை; அஃதெப்படியெனில் மேலே விட்டெறிந்த பந்தானது கீழே விழாமல் எத்தனை நாள் நிற்கும்? உடனே விழுவதைப்போலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ௨௬)

சேட்டுவச்செனேனி செடனூடு தைவம்பு
மேலுவச்செனேனி மெச்சுகண்டு
மேலுசேட்டவரிகி மேகொன்ன கர்மம்பு
விஸ்வதாபி ராம விநுர வேமா.

(இ-ள்.) ஒருவனுக்குக் கெடுதி வருமேயாகில் தெய்வத்தைப் பலவாறு அவிப்பன்; நன்மை வருமேயாகில் தெய்வத்தை மெச்சிக்கொண்டிருப்பன்; ஆகையால் நன்மையுந் தீமையும் யாவருக்கும் பூர்வத்திற் செய்த கர்மமாகும்; இதையறியாமல் தெய்வ அவஷணை செய்வது அஞ்ஞானமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ௨௭)

கருணிசுதுலு தனமு தான்யம்பு சம்பத
யெந்தசுட்டு கோனின யந்தசேட்டு
பசிரிகாயபுருகு பக்ததினி காணரா
விஸ்வதாபி ராம விநுர வேமா.

(இ-ள்.) புத்திரகளத்திர தனம் தானியம் சம்பத்து முதலானதுகளும் ஒரு மனிதனையெவ்வளவு சுத்திக்கொண்ட போதிலுங் அவ்வளவுங் கெடுதியாகும்; அஃதெப்படியெனில் பசிருக்

தாயையும் மலபுழுக்கள் அரித்ததைப்போலாம்; சர்வ வியாபியா கிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௮௨௬)

ப்ரஜயொனர்ச்சுசெட்ட ப்ரபுவுனுகேவச்சு
ப்ரபுவுமகஞ்சிகொந்த ப்ரஜ்குசகமு
ப்ரபுவொனர்ச்சு செட்ட ப்ரஜலகு ராதுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) குடிகள் செய்யும் பாவத்தில் பாதி அந்நாட்டை யாளும் அரசனைச்சேரும்; அவ்வரசன் செய்யும் புண்ணியத்தில் பாதி குடிகளைச்சேரும்; அந்தவரசன்செய்யும் பாவமாத்திரம் குடிகளைச் சேரமாட்டாது; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௮௨௭)

அதிகமூலஜ்ஞானதோட ணக்னுலதோட்டனு
பருவுகுருதெரிங்கி பலுககுன்ன
வச்சுமெட்டதனமு வெஹச்சுகா காம்பீர்ய
ஹானிவச்சு தனகு னபுடு வேமா.

(இ-ள்.) மேலான குலத்தோனுடனும் அஞ்ஞானிகளுட னும் யோக்கியதையை யறிந்து பேசாமலிருந்தால் உடனே கெடுதியும் மரியாதைத்தாழ்வும் தனக்கு அப்போதே வரும். வேமா! எ-று. (௮௨௮)

சதியொனர்ச்சு செட்ட பதிகவஸ்யமு வச்சு
பதியொனர்ச்சு மஞ்சி சதிகி சகமு
சதியொனர்ச்சு மஞ்சி பதிகேல ராதுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மனைவிசெய்த பாவத்தில் பாதி அத்தியமாக மணா ளனைச் சேரும்; மணவாளன் செய்த புண்ணியத்தில் பாதி மனை வியைச்சேரும்; ஆகையால் மனைவிசெய்த புண்ணியத்தில் பாதி மணாளனுக்கேன் வரமாட்டாதோ? சர்வவியாபியாகிய ஓராமா! கேளும் வேமா! எ-று. (௮௨௯)

சம்பநுன்னராஜு சனுவக்கலமுசேயு
செரபநுன்னவாடு செரிமிசேயு
கரவநுன்னபாமு கெரிதாச்சு கொனியுண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஒருவனைக் கொல்லவிருக்கும் அரசன் அவனை
மெத்த நட்புகொள்வன், கெடுக்க வெண்ணங்கொண்டிருப்பவன்
அவனுடன் மிகவும் நேசஞ்செய்வன்; கடிக்க வெண்ணங்கொண்
டிருக்கும் பாம்பானது வளையி லொளித்துக்கொண்டிருக்கும்;
சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஉ0)

தொர்ரிவானிமிகுல் தீர்க்கதிவனலீகு
வெர்ரிவானிமாட்ட வினகராது
வெர்ரிகுக்கபட்டி வேட்டாடவச்சுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அவயவயீனனுக்கு மெத்த விசாலமாக ஆசீர்வாதங்
கொடுக்கவேண்டாம், பயித்தியக்காரன் வார்த்தையைக்கேழ்க்க
லாகாது; அஃதெப்படியெனில் பயித்தியம் பிடித்த நாயைக்
கொண்டு வேட்டையாட வருமா? வராததுபோலாம்; சர்வ
வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஉக)

கல்லலாடுவானி க்ராமகர்த்தயெருங்கு
சத்யமாடுவானி ஸ்வாமியெருகு
பெக்குதிண்டிபோது பெண்ளாமு யெருகுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பொய் பேசுமவனுடைய நிலைமையை அந்தக்கிரா
மாதிகாரி அறிவன்; மெய் பேசுமவனுடைய நிலைமையைப் பக
வானறிவன்; பெருத்த தீனித் தின்பவனுடைய நிலைமையை
அவன் மனைவியறிவள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும்
வேமா! எ-று. (அஉஉ)

கல்லமாடகண்டெ கஷ்டம்புமரிலேது
கஷ்டமெபுடுநொகிலி கலிகியுண்டு

த்விஜ டெருனுட்டஜ டெ திம்மிரிதனமிதி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பொய் வார்த்தைக்காகிலும் வேறு கஷ்டமொன்று மில்லை; எப்போதும் அந்தக் கஷ்டமானது மனிதனுக்குண்டாகி யிருக்கும்; அப்படிப்பட்ட மனிதனைப் பிராம்மணனென்று பார்ப்பது தெளிவற்ற தனமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஙக)

கல்லுத்ராகுவாடு கல்லு முச்சுனுகாது
கல்லலாடுவாடு க்ல்லுமுச்சு
கல்லுத்ராகுடகண்டெ கல்லலாடுட கீடு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) கள்ளைக் குடிப்பவன் திருடனல்லன்; பொய் பேசுமவன் கள் திருடனாகும்; ஆகையால் கள்ளைக் குடிப்பதற்காகிலும் பொய் பேசுவது கெடுதியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஙச)

கல்லலனுபலிகெடு நருலகு
தெல்லமிகாப்ரம்மவித்ய தெலுபுடயெல்லன்
சல்லனு பாலுனு கலிபின
சல்லகுதோட்டண்டிநட்ளு ஸஹஜமு வேமா.

(இ-ள்.) பொய்பேசும் மனிதர்களுக்குப் பிரமவித்தையாவும் விவரித்து வெள்ளையாகத் தெரிவிப்பது எப்படியாமெனில் பாலுடன் மோரைக்கலந்தால் அந்தப்பாலானது இயற்கையிலேயே மோருக்குத் துணைப்பற்றியதைப் போலாகும்; வேமா! எ-று. (அஙரு)

ஆடிதப்புவார லபிமான ஹீனுலு
கோடெருகனிவாடு கொத்திகாடு
கூடிகிடுசேயு க்ரூருண்டு தலபோயு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சொல்லிச் சேர்வடைந்தவர்கள் அபிமானயில்லாத ஈனர்களாகும்; துக்கத்தை யறியாதவன் அற்பனாகும்; கூடி

நேசித்திருந்து கெடுதிசெய்யுமவன் கடின சித்தமுண்டாய்க் கசாயிக் காரனுக்கு நிகராகும், சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அங்கூ)

தருச்சு கல்லலாடேட தரணிரா ஜுலயின்னா
வேளவேளலட்சுமி வெள்ளிபோவு
ஓட்டிகுண்டலோன னுண்டுனேநீரமு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அடிக்கடி விடாமல் பொய்சொல்லும் இவ்வுலகத் தரசர்கள் வீட்டைவிட்டு லட்சுமியானவள் வெளிப்புட்டுப்போ வள்; அஃதெப்படியெனில் ஓட்டைப்பானைக்குள்ளாக நீரிருக் குமா? இராததுபோலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று (அங்எ)

கல்லநிஜமுலெல்ல கரகண்டு டெருகுனு
நீருபல்லமெருகு நிஜமுகானு
தல்லிதானெருகுனு தனயுனிஜன்மம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மெய்பொய்கள் யாவும் நீலகண்ட திரிநேத்திர முடைய சிவபெருமானறிவர்; தண்ணீரான பள்ளத்தி னளவை யறியும்; அன்னையானவள் பிள்ளையின் ஜனனத்தையறிவள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அங்அ)

உண்மை.

நிஜமுவருசனெரிகி நித்யுண்டுகாவலெ
பலுகுலோனிபலுகு பதில்முகனு
பலுகுகூடனெவரோ பரிகிஞ்சி குடரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள். சொல்லுக்குள்ளே விளங்கும் சொல்லின் உண் மையை வரிசைக்கிரமமாகவறிந்து நித்தியனாகவேணும்; அந்த அருமையான சொல்லைக்காண்பவர்கள் யாரவரோ? அதைப் பரி

சோதித்துப் பாராய்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௮௫௯)

நிஜமுலாடுவானி நித்திஞ்சு ஜகமெல்ல
நிஜமுலாடராது நீச்சுதோட
நிஜமெஜெப்பவலெ நிர்மலுலனுகூடி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உண்மைசொல்லுமவனை யிவ்வுலகமெல்லாம் நிந்திக்கும்; ஆதலால் நீச்சனுடன் உண்மையைப் பேசலாகாது; உண்மையை யாரிடத்தில் பேசவேணுமென்றால் நிர்மலமான மனத்தினருடன் கூடி உண்மையைச் சொல்லவேணும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௮௬0)

நிஜமுலாடுவாடு நிர்மலுண்டையுண்டு
நிஜமுலாடுவாடு நீதிபருடு
நிஜமு பல்ககுன்ன நீச்ச சண்டாலுண்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உண்மைப்பேசுமவன் நிர்மலனாகியிருப்பன்; அன்றியுமவன் நீதிமானாகும்; ஆகையால் உண்மையைப் பேசாமலிருக்கில் அவன் நீச்சனும் சண்டாளனுமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௮௬௧)

நிஜமுகல்லரெண்டு நீலகண்டெருங்கு
நிஜமுலாடகுன்ன நீதிதப்பு
நிஜமுலாடுநபுடு நீரூபமைவச்சு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பொய்யு மெய்யுமிரண்டையும் நீலகண்ட மகாதேவனறிவன்; அந்த உண்மையைப் பேசாமலிருக்கில் அவன் நீதியைக் கடந்தவனாகும்; ஆகையால் உண்மையைப் பேசும்போது நினது ரூபமாகி வருவன்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௮௬௨)

நிஜமூனு பலிகெடு நருலகு
பதிலமுகலதெந்துவானி பரலோகம்புன்
தரயெலுசண்டு நப்புடு
விதமுன ஈமரிதீனிபுலமு வேமன யெருகுன்

(இ-ள்.) உண்மையைப்பேசும் மனிதர்களுக்கு எவ்விடத்தி லும் கீர்த்தியுண்டாகும்; அன்றியும் பரலோகப் பிராப்தியாகும்; மேலும் வேமன்னு யோகியானவர் இவ்வுலகத்தையாண்டு கொண்டிருக்கும்போது பலவிதத்திலும் இதன் பலனையறிவார். சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ௪௩)

சத்தியம்.

சத்யமுகல ஹரிச்சந்த்ருடு
நித்யமுதாபொந்தியுண்டி நிலச்சுட்டயெந்தோ
ப்ருத்யுடவை தனமதிலோ
நித்யுண்டை நிலச்சிருடு சைபெனவேமா.

(இ-ள்.) சத்தியநெறிதவராத அரிச்சந்திரன் நித்தியத்தைத் தானடைந்திருந்த நிலைமையானது எவ்வளவோ சுகத்தைத்தந் தது; ஆகையால் தொண்டனாகித் தன் மனதிற்குள் நித்தியனாகி நின்று விளைவிற்பாரும்; வேமா! எ-று. (அ௪௪)

தாதஜேஜினட்டி தரஹிம்சகெல்லனு
வோப்பியுண்டனட்டி யுத்தமுண்டு
சகலஜனுலயந்து சத்யுண்டு தானையெ
விஸ்வதாபி ராமா வினர வேமா.

(இ-ள்.) இவ்வுலகத்தில் தந்தையானவன் செய்யும் கஷ்டங் களுக்குகெல்லாம் சகித்துப் பொருத்துக் கொண்டிருக்கும் படி யான அந்த உத்தமபுதல்வன் சகல ஜனங்களிலும் சத்தியவான் தானகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று.

புண்யபுருஷுடவீபு புண்டைன யிந்தலோ
வசுதலோனசால வார்த்தகெக்கு

பேதவாரியிண்ட பெண்ளெனெருகரு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இப்பூதலத்தில் புண்ணியவானு யிருப்பவனுக்கு முதலில் புண்ணுகில் உடனே சகலருமறிந்து வெகுவாக விசனப் படுவார்கள்; எளியவன் வீட்டில் கல்யாணமாகில் அதை யொரு வருங் கவனியார்கள்; சர்வவியாபியாகிய ஓ ராம! கேளும் வேமா!

பூமிமீதமஞ்சி புண்யலுலேகுன்ன
ஜகமுலேலவிவலுகு பகலுகானு
அந்ததருச்சுலேது ஆடகாடகுகானி
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இவ்வுலகத்தினில் நல்ல புண்ணியவான்களில்லா விடில் பகலிரவாக எப்படிக்காணப்படும்? புண்ணியவான்களிருப் பதிணுலேயே பகலென்றும் இரவென்றும், காணப்படுகின்றது; அவ்வவ்விடங்களிலும் அவ்வளவு குறைவிராது, எங்கும் சமமாக வே யிருக்கும்; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

பாவம்.

பாபமனகவேறே பரதேசமுனலேது
தானுசேஜயுபனுல தகிலியுண்டு
கர்மஜனுடுகாக கனுகலிகுண்டுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பாவமென்ருல் அது அன்னிய தேசத்தினிலில்லை, தான் செய்யுங் கெட்டகாரியங்களி லகப்பட்டிருக்கும்; அந்தப் பாவகர்மமாகி அக்கர்மத்திற் கட்டுபட்ட மனிதனல்லாமல் ஞானக் கண்ணுண்டாகி யிருப்பனே? இருக்கமாட்டான், சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ௯அ)

இசுகபொக்குராயி யினுமுனுதர்மம்பு
கசவுபோசனுகட்டி காளிவாடு

பண்ணு தோமின்ட்டி பரமாத்முகட்டமௌ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மணல் கிரி கல்லு இரும்பு வைக்கோல் காரைகட்டி முதலியவற்றால் தருமத்திற்கு விரோதமாக புல் விளக்கினால் பரமாத்மனுக்குத் தர்மம் குருக்காகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! (அ௨௧)

பூர்வஜன்மமுனனு புண்யம்பு சேயனி
பாபகர்மூடாச படினதனமு
வித்துனமதிகோய வெதகின கலுகுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) முன்ஜென்மத்தினில் புண்ணியஞ் செய்யாத பாவ கர்மன் திரவியத்தின்மீது அதிக ஆசைப்படுவனேயாகில் அம் பொருள் விரைபோட்டு அறுவிடை செய்யினும் பலவிடங்களில் மோடித் தேடினபோதிலு முண்டாகுமா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ௩௦)

கீமுவிடச்சிபெட்டி கிக்குருமனகுண்ட
ஜீவுவிடிச்சுவேள சிவுனிதலச்சு
மனசுநிகால்வகயுனு மாயசே பொரலெடு
பாபஜனுலகெச்சட்டி பரமு வேமா.

(இ-ள்.) தேகத்தைவிட்டு வார்த்தையடங்கி ஜீவன் விடும் வேளையில் சிவனை நினைக்காமலும் மனதில் துதிக்காமலு மாய் கையினாலே கட்டுப்பட்டுப் புரண்டுகொண்டிருக்கும்பாவிகளான ஜனங்களுக் கெவ்விடத்தில் பரமுண்டாகும்? வேமா! எ.று. ()

பாவமனகவேரே பரதேசமுனலேது
தானிசேயுபனுல தகிலியுண்டு
பாவமந்துசிவுனி பரிகிஞ்சியுண்டினு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உள்ளமென்றால் வேறு எந்தத்தேசத்திலு மில்லை; தான் செய்யும் வேலைகளி லகப்பட்டிருக்கும் அந்த உள்ளத்தி

னில் இவனைப் பரிசோதித்துக் கொண்டிருப்பதே மேலாகிய முக்தியாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா!

தா தஜனிஞ்செ கன்யகு
தாமூனுதண் ரியு குண்டகோளகுல்
மா தயரா்ன கூலிகினி
மக்குவத்ரௌ பதிகைன பா்த்தலுன்
க்ஞா தவஜம்பெ யாதருல
க்ஞானமுயெந்தட்டி சத்யமஞ்சு தா
பூதலமெல்ல பேருமன
பூமிலோஜெசெனு வெர்ரிவேமன

(இ-ள்.) கன்னிகைக்குப் பாட்டனுகிய பீஷ்மர் ஜன்மித்தார்; தந்தை முதலானவர்களும் வேதவியாசருக் குதித்தார்கள். தேவர்களைக்கூடி தங்களைப்பெற்றான்; த்ரௌபதிக்கு மணவாளர்களாகிய பஞ்சபாண்டவர்கள் யாதகர்களாகிய துரியோதனுதியர்களைக் கொன்றார்கள்; எதனாலே யென்றால், ஞானமென்னும் சத்திய நிலையில் நின்றபடியினாலே இப்பூதலம் யாவும் சந்தோஷிக்கும் கீர்த்தியை யடையும் பொருட்டு தருமந்தவராமற் செய்தார்; பயித்தியவேமன. எ-று. (அ௬௩)

குலமுநீருசேஜெசி குருவுனி வதியிஞ்சி
பொஸகயேனுகந்த பொங்கு பொங்கி
பேருதருமராஜ பெனுவேப விந்தயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) குலத்தை நீறுநீறாகச்செய்து குருவை வதைசெய்து யானையவ்வளவு பொருந்தும்படியான புளுவைப்புளுகும் அவன் பேரு தருமராஜா, அவனே பெருத்த வேப்பம் விதையாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அ௬௪)

## பிராப்தி.

ப்ராப்திகல்குசோட்ட பலமிச்சி தைவம்பு
பராப்திலேனிசோட்ட பலமுலேது

ப்ராப்திலேமி தனகு பரமாத்மு டெருகுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பிராப்தியுண்டாகு மிடத்தில் தெய்வம் பலனைத் தரும்; பிராப்தமில்லாத விடத்தில் பலனில்லை; தனக்குப் பிராப்தியில்லாததைப் பரமாத்மா அறிவார்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அகுஜ)

தனகுப்பிராப்திலேக தாதயிச்சுகடஞ்சு
னெருலதூருடெல்ல னேருபுத்தி
கலிமிலேனிதன கஷ்டமை தோச்சுரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தனக்குப் பிராப்தமில்லாதிருக்க தாதா கொடுப்பாரென்று கருதி வீணைக்கொண்டு திரிந்து அன்னியர்களை தூஷிப்பதெல்லாம் துர்ப்புத்தியினாலேயோ பொருளில்லாமையாலேயோ கஷ்டமாகித் தோன்றுமடா; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அகுக)

தனகுப்ராப்திலேக தாதயிவ்வடனுச்சு
தோஷபுத்திபொருல தூருடெல்ல
முகமுடொக் கெருக்க முகுரம்புதூரது
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தனக்குப் பிராப்தமில்லாமல் தாதா கொடா தென்றுணராமல் துர்ப்புத்தியினாலே அன்னியர்களைத் தூஷிப்பதெல்லாம் எப்படியாமெனில் முகத்தின் பள்ளத்தை யறியாமல் கண்ணாடியை தூஷிப்பதுபோலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அகுஎ)

இடனிவானிசேத னிப்பிஞ்சு தனப்ராப்தி
யிச்சுவானிசேத னிவ்வனியது
இய்யபுச்சுகொனுட்ட யிருவுருகர்த்தலா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தன்னுடைய பிராப்தியானது இடாதவனையும் இடச்செய்யும்; தனக்குப் பிராப்தியில்லாவிடில் கொடுக்கும்படி

யானவனும் கொடான்; கொடுக்கப் பெற்றுக்கொள்ள இருவர் கர்த்தர்களா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

தனப்ராப்தி தனகு னுண்டக
தன் துக்கமூலொருகனிஜூூச்சி தரலகனோலா
தனஜேயு முஞ்சிதனகே
தனகெவ்வருகீடுசேய தலச்சரு வேமா.

(இ-ள்.) தனக்குரிய பிராப்தி தனக்கிருக்கையில் அப்பிராப்திற்குத் தக்க துக்கத்தைப் பொருக்கமுடியாமல் ஒருவனைப் பார்த்து அவனுக்குள்ள சுகத்தைக் கண்டு பொறுமை கொள்வதேதுக்கு? தான் நன்மையை செய்வனேயாகில் தனக்கு நன்மையே யுண்டாகும்; எவர்களுந் தனக்குக்கெடுதிசெய்ய நினைக்கமாட்டார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

சிப்பபட்டஸ்வாதி சினுகு முத்யம்பாயெ
நீட்டபட்டசினுகு நீட்டகலசெ
ப்ராப்திகல்குசோட்ட பலமேல தப்புரா
விஸ்வதாபி ராமா வினர வேமா.

(இ-ள்.) ஸ்வாதி நக்ஷத்திரத்தின் மழைத்துளியானது சிப்பியில் விழுந்தமாத்திரத்திலது முத்தாயிற்று; தண்ணீரில் விழுந்த மழைத்துளியானது தண்ணீரிற் கலந்தது. அதுபோல பிராப்தியுண்டாகுமிடத்தில் பலமேதுக்கு தப்புமா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அகூ0)

எழுத்து.

வ்ராதகண்டெயெச்சு வரமீது தைவம்பு
சேதகண்டெஹெச்சு வ்ராதலேது
வ்ராதகஜூடகர்த்த சேதகுதாகர்த்த
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) தலையெழுத்துக்காகிலும் அதிக வரந்தராது தெய்வம்; செய்கைக்காகினு மதிக யெழுத்துமில்லை; அந்த யெழுத்

துக்குப் பிரமதேவன் கர்த்தா; செய்கைக்குத் தான் கர்த்தா; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! (அகூக)

ஆகுமீதி வ்ராத யக்தரிகினு தெலுசு
சேதிலோனி வ்ராத செப்பவச்சு
தோலுகிந்தி வ்ராத தொட்டவா டெருகுரா
விஸ்வதாபி ராம் வினுர வேமா.

(இ-ள்.) ஓலையின் மீதெழுதியவெழுத்து யாவருக்குந் தெரியும்; கைக்குளிருக்கு மெழுத்தைக் கண்டு சொல்லலாகும்; தோலுக்குக் கீழிருக்கும் மண்டையோட்டின் யெழுத்தைப் பிரமதேவனறிவன் சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அகூஉ)

நொசலுவ்ராயுவானி நொசலுகொஞ்சமுபட்ட
நொசலிகண்டெவானி நொசலிவ்ராத
நொசலிமீதிவ்ராத் நுலிமிதே போவுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) புருவமெழுதுமவன் புருவங் கொஞ்சம்; அந்தப் புருவத்திற்காகிலுமவன் எழுதிய எழுத்தைக் கண்டு பிடிக்கவும் தேய்க்கவும் ஆகுமா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அகூங)

தாரதத்தமுலனு தாம்ப்ரபு பலகலு
லாவுயுங்கரமுன லங்கெஜேசி
முடியுமீதனமரி முத்ரயுண்டங்கனு
னதிகோ சாசனம்பு னவ்னி வேமா.

(இ-ள்.) கன்னிகை தத்தம் புதல்வர் தத்தம், முதலான சகல தத்தங்களையும் செப்புப் பலகைகளில் கனத்த மோதிரங்களால் பிணை செய்து முடிந்து அதன்மீது முத்திரை யிருக்குமாகில் அதுவே இப்புவியில் சாசனமாகும்; வேமா! எ-று. ()

## விதி

விதிலேக ஜரக தனுச்சுனு
மதிலோபல யெபுடு தலச்சி மமதகுபுத்தின்
பொதலுச்சு விடுவக ஜாலெடு
யதியேசம்சாரபீஜ மனபடுவேமா.

(இ-ள்.) எந்தக் காரியமும் விதியில்லாமல் நடக்கமாட்டா தென்றும், எப்போதும் தன் மனதில் நினைத்த எய்யோதுந் தூரினன்ற ஆங்காரத்தை வகித்துக்கொண்டிருக்கும் தூர்ப்புத்தியை விடமாட்டாத அதுவே சம்சாரங் கிளப்பதற்கு விதையெனப்படும்; வேமா! எ-று. (அகூ௬)

விதிக்ருத மந்துரு யந்துரு
விதிவிதிகினி லெஸ்ஸயையே விஷ்ணுதிம்பன்
விதியந்து திவ்யராசுலு
விதிப்ரம்மமுதெலியதெலிய வெலயுர வேமா.

(இ-ள்.) பூர்வத்தில் செய்த சஞ்சிதகர்மத்தின்படி நடக்குமென்பார்கள் யாவரும்; அந்த விதியை விதிக்கும் மஹாவிஷ்ணுவைத் துதிக்க நன்றாயிற்று; அவ்விதியினிடத்தில் திவ்வியமான ராசிகளும் பரப்பிரமமும் தெரியத் தெரியப் பிரகாசிக்கும்; வேமா! எ-று. (அகூ௭)

## நல்லவர்கள்.

பாலகலயுநீரு பாலேயிராஜில்லு
னதியுபானயோக்ய மைனயட்லு
சாதுசஜ்ஜன்முல சாங்கத்யமுலசேத
மூடஜனுடுமுக்தி மொனயு வேமா.

(இ-ள்.) பாலிற்கலந்த நீரானது அப்பாலாகிவிளங்கும்; அதுபானத்திற்கு யோக்கியமாகியதைப்போல சாதுசஜ்ஜனங்

களுடைய சாங்கத்யஞ் செய்வதினாலே மூடமுனிதனும் முக்தியை யடைய முனிவன் வேமா! எ-று. (அகள)

மஞ்சிவாருலேரு மஹிமீத சூடங்க
கஷ்டுலெலந்தரைன கலருபுவினி
பசிடிலேதுதானி பதவெலந்தகத்தயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) இவ்வுலகின்மீது காண்பதற்கு நல்லோர்களில்லை, துஷ்டர்களைத்தவிரப் பேராகினுமுளர்; அஃதெப்படியெனில் பொன்னில்லையன்றிப் பதவிகளைத்தவிர யுளதய்யா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அகஅ)

## கேட்டவர்கள்.

காணிவானிதோட கலசிவர்த்திஞ்சின
ஹானிவச்சுனெந்த வானிகைன
தாட்டிகிந்தபாலு தாகினவிதமௌனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஆகாதவனுடன் கலந்து உறவாடினால் கெடுதி வந்து சம்பவிக்கும். அஃதெப்படியெனில் பனைமரத்தின் கீழே பால் குடித்ததைப் போலாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அகக)

காணிவானிசேத காசுவீசம்பிச்சி
வெண்டதிருகுவாடு வெர்ரிவாடு
பில்லிதின்னகோடி பிலிச்சின பலுகுனா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்) ஆகாதவன்கையில் வீசங் காசியைக்கொடுத்துவிட்டு அவன் பின்னே திரியுமவன் பயித்தியக்காரன்; அஃதெப்படி யெனில் பூனையானது தின்றுவிட்டக் கோழியை அழைத்தாலும் பேசுமா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

கானிவானிதோனு கலசிமெலகுசுன்ன
கானிவானிகாக கந்துரதனி
தாட்டிகிந்தபாலு தகினசந்தமெள
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) ஆகாதவனுடன் கலந்து உறவாடிக்கொண்டிருக்கு மவனையும் கெட்டவனுகவே யாவருமெண்ணுவார்கள்; அஃதெப்படியெனில் பனைமரத்தின் கீழே பால் குடித்ததைப்போலாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!, எ-று. ([illegible])

சுகம்.

சுகமுலெல்லமரிய சூடங்க துக்கமு
புண்யபாபமுலனு பூர்வகமுலு
கோரிகெலவிதொங்க கோரினசந்தம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) எல்லா சுகங்களையும் மேலும் மேலும் பார்க்கப் பார்க்க அச்சுகங்கள் யாவும் துக்கமாகி வந்து சம்பவிக்கும்; அன்றியும் பூர்வத்திற் செய்த புண்ணிய பாவங்களுக்கிணங்க சம்பவிக்கும்; அஃதெப்படியெனில் திருடனுனவன் அளவில்லாத கோரிக்கை கொண்டதைப்போலாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௮௭௨)

மொதலு சுகமு துக்க மூலமுலரயங்க
புண்யபாபமரய பூர்வகர்மி
பரககானுபோயி படிகலபட்டனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) சுகதுக்கமென்னு மிரண்டில் முதன்மையாகிய சுகத்தை ஆராய்ந்தனுபவித்துப்பார்க்க சுகமானது துக்கத்திற்கு மூலமாகும்; அஃதெப்படியெனில் ஒருவன் பூர்வத்திற் செய்த புண்ணியத்தை யனுபவித்து உடனே பாபசம்பவமாகியவன்

காலொழிந்து படுக்கையிலேயே கிடப்பதைப்போலாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௮௭௧)

முானினிமனெஜ மந்திராநந்துடெள
லோனுடொல்லநீர்த்வ லோகசுகமு
மாலவாடகுக்க மாம்சம்பு மானுனு
விஸ்ததாபி ராம வினர வேமா.

(இ-ள்.) மண் பெண் பொன்னென்னு மூவாசையில் மூழ்கி ஆனந்தத்தில் சொக்கியிருப்பவன் மேலுலக சுகத்தை ஆசிக்க மாட்டான்; அஃதெப்படியெனில் பறைச்சேரி நாயானது மாம சத்தினாசையை யொழிக்குமா? ஒழிக்காததுபோலாம்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (௮௭௨)

அல்பசுகமுலெல்ல னசிஞ்சு மனுஜுண்டு
பருளதுக்கமுலனு பாதபடுனு
பரசுகம்புனெரிகி ப்ரதுகங்கனேரடு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) அற்ப சுகங்கள் யாவற்றையும் ஆசிக்கும் மனிதனவன் பெருதுக்கங்களினாலே வேதனைப்படுவன்; அன்றியும் யாபப்பிரமத்தை யறியுஞ் சுகத்தைக் கருதிப் பிழைக்கும் வகையைக்கல்லான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா!

## துக்கம்.

புட்டுதுக்கமுலசெ ப்ரொத்தெல்ல துக்கம்பு
கிட்டுதுக்கமுலசெ க்ரூரகதினி
வனிகிதுக்கமுலசெ மரிலேது துக்கம்பு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பிறப்பது துக்கத்தினாலே வளர்வதுந் துக்கமே; பொருள் தேடுவதுந் துக்கமுமே பிராணனிருக்கும் பரியந்தந் துக்கமே; அப்பிராணன் நீங்கினவுடனே நரகத்தில் வசிக்குந்

துக்கத்திற்கு மிஞ்சின துக்கம் மற்றொன்றுவுமில்லை; சர்வ வியாபி யாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஎசு)

த்ராசுனு தரலோபட்டியு
வேசியுதாநெனுக்கநட்ட விவரிம்பங்கா
வீசம்பெக்குவ யைனனு
வாசரமுகநெனுக்கவங்க வசமகு வேமா.

(இ-ள்.) தராசைப்பிடித்து ஒரு தட்டில் குண்டும் மற்றொரு தட்டில் சரக்கும்போட்டுநிறுக்கில் அச்சரக்கில் வீசம் அதிகமான போதிலும் ஒருபக்கந் தாழ்ந்தும் மற்றொரு பக்கம் மேலுமாகி யிருக்கும்; வேமா! எ-று. (அஎஎ)

## வைப்பாட்டி.

லஞ்ஜலஞ்சலெல்ல லௌகிகதர்மான்
லஞ்சகாநிதெவ்வதெ ராஜ்யமந்து
லஞ்சகொடுகுப்ரம்ம வ்ராலெட்ளு வ்ராஸெரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வைப்பாட்டிகள் யாவரும் என்றால் லௌகிக தர்மத்தில் வைப்பாட்டியாகாதவள் யாவள்? இவ்வுலகத்தினில் வைப்பாட்டி மகனாகிய பிரம்மதேவன் அந்த வைப்பாட்டிகளுக்கு எப்படி எழுத்துக்களெழுதினனடா; சர்வவியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஎஅ)

லஞ்ஜதானியக்க லாலிஞ்சி முத்தாடு
பிண்டலாயலஞ்ஜ மீதிப்ரேம
ஆடதானிவங்க நந்தருசுட்டாலு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) வைப்பாட்டியின் தமக்கையும் புருஷனைப்பலவாறு சந்தோஷிக்கச் செய்து முத்தமிடுவள்; அந்த வைப்பாட்டியும் நாயகன்மீதிற் பிரியமுடையவளாயிருப்பாள்; ஆகையால் அம்

பெண்ணின் வம்சத்தினர் யாவரும் புந்துக்களாவார்கள்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஎக)

லஞ்ஜவிட்டுனிகுணமு லாலிஞ்சிகொனியாடு
லஞ்ஜவாரிதல்லி லஜ்ஜகடுபு
தல்லினி கலலஞ்ஜ தகலங்க தரமௌனெ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) விபசாரியானவள் விட புருஷன் குணங்களைப் பல வாறு சொல்லியவன் களிக்கும்படியாகக் கொண்டாடுவள்; அந்த விபசாரியின் அன்னையின் வயிறு லஜ்ஜையுடையதாகும்; அப் படிப்பட்ட அன்னையுடைய விபசாரி தனக்குக் கிடைக்கத்தரமா குமே; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. ()

பக்திநுன்னலஞ்ச பலுகது பிலிசின
யுக்திகாது ம்ருத்யு பகிதிநுண்டு
ம்ருத்யுவச்சுயில்லு ம்ருங்கக போவுனெ
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பக்தி செய்துகொண்டிருக்கும் விபசாரி அழைத்த போதிலும் பேசாள்; அவள் செய்வது பக்தியல்ல மிருத்யு தேவதையைப்போலிருப்பள்; அஃதெப்படியெனில் மிருத்யு தேவதை வந்த வீட்டிலிருக்கும் யாருடைய பிராணனையாகிலும் விழுங்காமற் போகுமோ? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஅக)

பூதுலேனி லஞ்ச பூதம்பு கூதுரு
ரீதிலேனிபோடு ராதிவேட்டு
தாதலேனிகொம்ப தையால கொம்பரா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பூச்சயவில்லாத விபசாரி பூதத்தின் குமாரியாகும்; லகுவில்லாத குத்துகல்லின்பேரில் சுட்ட துப்பாக்கி வேட்டுக்கு நிகராகும்; கொடையாளியில்லாத வீடு தெய்வங்காக்கும் வீட்டிற்

குச் சமானமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஅஉ)

ஒடலுபெஞ்சுலஞ்ஜ வ்யுசுயோகலகுனே
ஒக்கவிட்டுனிமீத யொரிகெநேனி
பந்திகொக்குமீத வடிகன்னுபட்டட்டு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) உடலைப் பெருக்கும்படி யோஷிக்கும் வியசாரி யானவள் அற்பயாக்குகளுக்காக ஒருவிட புருஷன்மீதிற் காய்வ ளேயாகில் அஃதெப்படியாமெனில் பெருச்சாளியின்மீது கல் மாரி பொழிந்ததைப்போலாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஅங)

நாண்யமெருகுலஞ்ஜ நதுசுகிடெருகுனு
விட்டுனிகுஸ்தரிஞ்சிச விதமெருங்கு
தாகிதோடிசெலிமி தரகொரகாதயா
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) நாணயமறிந்தவிபசாரி நன்று தீதறிவள்; அன்றி யும் சமயம் பார்த்து நாயகனைக் களிக்கச் செய்யும் விதத்தையு மறிவள்; ஆதலால் தாசியுடன் நேசிப்பது யிவ்வுலகத்தில் சரியல்ல வையா சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று.

ஜெர்த்துதொத்தேக்ானி ஜெரகாதுமிய்யான
ஹத்தகேலதானி கைனகுண்மு
பித்தி கூளதொங்க மேலெருக நேர்ச்சுனு
விஸ்வதாபி ராம வினர வேமா.

(இ-ள்.) பலபேர்களைக் கூடுமவள் சோரம்போவதை யென்று மறவாத சோர ஸ்திரீயேயன்றி அவளுக்கெத்தனை போதிக்கினும் தனக்குள்ள தூர்க்குணத்தை நீக்கி உத்தம குணத் தை யனுசரிக்கமாட்டாள்; அன்னியர் பொருளை யபகரிக்க விடா சிந்தனை செய்திருக்குந் திருடனுக்குத் தருமத்தைப்

போதிக்கினும் அதன் மேன்மையையறியக் கற்புனி கல்லான்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஅ௫)

தொத்துதோட்டிபொந்து தொரகெபுசலகிஞ்ஜ
௩ முச்சுதோட்டிபொந்து வச்சுநிங்தெ
தல்குமுப்புவச்சு தாலுதலாரிதோ
பொந்துசல்புதெலிசி புடமிவேமா.

(இ-ள்.) சோர ஸ்திரியுடன் நேசிப்பது மூளிப்பச்சைம் பயிறு கொட்டைக்கு நிகராம்; திருடனுடன் நேசிப்பதால் நிந்தனைவந்து சம்பவிக்கும்; தலையாரியுடன் நேசஞ்செய்து கொண்டிருக்கும் மங்கையின் தலைக்கே மூப்புவந்து சம்பவிக்கும் இவ்வுலகில், வேமா! எ-று. (அஅ௬)

தொத்துதோட்டிபொந்து தோஷம்புதோஷம்பு
௪ லஞ்ஜதோட்டிபொந்து லஜ்ஜசெடுனு
ஜாரதோட்டிசெலிமி சாவுகு மூலம்பு
விஸ்வதாபி ராம வினுர வேமா.

(இ-ள்.) விபசாரியுடன் கூடுவது பாவம் பாவம்; தாசியுடன் கூடுவது லஜ்ஜை கெட்டுப்போகும்; சம்சாரியுடன் கூடுவது சாவுக்கு மூலமாகும்; சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஅ௭)

கூலிதொத்துபொந்து குதுரெள குலாகுகே
ஸஜ்ஜ னுனிகிகாது சம்மதம்பு
பேடதின்ன புருகு பெல்லமெமெருகுரா
௫ விஸ்வதாபி ராம வினுர வேமா.

(இ-ள்.) அற்ப ஸ்திரியைக் கூடியிருப்பது கேவலத் தொழில் செய்யுமவனுக்கே தகுமன்றி சத்தாகிய உத்தமனுக்குச் சிறிதேனும் சம்மதமாகாது; அஃதெப்படியெனில் சாணியைத் தின்னும் புழுவு வெல்லத்தை யறியுமா? சர்வ வியாபியாகிய ஓ ராமா! கேளும் வேமா! எ-று. (அஅஅ)

